# ஸ்ரீமதி

ஓர்:

# தமிழ் நாடகம்

A

(Social Drama)

திருச்சிறுப்பள்ளியிலிருக்கும்

(First Grade Pleader)

**வக்கீல் எஸ். ராமஸ்வாமி அய்யர் பீ. ஏ**

அவர்களால் இயற்றப்பட்டது.

முதல் பதிப்பு.

TEPPAKULAM:

JEGAM & CO., DODSON PRESS.

1916

 விலை அணா 12. 

# நாடக பாத்திரங்கள்

1. சுந்தரய்யர்—ஓர் தனிகர்
2. நாகராஜய்யர்—ஓர் தனிகர்
3. சுந்தரராஜய்யர்—ஓர் தனிகர்
4. புருஷோத்தமன்—சுந்தரராஜய்யர் அண்ணன் மகன்
5. சந்த்ரசேகரன்—சுந்தரராஜய்யர் வேறு [அண்ணன் மகன்
6. சூரிய நாராயணன்—புருஷோத்தமன் [சிநேகிதன், தனிகன்
7. ராமநாதன்—சந்த்ரசேகரன் சிநேகிதன்
8. ப்ரதாபசிங்—போலீஸ் இன்ஸ்பெக்டர்
9. உக்ரவர்மன்—ஜயில் சூபரின்டெண்டன்ட்
10. கிரீசய்யர்—ஜட்ஜ்
11. ஸ்ரீமதி—நாகராஜய்யர் பெண்
12. சுந்தரி—ஸ்ரீமதியின் தோழி
13. கமலினி—சுந்தரய்யர் மனைவி
14. வேணி—சந்த்ரசேகரன் வைப்பு பெண்
15. ஷண்முகன்—சந்த்ரசேகரன் வேலையாள்
16. தயாகரன்—வேணியின் மீது ஆசையுள்ளவன்
17. விசுவேசுவரர்—பாங்கு மானேஜர்
18. பாரிஸ்டர்—கிருஷ்ணராவ்
19. பாரிஸ்டர்—சாமிநாதய்யர்

மற்ற பாத்திரங்கள் சமயம் போல்.

இடம்—ஸ்ரீரங்கநாதபுரம்.

# DEDICATED

TO

MY FELLOW-MEMBERS

OF THE

# RASIKA RANJANA SABAH

(THE RISING AMATEUR DRAMATIC ASSOCIATION

OF TRICHINOPOLY)

WITH WHOSE NOBLE ENDEAVOURS

TO PURIFY AND ELEVATE THE

INDIAN STAGE

AND CONTRIBUTE TO THE DEVELOPMENT OF THE

HISTRIONIC ART IN THE COUNTRY

THE AUTHOR HAS BEEN IN A HUMBLE MANNER

ASSOCIATED.

# PREFACE

AS a humble student of the Tamil literature I have been occasionally contributing serial stories and short dramas to journals. It was not my desire till now to put myself before the puplic in the position of an author and publish a book, but my friends in the Rasika Ranjana Sabah of Trichinopoly which has for its object the cultivation of the histrionic talent in the members and the bringing about of a true and correct appreciation of the stage, desired that I should come out with my publication which in their goodness they have encouraged me to think is good for publication and I could not afford to resist the advise of my fellow-workers in the field of the histrionic art and literature.

In bringing about this publication I have had before me the criticism that some dramas are readable but not stageable and that some are stageable but not readable, and I have tried to make my play both readable and stageable.

Social dramas of this kind present peculiar difficulties in being adapted for the stage and how far I have succeeded in my attempt the public will be able to judge.

This is my first attempt and I shall highly value criticism which will enable me to attempt further publications with success.

With a view to economise time, if desired, in staging this play, I have given a list of the portions which may be omitted.

My thanks are due to my friends of the Rasika Ranjana Sabah for the encouragement they have given me in this attempt and to Messrs Jegam & Co., Proprietors of the Dodson Press, Trichinopoly, for the prompt and expeditious manner in which they did the printing and for the neat execution of the book.

I shall be happy to give the necessary permission to stage this play to any one applying to me for it.

S. RAMASWAMI AIYAR.

**Portions which may be omitted, if desired, in staging this play.**

| Act. | Scene. | PORTION TO BE OMITTED. |
|---|---|---|
| I | 1 | Pages 1, 2, first 8 lines page 3, last 22 lines page 6. |
| | 5 | The whole. |
| | 6 | Last 7 lines page 28 and subsequent portions. |
| II | 2 | Last 29 lines page 38. |
| | 3 | The whole. |
| | 5 | Do. |
| | 6 | Last 21 lines page 47, page 48, first 10 lines page 49 |
| III | 2 | The whole. |
| | 4 | Do. |
| IV | 1 | Last 5 lines page 96. pages 97. 98, 99, and first 28 lines page 100. |
| | 2 | The whole. |
| | 3 | Last 25 lines page 106, page 107 and first 10 lines page 108. |
| | 4 | The whole. |
| | 5 | Do. |
| | 8 | Do. |
| V | 3 | Do. |
| | 5 | Do. |



உ

# ஸ்ரீமதி

## அங்கம் 1—காட்சி 1.

சுந்தரய்யர் வீடு. கலியாண ஊஞ்சல், கலியாண இறைச்சல், பெண் மாப்பிள்ளை ஊஞ்சலில் உட்கார்ந்திருக்கிறார்கள்.

**ஒருவர்.** சத்து, இதென்ன சந்தை இறைச்சல் போல், அம்மா ஏதாவது பாடக்கூடாதா.

**கமலினி.** விசாலம் நீ ஏதாவது பாடு.

**விசாலம்.** எனக்கு தொண்டை கட்டிக்கொண்டிருக்கிறதே மாமி.

**கம.** காமாக்ஷி நீ பாடேன்.

**காமா.** எனக்கு இரண்டு நாளாய் ஜொரம் மாமி.

(மறுபடி இறைச்சல்)

**பெரியவர்.** அம்மாபொண்ணு நீ பாடம்மா. உன் பாட்டு கர்னாடகமாயிருந்தாலும் இந்த காலத்து பெண்கள் ஆயிரம் பிகு செய்து கொண்டு, ஆருமுனியா ஜடாமுனியா அதொன்னை வைத்துக்கொண்டு துலுக்கன் பாட்டையும் பைராகி பாட்டையும் பாடுவதைவிட, நன்றாயிருக்கும்.

**அம்மாபொண்ணு.** (தான் ஒரு பக்கம் இழுக்க, ராகம் வேறு பக்கம் இழுக்க).

## பைரவி.

கங்கா தரங்க கமனீய ஜடாக லாபம்
கௌரீ நிரந்தர விபூஷித வாம பாகம்
நாராயண ப்ரிய மனங்கம தாபகாரம்
வாரணஸிபுரபதிம் பஜவிசுவநாதம்.

(மற்ற பெண்கள் ஒருவரை ஒருவர் பார்த்து சிரிக்கிறார்கள்)

[நாகராஜய்யர், சுந்தர ராஜய்யர், புருஷோத்தமன், சந்த்ரசேகரன் ராமநாதன் வருகிறார்கள். சுந்தரமய்யர் அவர்களை அழைத்து உட்கார வைக்கிறார்.]

(மறுபடி இறைச்சல்)

**சு.** அம்மா ஏன் இறைகிறீர்கள், யாராவது ஒருவர் பாடலாகாதா.

**கம.** மீனாக்ஷி நீ சங்கீதத்தில் சிக்ஷை பெத்தவளாச்சே எங்கே ஒரு பாட்டு பாடு.

**மீனா.** சாமி வேளகாதுரா.

**பெரியவர்.** சரி, சரி, சாமி இந்தவேளை ஆகாதுடா என்கிறாயே, அம்மா சகுனத்தடையாட்டமா.

**புருஷோ.** அது அவர்கள் பிசகல்ல தாதா. சங்கீதம் சொல்லிக் கொடுக்கிறவர்கள் பாட்டை அர்த்தத்தோடு சொல்லிக் கொடுத்திருக்கவேண்டும்.

**மீனா.** எல்லாம் கேலி பண்றாம்மா, நான் பாடமாட்டேன்.

**கம.** ஸ்ரீமதி நீ ஒரு பாட்டு பாடம்மா நீ நன்னா அர்த்தம் தெரிந்து பாடுவே.

**ஸ்ரீம.** (கங்காதரங்க, பாடுகிறாள், இறைச்சல் அடங்கி எல்லோரும் கேழ்க்கிறார்கள்).

**கம.** (ஊஞ்சல் முடிந்த பிறகு) அம்மா ஸ்ரீமதி ஒரு கப்பல பாட்டு பாடு

ஸ்ரீ. ஏலேலோ. ஏலேலோ ஏகரஸம், கோவிந்தா, ஸர்வரஸம், ப்ரும்மரஸம்—பஞ்சபூதப் பலகையை கப்பலாய் சேர்த்து, பாங்கான ஓங்காரம் பாய்மரம் நாட்டி, நெஞ்சுமனம் புத்தி ஆங்காரசித்தம், மானாபிமானம் கயிருகசேர்த்து, நஞ்சுண்ட கண்டரே நாதனடிக்குள், நல்வினையும், தீவினையும் நங்கூரம் போட்டு ப்ஞ்சாக்ஷரம் தன்னை உள்ளே நினைந்து பதினாலுலோகமும் பாய்மரம் கட்டி, ஸாமி ஏலேலோ—

சந். (தனிமையாய்) ராமா இப்பெண்மணி யார் உனக்குத் தெரியுமா.

ராம. எனக்குத் தெரியாது விஜாரித்து வருகிறேன் (போகிறான்) (புருஷோத்தமன், ஸ்ரீமதி ஒருவருக்கொருதர் ஜாடையாய் பார்த்துக்கொள்கிறார்கள்). புருஷோத்தமன் சந்தரசேகரன் சற்று வெளியே போய் வந்து இடம் மாறி உட்காருகிறார்கள்.

ராம. (திரும்பிவந்து, சந்த்ரசேகரன் என்று நினைத்து புருஷோத்தமனிடம் மெதுவாய்) நாகராஜர் பெண் ஸ்ரீமதி என்று பேர்.

புரு. என்னடா உளருகிறாய்.

ராம (நிமிர்ந்து, வெட்கத்துடன் சந்த்ரசேகரனிடம் போய்) என்னய்யா வேடிக்கை பண்ணுகிறீர்.

ச. ஏண்டா, நான் கேட்டால், அவனிடம் பதில் சொல்கிறாயே, என்ன பைத்தியமா உனக்கு.

ரா. எல்லாம் சகவாசதோஷந்தானே. நான் என்னசெய்கிறது. உம்மையார் இடம் மாறி உட்காரச்சொன்னது.

ச. இருந்தபோதிலும் பார்த்துப் பேசவேண்டாமா. நான் இருந்த இடத்தில் ஒரு பெண் உட்கார்ந்திருந்தால் அவளையும் நான் என்று கட்டிக்கொள்வாயோ.

ரா. தவறுதலால் கட்டிக்கொண்டால் என்ன, ஒரு கோபிகாஸ்த்ரீ க்ருஷ்ண பகவானை தியானம் பண்ணிக்கொண்டே

குடத்தை கீழே வைத்திருந்தவள் க்ருஷ்ணன் புல்லாங் குழல் நாதம் கேட்டவுடன் பரவசமாகி குடம் இருந்த இடத்தில் உட்கார்ந்திருந்த தன் பூருஷனை குடமென்று எடுத்து இடுப்பில் வைத்துக்கொண்டு போகவில்லையா.

[தாம்பூலம் கொடுக்கச் சொல்கிறார் சுந்தரமய்யர்].

புரு. (தனிமையாய்) இப்பெண்மணி இன்னாரென்று தெரிய எனக்கு ஆவலிருந்ததை பகவான் கண்டு எனக்கு தெரிவிக்க ராமனுதனை தூதனுப்பினார் போலும், ஆகா! என்ன அழகு, என்ன பார்வை, பாட்டுத்தான் என்ன அழகாய்ப் பாடுகிறாள். ஆ, நான் கிட்டாததை நினைத்து யோஜனை செய்து என்ன பலன், ஸ்ரீமதியோ வெகு பணக்காரி, மிக்க அழகுடையவள், எல்லா நற்குணங்களும் பொருந்தியவள். நானோ பரம ஏழை ஒன்றும் அறியாதவன், அழகுடையவனுமல்ல, அனேகம் அழகுள்ள பிரபுக்கள் உலகத்தில் இருக்க என்னை சிறிதும் அவள் லக்ஷ்யம் செய்வாளா. யாருக்கு இந்த ரத்னம் கிடைக்கப் போகிறதோ தெரியவில்லை. ஆகிலும் அவள் என்னை லக்ஷ்யம் செய்யாவிட்டாலும் என் மனது அவளிடம் சென்று விட்டதால் இனிவேறு பெண்ணை நான் கண்ணெடுத்தும் பார்ப்பதில்லை. ஆகா, இதென்ன இந்த இடத்தை விட்டு போகக்கூட மனம் வரவில்லையே. (கொஞ்சம் போகிறான்) என் தேகம் முன்னே போக, என் மனம் அவளை விட்டு வரமாட்டேனென்று பின்னிழுக்க, எதிர் காற்றில் கொண்டு போகப்படும் பட்டுக்கொடியின், கோல்போல் நான்போக வேண்டியிருக்கிறதே, என்ன செய்வேன் (போகிறான்).

சங். (தனிமையாய்) இப்பெண்ணைப் பார்த்தது முதல் எனக்கு ஒன்றும் ஓடவில்லை. கலியாணம் செய்தால் இப்படிப் பட்ட பெண்ணை கலியாணம் செய்துக்கொள்ள வேண்டும். மேலும் பணக்காரியாக இருப்பதால் நமக்கு சுகத்துக்கு குறைவில்லை. இவள் நிச்சயமாய் எனக்கு கிடைப்

பாளென்று தோன்றுகிறது. ஏனென்றால் அடிக்கடி அவள் என்னையே திரும்பி திரும்பி பார்த்தாள். உனக்கு எப்படி தோன்றுகிறது ராமா?

ராம. காமிகள் சுவபாவம் இப்படித்தான். ஒரு பெண் நடந்து கால் வலித்ததால் மெல்ல நடந்தால் அவளை பின் செல் லும் காமி நமக்காக மெள்ள நடக்கிறாளென்று நினைப் பான். சகி சரியாக நடந்து வரவில்லையே என்று அவளை பார்க்கத் திரும்பினால், தன்னைப் பார்ப்பதற்கு அவள் திரும்பினதாக நினைப்பான்.

சங். ஏண்டா முட்டாள் அவள் பாடுகிறபோது கூட என்னைப் பார்த்துக்கொண்டே தானே பாடினாள்.

ராம. ஆம் உங்கள் பக்கத்தில் ஒரு நாய் இருந்ததே அதைப் பார்த்துக்கொண்டும் பாடினாள். ஏது அவள் உம்மை வைதால் கூட, உம்மோடு பேசினதாக பெருமை கொள் வீர் போலிருக்கிறதே.

சங். நல்லது இருக்கட்டும், நான் இப்பெண்மணியை கலியாணம் செய்து உன்னை வெட்கத்தால் தலை குனியும்படி செய்கி றேன் பார்.

ராம. கலியாணம் ஒருவேளை பெண்ணின் துரதிர்ஷ்டத்தால் நடக்கலாம். அதை நான் மறுதலிக்கவில்லை. ஆகிலும் நீர் அவளை கலியாணம் செய்து கொள்வீரா, அல்லது அவள் உம்மை கலியாணம் செய்து கொள்வாளா. என்பதுதான் என் சந்தேகம்.

சங். நல்லது பார்ப்போம்வா. (போகிறான் ராமனுடன்)

சூரி. (தனிமையாக) இப்பெண்மணியைப்போல் அழகுள்ள வள் நாம் இதுவரையில் கண்டதில்லை. அழகுமட்டுமா, படிப்பு, பாட்டு, நற்குணம் எல்லாம் அவளிடத்தில் பொருந்தியிருக்கின்றன. உலகத்தில் அழகிருந்தால், குணமிராது, குணமிருந்தால் அழகிராது, எல்லாம் பொருந்தினதாயிருந்தால் கடவுளுக்கு பொருக்கிறதில்லை.

இவ்வுலகத்தைவிட்டே அழைத்துப் போய்விடுகிறுர். எல்லா யோக்யதையுமுள்ளவன் இழிவான தொழிலிலிருந்தாலும்கூட கூட்டிப்போய்விடுகிருர். இப்பெண் எனக்கு கிடைக்குமா. ஏது எனக்குத் தோன்றவில்லே. அவள் நோக்கத்தைப் பார்த்தால் என் சினேகிதன் புருஷோத்தமனை கவனித்தாளென்று தோன்றுகிறது. நல்லது, நம்மாலானமட்டும் அடைய ப்ரயத்னம் செய்வோம். பிறகு கடவுள் செயல் (போகிறுன்).

ச. எல்லோரும் தாம்பூலம் வாங்கிக்கொண்டு போகவேண்டும்.

**மாப்பிள்ளே.** (தன் சினேகிதனை பார்த்து) இதென்ன non-sense ராத்திரி தூக்கம் முழித்துக்கொண்டு நமக்குள் இதெல்லாம் மகா கெட்ட வழக்கம்.

**பெரியவர்.** மாப்பிளே, எங்கே. ஒட்டகச்சப்பலிலிருந்து இரங்கி வந்தேளோ? வந்த அவசரத்தில் சரிகைவேஷ்டி கூட பாதி கீழே விழுந்து விட்டதே.

**சினேகிதன்.** சரிகைவேஷ்டி போட்டுக்கொள்ள தெரியவில்லே. அவருடையதாயிருந்தால் போட்டுக்கொள்ளத் தெரியும். ஆகா இதென்ன வாய் உளருகிறது. வேஷ்டி அவரது தான், அவரது தான்.

**மாப்.** அடே போதும் நிறுத்து சீக்கிரம் ஆர்த்தி எடுக்கச் சொல். (வாத்யார் ஓதி வைக்கிருர்).

**பெரியவர்.** ஏண்டி அம்மா ஆர்த்தி எடுங்களேன். (பெண்டுகள் இறைச்சல்) சரி இனி ஆர்த்தி எடுக்கிறவர்கள் குழந்தைகளே நலம் எடுத்து வைத்து சீராட்டவேண்டும். அவர்களுக்கு 4 பேர் உபசாரம் செய்யவேண்டும்.

**இரண்டு பெண்கள்.** இல்லே தாதா. கோவிச்சுக்காதங்கோ இதோ வந்து விட்டோம்.

[ஆர்த்தி எடுக்க, மாப்பிள்ளே பெண் எழுந்திருந்து, எல்லோருடன் போகிருர்கள்].

## அங்கம் 1—காட்சி 2.

### சூரிய நாராயணன் வீடு.

[புருஷோத்தமன், சூரியநாராயணன் வருகிறார்கள்.]

புரு. சூர்ய, ஏதோ ஒரு மாதிரியாய் இருக்கிறாயே காரணம் என்ன.

சூரி. நான் உன்னைக் கேழ்க்கவேண்டிய கேள்வியை நீ என்னை கேழ்க்கிறாயோ.

புரு. சிநேகிதா என்னிடத்தில் நீ மறைப்பானேன். நீ சொல்லாமல் போனபோதிலும் கண்ணாடி போன்ற உன் முகம் உன் மனதிலிருப்பதை வெளியில் காட்டுகிறதே.

சூரி. ஆம் உன் முகத்தை அது காட்டுகிறது, அதற்குக் காரணம் நீ தான் சொல்லவேண்டும்.

புரு. சூர்யா, உன்னைப் பார்த்தால் மன்மதாவஸ்தையிலிருப்பவனென்று யாரும் சொல்லலாம்.

சூரி. அதை தற்காலம் அனுபவிப்பவர்களுக்கு அது தெரியுமேயல்லாது எல்லோருக்கும் தெரியுமா.

புரு. என்ன இப்படிச் சொல்லுகிறாய். நான் இதுவரையில் எந்தப்பெண்ணையாவது கண்ணெடுத்து பார்த்திருப்பேனா.

சூரி. இல்லை நேற்று வரையில்.

புரு. சிநேகிதா இனி உன்னிடத்தில் மறைப்பதில் ப்ரயோஜனமில்லை. அப்பெண்மணியைப்பற்றி நீ என்ன நினைக்கிறாய்.

சூரி. சிநேகிதா. அப்படி உள்ளதை ஒப்புக்கொள். நானும் இனி உண்மையை சொல்லுகிறேன். அப்பெண்மணி, நமக்கு கிட்டாத தைவமென்றும் அதை போகும்பொழுதும் வரும்பொழுதும் நாம் தூர நின்று த்யானித்து, பிரார்த்தித்து, கன்னத்தில் போட்டுக் கொள்ளலாமென்றும் மற்ற சமயங்களில் அதையே த்யானிக்கலாமென்

றும் தூங்கும்போதும் அதைப்பற்றியே கனவு காணலாமென்றும் தோன்றுகிறது. நமக்குள்ள இந்த பாத்யதைகளை ஆக்ஷேபிக்கிறவர் ஒருவருமில்லை.

புரு. சூர்யா! என்ன நீ கூட இப்படிச் சொல்லலாமா. உனக்கு இந்த ரத்னம் கிட்டாதா. நீ நல்ல பணக்காரன். அழகுடையவன். என்னைப்போன்ற ஏழைக்கல்லவா அந்த சந்தேகமெல்லாம்.

சூரி. சிநேகிதா; ஒருக்கால் உனக்கு இந்த ரத்னம் கிடைத்தாலும் கிடைக்கும். எனக்கு கிடைப்பதரிது. நான் உட்கார்ந்தபோது எனக்கு அவள் முகம் தெரிந்தது. நீ உட்கார்ந்த சற்று நேரத்திற்கெல்லாம் எனக்கு அவள் பின்புறம் தெரிந்தது. அவள் பார்வை பூமியை நோக்கியிருந்தபோதிலும் உலகமெல்லாம் சுற்றும் கடைக்கண் உன் பேரிலேயே இருந்தது.

புரு. சிநேகிதா! உனக்கு என்மீதிருக்கும் ப்ரியத்தினுல் அவள் என்னைப் பார்த்ததாக உனக்கு தோன்றுகிறதேயல்லாமல் வேறில்லை. ஓடும் நதி சமுத்திரத்தைப் பார்க்குமே யல்லாது கால்வாயை அடையப் பார்க்குமா. என் அதிர்ஷ்டம், எனக்குத் தெரியாதா. சமுத்திரத்தில் எவ்வளவு ஜலமிருந்தாலும் ஜாடி கொண்டமட்டும்தானே, ஜலம் அகப்படும் நானோ மகா ஏழை. அவளோ மிகுந்த பணக்காரி. அவள் என்னை எங்கே கவனிக்கப்போகிறுள்.

சூரி. ஏன் அவள் உன்னை கவனிக்கத் தடையென்ன. நீ மிகவும் அழகுடையவன் நல்ல புத்திமான் அதற்கென்ன செய்கிறது. லக்ஷ்மிக்கும் சரஸ்வதிக்கும் மாமி மருமகள் சண்டையாதலால், ஸரஸ்வதி உன்னிடமிருப்பதால் லக்ஷ்மி போய்விட்டாள். அப்படித்தான் என்ன உன் சிறு தகப்பனுர் வெகு பணக்காரர். அவருக்குப் பிறகு அவர் பணம் பாதியாவது உனக்கு கிடைக்கும். அவருக்கோ வார்சு இல்லை.

ஸ்ரீமதி

புரு. நல்ல வேளை. என் எதிர் வீடு 5 மாடி வீடென்றும், என் மாமாவின் மாப்பிள்ளை வெகு பணக்காரனென்றும் என்னை பெருமை யுடையச் சொன்னயே. பொட்டக்கண்ணியை விசாலாக்ஷி என்று சொல்வதுபோல் என்னை அழகென்று சொல்லிவிட்டாய். புள்ளிமான் என்று சொல்வதற்குப் பதிலாய் புத்திமானென்றும் சொல்லிவிட்டாய். நல்லது என்னை இவ்வளவு சோதிக்கிருயே ஒழிய அவள் ஏன் உனக்குக் கிடைக்கக் கூடாது.

ஆரி. சினேகிதா! அவள் எனக்கு புளிப்பு த்ராக்ஷைப்பழக்குலை எனக்கு அது எட்டாததால் புளிப்பாய்த்தானிருக்கும். நல்லது அப்பெண்மணி கலியாணம் ஆனவளா இல்லையா என்றும் அவள் யாரென்றும் விசாரிக்காமல் நாம் வீண் யோஜனையெல்லாம் செய்கிருமே.

புரு. நீ அதைப்பற்றி கவலைப்பட வேண்டாம். அந்த மண்டுராமன் நேற்று சந்த்ரசேகரனுக்காக விஜாரித்து தவறுதலாய் என்னிடம்வந்து, அவள் நாகராஜன்பெண்ணென்று சொன்னன். பிறகு நான் விஜாரித்ததில் அவளுக்கு கலியாணம் ஆகவில்லையென்றும், அவள் ருதுவானபின் தான் கலியாணம் செய்கிறதென்று அவள் தகப்பனர் தீர்மானித்திருப்பதாயும், ருதுவானபின் கலியாணம் செய்வதாய் வாக்களித்து வாக்கு தவருமல் நடத்தும் அபூர்வமான மனிதர்களில் அவர் ஒருவரென்றும் அறிந்தேன்.

சூரி. அப்படியானல் சினேகிதா இவள் நிச்சயமாய் உனக்குக் கிடைப்பாள். படித்த பெண்கள் வயதான பெண்கள் உன் அழகைப் பார்த்து பிறகு வேறு ஒருவரையும் நினைக்கமாட்டார்கள். அவள் பார்த்த பார்வையிலேயே எனக்குத் தெரியும்.

புரு. சூர்யா; பெண் பெண்டாட்டிகள் மனதை இவ்வளவு எளிதில் அறிந்துவிட்டதாக நினையாதே. அத்திப் பூவைக் கண்டாலும் காணலாம், வெள்ளைக்காக்கையைக் கண்டாலும் காணலாம், ஜலத்தில் மீன் காலைக் கண்டாலும்

காணலாம். ஸ்த்ரீகளுடைய மனதை மாத்திரம் காண முடியாதென்று நீதி சாஸ்திரம் முறையிடுகிறது. தேவர்களால் கூட அறியமுடியாத ஸ்த்ரீயின் மனது உன்னால் அறியமுடியுமா. அவர்கள் வெகு ப்ரியம் வைத்த மனிதரிடம் விரோதம் போல் காண்பிப்பார்கள். வெகு ப்ரியம் வைத்திருப்பதுபோல் காட்டி ஒருவனைக் கொல்ல சமயம் தேடுவார்கள். பார்வை ஒரு பக்கமிருக்கும். மனது கோவிலில் கடவுளை துதிக்கும் ருத்ராக்ஷப் பூனைபோல் வேறு பக்கமிருக்கும்.

சூரி. சிநேகிதா, நான் அப்படி ஏமாந்து போவேனென்று நினைக்காதே. எப்படித்தான் இருக்கட்டும், ப்ரயத்னம் செய்து பாரேன், அதிர்ஷ்டமிருந்தால் நடக்கிறதென்று ப்ரயத்னம் செய்யாமலிருக்கலாமா, காற்றுக்கெதிரில் தீபத்தை வைத்து அதிர்ஷ்டமிருந்தால் அணையாமலிருக்கட்டுமென்று சொல்வார்களா.

புரு. என்னை என்ன சொல்லச் சொல்லுகிறாய். அவளிடம் போய் சாமான் விலைக்கு கேட்பது போல் அவளை கலியாணம் செய்துகொள்ள சம்மதமாவென்று கேட்க்கச் சொல்லுகிறாயா. அல்லது தமயந்தி அன்னத்தை தூது விட்டதுபோல் இக்காலத்து கருப்பு அன்ன பக்ஷியாகிய காக்கையின் காலில் கடிதத்தை கட்டிவிட்டு இதைக் கொண்டுவருகிற மகாபுருஷனைப்போல் நான் அழகுடையவன். பாட ஆரம்பித்தால் அவர் போலவே பாடுவேன். என் சொத்தைப்பற்றி கேட்கவே வேண்டாம். ஏகாதசி எப்பொழுதும் என் வீட்டில் தான் வாஸமென்று எழுதட்டுமா.

சூரி. சிநேகிதா. ஏது என்னை கழுதையாய் அடித்து விடுவாய் போலிருக்கிறதே, நல்லது இருக்கட்டும், நான் வேடிக்கையாய்ச் சொன்னேன். அந்தப்பெண்ணாவது உன்னை கலியாணம் செய்து கொள்ளவாவது நீ என்ன சொல்லுகிறாய் என்று பார்த்தேன். அவளுக்கு ஏற்கனவே

கலியாணம் நிச்சயமாகிவிட்டது. இனி இது விஷயத்தில் நாம் கவலைப்படவேண்டாம்.

புரு. (சற்று நினைத்து) சினேகிதா இது நிஜம்தானு. யார் சொன்னது உனக்கு, எங்கே நிச்சயமாயிருக்கிறது.

சூரி. எங்கேயானுல் உனக்கென்ன. நீ தான் ஒன்றும் ப்ரயத்னமே செய்யமாட்டேனென்கிருயே.

புரு. என். நீ ஏன் ப்ரயத்னம் செய்யக்கூடாது. நீ அழகாயிருக்கிருய், நல்ல பணக்காரன், மிகுந்த புத்திமான்.

சூரி. சினேகிதா. ஏன் என்னை இப்படி கேலி செய்கிருய். என் புத்தியை எப்போது நிறுத்துப்பார்த்தாய். ஓகோ, அன்றைக்கு புத்தி என்ற புஸ்தகம் நான் விலைக்கு வாங்கினதைப் பார்த்து இப்படி புத்தி அனேகம் தடவைகளில் வாங்கி யிருக்கலாமென்று நினைத்து புத்திமானென்று சொன்னுயோ. ஆகிலும் நீ இவ்வளவு தூரம் சொல்லுகிறபடியால் நான் ப்ரயத்னம் செய்கிறேன். ஆனுல் எனக்கு ஒரு வக்கீல் வேண்டுமே.

புரு. என் அந்தப்பெண் உனது பேச்சை கேட்டவுடனே அடிக்கவந்தால் என்ன செய்கிறதென்று பயமாயிருக்கிறதோ.

சூரி. அடித்தால் தான் நல்லதாயிற்றே அவள் கை என்மீது பட்டால் அது எனக்கு சந்தோஷத்தை கொடுக்குமல்லவா. அதல்ல ஒரு வக்கீல் எனக்காக பேசினுல் என் காரியம் ஜயமாகுமென்று தோன்றுகிறது. அதற்காகத்தான் உன்னையே வக்கீலாக வைக்கலாமென்று நினைக்கிறேன். இந்த வீண்பேச்சினுல் ப்ரயோஜனம் ஒன்றுமில்லை. சினேகிதா, உன்னை இன்னும் ஒருமுறை கேட்டுக் கொள்ளுகிறேன். நீ ப்ரயத்னம் செய்தால் பலிக்காமல் போகாது.

புரு. சூர்யா நீ சொல்வதை அறிந்தேன், ஆகிலும் அவள் பணக்காரியாயும், நான் ஏழையாயுமிருக்குமளவும் நான் ப்ரயத்னம் செய்யமாட்டேன். நான் அவள் பணத்திற்கு ஆசைப்பட்டு அவளை கலியாணம் செய்ய பார்ப்பதாக ஜனங்

கள் நினைப்பார்கள் ஒருவேளை அவளும் கூட அப்படியே நினைக்கலாம். ஆகையால் எனக்கு ஒரு யோஜனை தோன்றுகிறது. என் சிறிய தகப்பனர் உடம்பு முன்போலில்லை. அவருக்குப் பிறகு சொத்து ஏதாவது எனக்கு கிடைத்து நான் பணக்காரனுல் நீ சொல்லியபடி பார்க்கிறேன். நான் போய் வருகிறேன் (போகிறான்).

---

## அங்கம் 1—காட்சி 3.

### சுந்தரராஜய்யர் வீடு.

[சுந்தரராஜய்யர் சோபாவில் சாய்ந்திருக்கிறார். சந்த்ரசேகரன் வருகிறான்].

சந். (தனியாக) என்ன ஆச்சரியம். இதுவரையில் புருஷோத்தமன் மீது கோபமாயிருந்த சித்தப்பா இப்போது அவனை பார்க்க வேண்டுமென்று இவ்வளவு ஆவல் கொண்டிருக்கிறார். இதில் ஏதோ விசேஷம் இருக்கிறது. ஆகையால்தான் புருஷோத்தமனிடம் சாவகாசமாய் போய் சித்தப்பா பார்க்கவேண்டுமென்று மட்டும் சொன்னதாக சொல்லியனுப்பியிருக்கிறேன். ஒருவேளை அவன் வந்தால் அவர் மனது மாறிப்போகுமோ என்னமோ அவர் சொத்து முழுவதும் எனக்கு கிடைத்தால் நான் சுகமாய் இருப்பதுமல்லாமல் ஸ்ரீமதியும் என்னை கலியாணம் செய்துகொள்ள ஆசைப்படுவாள்.

சுந். அதென்ன சப்தம், யாரது, புருஷோத்தமா.

சந். (தனிமையாக) நாம் புருஷோத்தமன் போல் ஏன் காட்டிக்கொள்ளக்கூடாது அவருக்கோ கண் நன்றாய் தெரிகிறதில்லை. அவர் புருஷோத்தமனை அடிக்கடி விஜாரிக்கிறாரே என்ன சொல்லுகிறாரோ பார்ப்போம். (உறக்க) ஏனப்பா நான் தான்.

ஸ்ரீமதி

சுந். புருஷோத்தமா, முன்னமேசொல்லியனுப்பச்சொன்னேனே இந்த அயோக்யப்பயல் சொல்லியனுப்பவில்லேயோ. அய்யோ கண் தெரியவில்லேயே. புருஷோத்தமா என்னே தடவிக்கொடு. (சந்த்ரசேகரன் தடவிக்கொடுக்கிருன்). புருஷோத்தமா நீ தனியாய் இருக்கிருயோ வேறு ஒருவரும் இல்லேயே.

சந். இல்லே.

சுந். அப்பா நீ நல்லவன். உன் நல்லகுணங்கள் தெரியாமல் உன்னுடன் சண்டை போட்டுக் கொண்டேன். இந்த அயோக்யப்பயல் சந்த்ரசேகரன்—பேரைப்பார் விளக்கமாத்துக்குபட்டு குஞ்சலம் என்று பேர்வைப்பதுபோல—என்னிடம்நல்லவன் போல் நடந்து எனக்கு உபசாரம் செய்து, என் சொத்தைக் கொள்ளே யடித்துக்கொண்டு போகப் பார்க்கிருன். நல்லது இந்தப் பயலே ஏமாற்றுகிறேன். எங்கே திறவுகோல் எடு சீக்கிரம்.

சந். திறவுகோலா எங்கே அது.

சுந். என் தலேயணிக்கு அடியில் பார். இரும்புப் பெட்டி அடி அறை. உயில்களே கொண்டு வா. சீக்கிரம்.

[சந்த்ரசேகரன் அவசரமாய் போய் இரண்டு உயில்களுடன் வருகிருன்.]

சந். (தனி) என்ன ஆச்சரியம். இரண்டு உயில்கள் இருக்கின்றனவே. இதை வாசிக்கக் கூட சாவகாசமில்லேயே. (சுந்தரராஜய்யர் கூப்பிடுகிருர்). கூப்பிடுகிருரே என்ன செய்கிறது. கடவுள் செயல் எப்படி நடந்தாலும் நடக்கட்டும்.

சுந். புருஷோத்தமா இரண்டு உயில் ஒன்று ஸ்டாம்பு ஒன்று வெத்து காகிதம். ஸ்டாம்பைக் கிழித்துவிடு. அது அந்த அயோக்யப் பயலுக்கு அநுகூலமாக எழுதிவைத்தேன். இரு, இரு, கிழிக்காதே. அந்தப் பயல் அதைப் பார்த்து ஏங்கி சாகட்டும். வெத்துக் காகிதம் உன்

பேருக்கு எழுதியிருக்கிறேன். இதை ஜாக்ரதையாய் பார்த்துக்கொள். அந்தப் பயலிடம் சாவியைக் கொடுக்காதே. அவன் உயிலை திருடி விடுவான். இரு, இரு, பழய உயிலை கொளுத்திவிடு. அந்தப் பயல் அதை கை பற்றிக்கொண்டு ஏதாவது வியாஜ்யம் செய்வான்.

சங். (தனியாக) பழய உயிலை கொளுத்தி விடவா. கிழவா உன்னைத்தான் சீக்கிரம் கொளுத்திவிட வேண்டும். எத்தனை வசவு எனக்கு. ஆகா இத்தனை நாள் நான் உனக்குச் செய்த உபகாரத்துக்கு உனக்குவிசுவாசம் இல்லாமல் போனபோதிலும் பகவான் என்னை மறப்பாரா. இருக்கட்டும். பழய உயிலை இரும்பு பெட்டியில் வைத்து பூட்டி விடுகிறேன். இதை வேறு இடத்தில் கொண்டுபோய் ஒளித்துவிடுகிறேன். (மடியில் வைத்துக்கொண்டு போகிறான்)

[புருஷோத்தமன் வருகிறான். சுந்தராஜய்யர் பக்கத்தில் போய் பார்த்து,]

புரு. (தனி) ஆகா ! என் சித்தப்பா இருக்கிற நிலமையை பார்த்தால் பிழைக்கமாட்டார் போலிருக்கிறதே. இவன் சொல்லியனுப்பினதைப் பார்த்தால் அவர் ஏதோ சௌக்யமாயிருப்பவர்போல் தோன்றிற்றே. (சந்த்ரசேகரன் வருகிறான்) அண்ணா சித்தப்பாவை நான் உயிருடன் பார்க்கக் கூடாதென்று உன் எண்ணமோ.

சங். என்ன புருஷோத்தமா. இப்படி சொல்லுகிறாயே. நான் அவசரமாய்வரும்படி உனக்கு சொல்லியனுப்பவில்லையா.

புரு. அவர் இந்த ஸ்திதியிலிருப்பது எனக்கு எப்படி தெரியும். அய்யோ பிழைக்கமாட்டார் போலிருக்கிறதே. போய் பார்க்கிறேன். (அருகில் போய்) சித்தப்பா, சித்தப்பா, உங்களுக்கு என்னை தெரிகிறதா. நான்தான் புருஷோத்தமன் வந்திருக்கிறேன்.

சுங். புருஷோத்தமா, நான் சொன்னபடி செய்தாயா, கொளுத்தி விட்டாயா, அதை பெட்டியில் வைத்தாயா.

புரு. என்ன சித்தப்பா பிதற்றுகிறீர்கள். கொளுத்தவாவது, வைக்கவாவது, என்ன இதெல்லாம்.

சந். (மெதுவாய்) 2 நாழிகையாய் இப்படித்தான் பேத்தல், கட்டவும், வைக்கவும், கொளுத்தவுமாயிருக்கிறார்.

சுந். புருஷோத்தமா, இந்தா, சாவியை எடுத்து இரும்புப் பெட்டியை திறந்து, அடி அறையைப் பார். சீக்கிரம்.

புரு. (போய் வந்து) ஆம் பார்த்தேன் உயில் இருக்கிறது.

சுந். அதை கொளுத்திவிட்டாயா.

புரு. எதை கொளுத்துகிறது.

சுந். உயிலை.

[உறவினர்கள் வருகிறார்கள்]

புரு. என்ன உயிலாவது, கொளுத்தவாவது, ஒன்றும் தெரியவில்லையே.

சந். (மெள்ள) என்னமோ நேற்று முதல் இப்படித்தான் பிதற்றுகிறார் அப்பா.

சுந். (பாதி எழுந்து) அடே அயோக்யப்பயலே, திருட்டுப்பயலே

[சந்த்ரசேகரனை ஒரு வீழி விழித்துப்பார்த்து திடீரென்று சாய்ந்து விடுகிறார்.]

உறவினர். (வெளியே வந்து) என்ன அப்படி கோபமாய் எழுந்து உன்னை வைதாரே. சந்த்ரசேகரா.

சந். ஏதோ நேற்று முதல் ஜன்னி விகாரம்போலிருக்கிறது திடீரென்று எழுந்திருக்கிறதும், என்னை வைகிறதும், உயில் உயில் என்கிறதும், கொளுத்து கொளுத்து என்றும், இப்படி பிதற்றிக்கொண்டிருக்கிறார்.

உற. நல்லது உயில் உயிலென்கிறாரே அதிலென்ன விசேஷமிருக்கிறது பார்ப்போம். எங்கள் முன்பாக இரும்புப் பெட்டியை திறந்து உயிலே எடுங்கள் பார்ப்போம்.

[சந்த்ரசேகரன் எல்லோர்முன்பாக பெட்டியைதிறந்து உயிலே எடுத்துக் கொடுக்கிருன்.]

ஓர் வக்கீல். (அதை வாசித்துப் பார்த்து) என்ன ஆச்சரியம். அவர் சொத்து முழுமையும் சந்த்ரசேகரனுக்கு கொடுத்து புருஷோத்தமனுக்கு தன் ராமாயணத்தை கொடுத்திருக்கிருர். சொத்தில் கொஞ்சமாவது கொடுக்கக் கூடாதா?

புரு. சந்தோஷம். இப்படி யார் செய்யப்போகிருர்கள் சொத்து எனக்கு எதற்காக. ராமாயணத்தைவிட உயர்ந்த சொத்து வேறு என்ன இருக்கிறது.

சந். புருஷோத்தமா நீ கலங்காதே. அவர் கொடுக்காமல் போன போதிலும் நான் கூட உன்னை மறந்துவிடுவேனு. உனக்கு வேண்டிய ஒத்தாசை நான் செய்கிறேன்.

புரு. அண்ணு! எனக்கு இவ்வளவு ஒத்தாசை செய்யவேண்டுமென்று நீ சொல்வதே போதும். ராமாயணத்தை எனக்கு என் சித்தப்பா கொடுத்ததாக நினைக்காதே. பகவானே அதை எனக்கு கொடுத்திருக்கிருர். அதற்கு விரோதம் நான் ஒன்றும் செய்யக்கூடாது.

வக். இது ரொம்பவும் ஆச்சரியமாயிருக்கிறது அவர்சொன்னதை பார்த்தால் ஏதோ இரண்டு உயில் இருந்தது போலும் ஒன்றைக் கொளுத்தச் சொன்னது போலும் என் மனதில் தோன்றிற்று. மேலும் புருஷோத்தமனை ஒன்றுஞ்சொல்லாமல், சந்த்ரசேகரனை வைததைப் பார்த்தால், அவர் ஏதோ சந்த்ரசேகரனை சந்தேகப்பட்டதுபோலிருந்தது.

சந். அவர் நேற்றுமுதல் இப்படித்தான்பிதற்றிக்கொண்டிருந்தார். இதுவரையில் என்னை புகழ்ந்து வந்தவர், நேற்று முதல் என்னை இகழ்ந்து புருஷோத்தமனை புகழ்ந்து பேச ஆரம்பித்தார்.

புரு. ஆம் இதில் சந்தேகம் ஒன்றுமில்லே. என்றைக்கும் எனக்கும் அவருக்கும் விரோதம்தான். அண்ணுதான் அவர்

மனதுக்கு சரியாய் நடப்பார். அவர் சொல்கிறது சரிதான். சாகும் சமயத்தில் அவருக்கு ஏதோ என்பேரில் ப்ரியம் வந்திருக்கிறது. வெகு நாள் என்னை வைததற்கு ப்ராயச்சித்தம்போலும்.

வக். நல்லது இனி அவரைப் பாருங்கள்.

[எல்லோரும் போகிறார்கள்.]

---

## அங்கம் 1—காட்சி 4.

சந்த்ரசேகரன் வீட்டுத் தோட்டம்.

[சந்த்ரசேகரன் வருகிறார்.]

சந். ஆகா! கடவுள் செயல்தான் எப்படி முடிகின்றது அந்தக் கிழவன் எப்படியோ நான் அவனுக்கு செய்த உபகாரத்தையெல்லாம் வேஷமென அறிந்துகொண்டு தன் சொத்தை புருஷோத்தமனுக்கு கொடுக்கப் பார்த்தான், நல்லவேளை கண் தெரியாமல் என்னை புருஷோத்தமனென்று நம்பி சொன்ன வார்த்தைகளால் நான் பிழைத்தேன் இல்லாவிட்டால் புருஷோத்தமனல்லவோ மிகுந்த பணக்காரனாயிருப்பான். ஆகிலும் அவனுக்குச் செய்து வைத்த உயிலை நான் இப்படி வீட்டில் வைத்து காப்பாற்றி வருவது சுத்த அறிவின்மை. இதை ஏன் கொளுத்திவிடக் கூடாது. (யோசித்து) நல்லது இருக்கட்டும். புருஷோத்தமனை தனியாய் அழைத்து அவனை அவமானப் படுத்தி இதை காண்பித்து அவன் வயிறு எறியச் செய்து பிறகு கொளுத்துகிறேன.

ராம. அய்யா: பிரபுவே. தங்களை எங்கெல்லாம் தேடுவது, இங்கே என்ன யோஜனை செய்கிறீர்கள்.

சந். நான் இல்லாதவிடமெல்லாம் தேடினையோ, அதிருக்கட்டும், நீ எங்கே போயிருந்தா யிந்நேரம்.

ராம. அந்த வெட்கக்கேட்டை ஏன் கேழ்க்கிறீர்கள் இன்னேரம் என் சம்சாரத்தினிடத்தில் எனக்கு வேலை. ஜலம் எடுத்துக்கொடுக்கவும், புடவை தோய்த்துப்போடவும், அடுத்

[சந்த்ரசேகரன் எல்லோர்முன்பாக பெட்டியைதிறந்து உயிலை எடுத்துக் கொடுக்கிறான்.]

ஓர் வக்கீல். (அதை வாசித்துப் பார்த்து) என்ன ஆச்சரியம். அவர் சொத்து முழுமையும் சந்த்ரசேகரனுக்கு கொடுத்து புருஷோத்தமனுக்கு தன் ராமாயணத்தை கொடுத்திருக்கிறார். சொத்தில் கொஞ்சமாவது கொடுக்கக் கூடாதா?

புரு. சந்தோஷம். இப்படி யார் செய்யப்போகிறார்கள் சொத்து எனக்கு எதற்காக. ராமாயணத்தைவிட உயர்ந்த சொத்து வேறு என்ன இருக்கிறது.

சங். புருஷோத்தமா நீ கலங்காதே. அவர் கொடுக்காமல் போனபோதிலும் நான் கூட உன்னை மறந்துவிடுவேனா. உனக்கு வேண்டிய ஒத்தாசை நான் செய்கிறேன்.

புரு. அண்ணா! எனக்கு இவ்வளவு ஒத்தாசை செய்யவேண்டுமென்று நீ சொல்வதே போதும். ராமாயணத்தை எனக்கு என் சித்தப்பா கொடுத்ததாக நினைக்காதே. பகவானே அதை எனக்கு கொடுத்திருக்கிறார். அதற்கு விரோதம் நான் ஒன்றும் செய்யக்கூடாது.

வக். இது ரொம்பவும் ஆச்சரியமாயிருக்கிறது அவர்சொன்னதை பார்த்தால் ஏதோ இரண்டு உயில் இருந்தது போலும் ஒன்றைக் கொளுத்தச் சொன்னது போலும் என் மனதில் தோன்றிற்று. மேலும் புருஷோத்தமனை ஒன்றுஞ்சொல்லாமல், சந்த்ரசேகரனை வைததைப் பார்த்தால், அவர் ஏதோ சந்த்ரசேகரனை சந்தேகப்பட்டதுபோலிருந்தது.

சங். அவர் நேற்றுமுதல் இப்படித்தான்பிதற்றிக்கொண்டிருந்தார். இதுவரையில் என்னை புகழ்ந்து வந்தவர், நேற்று முதல் என்னை இகழ்ந்து புருஷோத்தமனை புகழ்ந்து பேச ஆரம்பித்தார்.

புரு. ஆம் இதில் சந்தேகம் ஒன்றுமில்லை. என்றைக்கும் எனக்கும் அவருக்கும் விரோதம்தான். அண்ணாதான் அவர்

மனதுக்கு சரியாய் நடப்பார். அவர் சொல்கிறது சரி தான். சாகும் சமயத்தில் அவருக்கு ஏதோ என்பேரில் ப்ரியம் வந்திருக்கிறது. வெகு நாள் என்னை வைததற்கு ப்ருயச்சித்தம்போலும்.

வக். நல்லது இனி அவரைப் பாருங்கள்.

[எல்லோரும் போகிறுர்கள்.]

---

## அங்கம் 1—காட்சி 4.

சந்த்ரசேகரன் வீட்டுத் தோட்டம்.

[சந்த்ரசேகரன் வருகிறுர்.]

சந். ஆகா! கடவுள் செயல்தான் எப்படி முடிகின்றது அந்தக் கிழவன் எப்படியோ நான் அவனுக்கு செய்த உபகாரத்தை யெல்லாம் வேஷமென அறிந்துகொண்டு தன் சொத்தை புருஷோத்தமனுக்கு கொடுக்கப் பார்த்தான், நல்லவேளை கண் தெரியாமல் என்னை புருஷோத்தமனென்று நம்பி சொன்ன வார்த்தைகளால் நான் பிழைத்தேன் இல்லாவிட்டால் புருஷோத்தமனல்லவோ மிகுந்த பணக்காரனுயிருப்பான். ஆகிலும் அவனுக்குச் செய்து வைத்த உயிலை நான் இப்படி வீட்டில் வைத்து காப்பாற்றி வருவது சுத்த அறிவின்மை. இதை ஏன் கொளுத்திவிடக் கூடாது. (யோஜித்து) நல்லது இருக்கட்டும். புருஷோத்தமனை தனியாய் அழைத்து அவனை அவமானப் படுத்தி இதை காண்பித்து அவன் வயிறு எறியச் செய்து பிறகு கொளுத்துகிறேன.

ராம. அய்யா: பிரபுவே. தங்களை எங்கெல்லாம் தேடுவது, இங்கே என்ன யோஜனை செய்கிறீர்கள்.

சந். நான் இல்லாதவிடமெல்லாம் தேடினுயோ, அதிருக்கட்டும், நீ எங்கே போயிருந்தா யிந்நேரம்.

ராம. அந்த வெட்கக்கேட்டை ஏன் கேழ்க்கிறீர்கள் இன்னேரம் என் சம்சாரத்தினிடத்தில் எனக்கு வேலை. ஜலம் எடுத்துக்கொடுக்கவும், புடவை தோய்த்துப்போடவும், அடுத்

தாத்து சேஷய்யருக்கு கடிதம் கொண்டுபோய் கொடுக்கவும்! ஆகா என்ன வேலே, என்ன வேலே, சிலவுக்கு பணம் அனுப்பிக்கும்படி எங்கம்மாவுக்கு எழுதியிருக்கிறேன்.

சங். சேஷய்யருக்கு உன் சம்சாரம் கடிதம் எழுதுகிற வழக்கம் உண்டா.

ராம. ஓய் நன்றாயிருக்கிறதே சேஷய்யருக்கு என் சம்சாரம் கடிதம் எழுதுவாளா. சேஷய்யருக்கு தபால்காரன் கொடுத்த கடிதத்தை நான் கொடுத்தேனென்று சொன்னேன்.

சங். ஏண்டா பணத்துக்கு அம்மாவுக்கு எழுதுவானேன்.

ராம. அம்மா தானே அய்யா என்னே இங்கே ஏதாவது வேலேக்குப்போகச் சொன்னு, இங்கே வேலே அகப்படவில்லேயே, அதான் என் சம்சாரத்துக்கு வேலே செய்கிறேன்.

சங். அடே இனி அம்மாவை பணம் கேழ்க்காதே, நான் தருகிறேன்.

ராம. ஆமாம்: அய்யா மறந்தேபோய்விட்டேன் நீர் இப்போது வெகு பணக்காரராமே. உங்கள் தம்பியைக் கூட ஏமாற்றி உங்க சித்தப்பா பணத்தை நீரே அடித்துவிட்டீராமே.

சங். அடித்துவிட்டேனு எங்கே கொள்ளேயடித்தேனே. அது கிடக்கிறது. அடே முன், ஒரு நாள் சுந்தரய்யர் வீட்டு ஊஞ்சலில் பார்த்தோமே, ஒரு பெண் நீ கூட விஜாரித்து வந்து புருஷோத்தமனிடம் போய் பதில் சொன்னயே ஞாபகமிருக்கிறதா.

ராம. ஆமாம், அய்யா ஆமாம் அய்யா: நன்றாய் ஞாபகமிருக்கிறது. அப்போது நான் அவமானப்பட்டது, என் முகத்தைப் பார்க்க ஒரு கண்ணுடி இல்லேயே என்று வருத்தமாயிருந்தது.

சங். அடே அந்தப் பெண்ணேப்பற்றி இன்னும் நன்றாய் நீ விஜாரிக்கவேண்டும். அவளுக்கு கலியாணம் ஆகிவிட்டதா.

இல்லாமற்போனால் எங்கே கலியாணம் செய்வதாக உத்தேசம். புருஷன் எப்படிப்பட்டவனாக இருக்கவேண்டும். இந்த விபரமெல்லாம் எனக்கு தெரியவேண்டும்.

ராம. ஏனய்யா, இந்த உத்யோகம் கூட வைத்துக்கொண்டிருக்கிறீரா. நீர் தான் நல்ல பணக்காரராச்சுதே, இந்தப் புடுங்கல் கலியாணத்தரகு உத்யோகம் உமக்கு என்னத்துக்கு.

சங். அடே மண்டு, என்னடா உளறுகிறாய், அவளை நான் தாண்டா கலியாணம் செய்துகொள்ள யோஜிக்கிறேன்.

ராம. என்ன, என்ன, அது அன்றைக்கே தீர்ந்துவிட்டதென்றல்லவா எண்ணினேன்.

சங். என்னடா தீர்ந்துவிட்டது. அந்தப் பெண் அன்றைக்கு அடிக்கடி என்னைத் தானே பார்த்துக்கொண்டிருந்தாள்.

ராம. ஆமாம் அப்படித் தான் தோன்றும், அந்தப் பெண்ணுக்கு வக்ரக்கண், புருஷோத்தமனைப் பார்த்தது, உங்களைப் பார்த்ததுபோல் தோன்றியிருக்கும்.

சங். ஏண்டா மடயா, எனக்கு கண்ணில்லையா. அவளுக்கு வக்ரக்கண் ஏதுடா.

ராம. காமிகளுக்கு கண்ணில்லை. ஓகோ மறந்துவிட்டேன். அவள் பக்கத்தில் நின்ற பெண் வக்ரக்கண், அவள் உம்மை அடிக்கடி பார்த்தாள். வக்ரக்கண் நல்ல அதிர்ஷ்டசாலி அய்யா, அவளை கலியாணம் பண்ணிக்கொள்ளும்.

சங். அவள் ஏண்டா என்னை அடிக்கடி பார்த்தாள். அவளுக்கும் என்மேல் ஆசையா.

ராம. ஆசையாவது, மண்ணாவது, அவள் பக்கத்திலிருந்தவளிடத்தில் அவள் உம்மை பார்த்து சொல்லிக்கொண்டது, எனக்கே கேழ்க்க வெட்கமாயிருந்தது. அதனால் உம்மிடம் சொல்லவில்லை.

சங். ஏண்டா, பெண்ணாயிருந்தும் கூச்சமில்லாமல் என்மேல் ஆசையிருப்பதாக சொன்னாளா.

ராம. இல்லை, அய்யா, அவள்-உள-சொல்லட்டுமா !

சங். சொல்லேண்டா :

ராம. உள நீங்க, கோபிச்சுக் காதங்கோ, அவள் சொன்ன அடி, நான் தான் அவலக்ஷணமென்றால் என்னையும் விட அவலக்ஷணமான ஒரு கட்டையிலேபோவான் அடிக்கடி என்னை பார்க்கராண்டி என்றாள். இந்தப் பெண் அதைக் கேட்டு சிரித்தாள்.

சந். யார் நாகராஜர் பெண்ணு அவள் பேர் என்ன.

ராம. ஸ்ரீமதி.

சந். ஸ்ரீமதி, ஸ்ரீமதி என்ன அழகான பேர். அவள் ஏன் சிரித்தாள் தெரியுமா.

ராம. ஏன் சிரித்தாளென்றால் அவள் சொன்னது சரி யென்று சிரித்தாள்.

சந். முட்டாள், நீ சொல்வது சரியல்ல அவள் அப்படி சிரித்திருந்தால் இப்படி முட்டாள் உண்டா, அவர் நம்மையே பார்த்துக்கொண்டிருக்க இவள் தன்னைப் பார்க்கிறதாக நினைக்கிறாள் பாரென்று சிரித்திருப்பாள்.

ராம. எப்படியோ பெண் பெண்டாட்டிகளெல்லாம் உம்மைப் பார்த்து சிரித்தது நிச்சயம்.

சந். ஏண்டா அப்படித் தான் இருக்கட்டுமே. என்னைப் பார்த்து சந்தோஷத்தால் தான் சிறித்ததாக இருக்கட்டுமே.

ராம. ஏது இது தெரிந்திருந்தால் உம்மை கலியாணம் செய்து கொள்ளும்படி கூட அவர்களையெல்லாம் கேட்டிருப்பீர் போலிருக்கிறதே.

சந். அடே அது போகட்டும் வீண்வார்த்தைவேண்டாம் அந்தப் பெண் நிச்சயமாய் என்னைக் கலியாணம் செய்துகொள்வாளென்று எனக்குத் தோன்றுகிறது. பெண்பெண்டாட்டிகளுக்கெல்லாம் பணம் தாண்டா குறிப்பு அழகு குணம் அதெல்லாம் பார்க்கமாட்டார்கள், நகை போட்டால் போதும்.

ராம. போமய்யா வயதாகி, உண்மையான காதலினால் கலியாணம் செய்துகொண்டு புருஷனையே தெய்வமாக கொண்டாட வேண்டுமென்று அபிப்ராயமுள்ள பெண்கள் பணத்தையும், நகையையும் மட்டும் எதிர் பார்க்கமாட்டார்கள்.

அழகைத்தான் முக்யமாய் கவனிப்பார்கள். அழகில்லாதவனையும், கிழவனையும் பணத்துக்காகவும் நகைக்காகவும் ஆசைப்பட்டு விவாகம் செய்துகொள்ளும் ஸ்திரீகளுடைய உத்தேசம் வேறு.

சங். என்ன உத்தேசம் புருஷன் இறந்த பிறகு சுகப்படலாமென்றோ.

ராம. அது கிடக்கிறது அதையெல்லாம் சொன்னால் நீர் கோபித்துக்கொள்வீர்

சங். ஏண்டா! அயோக்யப்பயலே நீ இவ்வளவு சொல்வதும் என்னை அவலக்ஷணமென்று சொல்வதற்காகவா. இந்தா என் போட்டோவை பார் எப்படியிருக்கிறது. அவலக்ஷணமாயிருக்கிறதா.

ராம. (பார்த்து) ஆஹா நன்றாய் இருக்கிறதே. இது உமது போட்டோவா. இந்த மாதிரி தான் அந்த கிராமப் பெண்ணோ, கிராமபூனையா, கிராமபோனோ, அதில் கேழ்க்கத் தகாதவர்கள் பாட்டு கூட நன்றாயிருக்கிறது.

சங். அடே, உன் கதையை கட்டு. என்னால் உனக்கு பிழைக்க வேண்டுமென்று இருக்கிறதா இல்லையா சொல்.

ராம. ஓகோ, தாங்கள் அப்படி ஒன்றும் இந்த ஏழையின் மீது கோபங் கொள்ளக்கூடாது. நான் ஏதோ கேலியாகச் சொன்னேன். தங்களுக்கு நான் செய்யவேண்டியதைச் சொன்னால் அந்தப்படி செய்கிறேன்.

சங். நல்லது. நீ போய் ஸ்ரீமதியின் அபிப்ராயம் எப்படி இருக்கிறதென்று எலலாம தெரிந்து வா.

ராம. ஒரு வேளை அவளுக்கு கலியாணம் ஆகியிருந்தால.

சங். அதைப்பற்றி நீ யோஜிக்க வேணடாம். அவளுக்கு இன்னும் கலியாணம் ஆகவில்லையென்று நான் தெரிந்துகொண்டேன்.

ராம. நான் நேரில் அவளையே போய் கேழ்க்கட்டுமா.

சங். மடயா, நேரில் போய் கேழ்ப்பார்களா. அவளுக்கு வேண்டியவர்களைக் கொண்டு ரகசியமாய் விஜாரித்து வா போ. நேரமாகிறது. [போகிறார்கள்.]

## அங்கம் 1—காட்சி 5.

### சூரியநாராயணன் வீடு.

[சூர்ய நாராயணன் வருகிறார்.]

சூரி. (தனிமையாக) நானும் இப்பெண்மணி ஸ்ரீமதியின் முகத்தை என் மனதினின்று நீக்க முயல்கின்றேன். ஒன்றும் முடிய வில்லையே. என்ன செய்வேன். அவள் எங்கே போகி றாள் வருகிறாளென்று அறியும்படி தூதர்களனுப்பி தெரிந்துகொண்டு அவ்விடங்களுக்குப் போய் அவளுக் குத் தெரியாமல் அவள் முகத்தையே பார்த்தவண்ணமா யிருக்கிறேன். ஒருதரம் மனதுக்கு த்ருப்தியாய் பார்த் துவிட்டு அவளை மறந்து விடுவோமென்றால் அப்படி பார்த்துவந்த உடனே மறுபடியும் பார்க்கவேண்டுமென்ற ஆவல் இன்னும் பதின்மடங்கு அதிகமாயிருக்கிறதே ஆ! கண்மணி இவ்வுலகில் உனக்காக உயிரையும் விட தயா ராய் ஒருவன் இருக்கிறானென்பதை நீ அறிந்தனையோ. கண்ணே நான் என்ன செய்வேன்.

[புருஷோத்தமன் வருகிறார்.]

புரு. என்ன சூர்யா! என்ன கண்ணே, மயிலே, குயிலே, என்று ட்ராமாவில் பேசுவது போல் தனிமையாய் பேசிக் கொண்டிருக்கிறாய். தனக்குத் தானே பேசிக்கொள்வது யார் தெரியுமோ ?

சூரி. சினேகிதா! தாக்ஷண்யமில்லாமல் அசல் பைத்யமென்று நன்றாய் சொல்லேன். நீ வெளியில் காட்டிக்கொள்ளா மல் மனதிலேயே வைத்திருப்பதால் நீ புத்திசாலியாக விளங்குகிறாய். கொஞ்சம் வெளியில் மனதை விடுவத னால் நான் பைத்யமாய் காணப்படுகிறேன்.

புரு. சினேகிதா! நீ சொல்வது முற்றிலும் சரியே. பைத்யமென் பதும், புத்திசாலி யென்பதும், புத்தியின் பேதத்தால் உண்டானதே ஒழிய வேறில்லை. ஆகிலும் உனக்கேன் அவள்மீது இவ்வளவு பைத்யம். நீ இதுவரையில் நல்ல பையனாயிருந்தாயே.

சூரி. சிநேகிதா! உனக்கு என் மனது தெரியவில்லை. நான் இது வரையில் ஒரு ஸ்திரீயையும் கண்ணெடுத்துப் பாராத குற்றத்திற்காக பகவான் என்னை இப்படி தண்டிக்கிறார் போலும், என் உயிர் அவளிடமிருக்கிறதேயொழிய இங் கில்லை.

புரு. அப்படி யிருக்கும் பக்ஷத்தில் அவள் உனக்கு சுலபமாய் கிடைப்பாளே. நீ ஏன் ப்ரயத்னம் செய்யக்கூடாது.

சூரி. சிநேகிதா! என்னைக் காட்டிலும் மேலான ஒருவன் அவளை யடைய விரும்பி அவளுக்காக ப்ரயத்னம் செய்யும்போது நான் அவளை நினைக்கலாமோ.

புரு. யார் அது.

சூரி. உனக்கு தெரியாதா? என்னைக் கேழ்க்கிறாயே! உன் மனதை யே கேளேன். அல்லது இளைத்திருக்கும் உன் சரீரத் தைக் கேளேன்.

புரு. சிநேகிதா; நான் உன்னிடத்தில் ஒன்றும் ஒளிக்கவில்லையே எனக்கு ஆசை யிருப்பது உண்மை தான். ஆகிலும் நான் ப்ரயத்னம் செய்வதாக நீ சொல்வது பிசகு. நான் பணக்காரனாகாமல் இவ்வேழை நிலைமையில் ஒருபோதும் ப்ரயத்னம செய்யமாட்டேனென்று அன்றே சொல்ல வில்லையா. அப்போது ஒருவேளை நாம் பணக்காரனாக லாமென்று எண்ணமாவது இருந்தது. இப்போது அது வும் போய்விட்டது. ஆகிலும் அவளை என் மனதிலிருந்து நீக்க முடியவில்லை. வேறு பெண்களை இனி நான் நினைக் கப்போகிறதுமில்லை.

சூரி. சிநேகிதா! அப்படியானால் நான் உன் உத்திரவின்பேரில் அப்பெண்ணை கலியாணஞ்செய்ய ப்ரயத்னஞ்செய்யலாமா

புரு. இதென்ன இதற்கு என் உத்திரவென்ன யார் பெண்ணுக்கு யார் உத்திரவு கொடுக்கிறது. சரி, உத்திரவு கொடுத் தேன் போய் அவளை கலியாணம் செய்துகொள்.

சூரி. அப்படியில்லை சிநேகிதா! உன் உத்திரவின்பேரில்தான் இந்தக் கலியாணம் நடக்கவேண்டி யிருக்கிறது. நான்

ஒன்றும் அறியாத குழந்தை. எனக்கு நீ தகப்பன்போலிருக்கிறாய். தகப்பன் பிள்ளைக்காக பெண் தேடுவது போல், நீ தான் போய் அவளைக் கேட்டு அவளை சம்மதிக்கச் செய்யவேண்டும். நிச்சயம் செய்த பிறகு மட்டும் சாரங்கதரன் தகப்பன் போல் நீயே கலியாணம் செய்து கொள்ளப் பார்க்காதே.

புரு. சினேகிதா! ஒருவேளை என் மனது அப்படி யிருந்தாலுமிருக்கலாம். ஆகையால் என்னை நம்பாதே. நீயே அப்பெண்ணை நேரில் கண்டு கேள்.

சூரி. சினேகிதா! என்னை பரிகாசம் செய்யாதே. நான் உன்னைத் தான் நம்பியிருக்கிறேன். நீ தான் எனக்காக கேழ்க்க வேண்டும்.

புரு. சூர்யா! உனக்கு பைத்யம் ஏதாவது உண்டோ. ஆம்! காமம் அதிகமானால் அது பைத்யத்தில்தானே கொண்டு போய்விடும். கலியாணம் செய்து கொள்பவன் நீ. உனக்காக நான் கேழ்க்கவாவது. அவள் சொல்லக்கூடிய பதிலை நான் இங்கு நினைக்கும்போதே எனக்கு வெட்கமாயிருக்கிறதே.

சூரி. நான் அப்பெண்ணை கலியாணம் செய்து கொள்வது உனக்கு இஷ்டமில்லையென்று சொல்லேன். அதற்கு இப்படி பதில் சொல்வானேன்.

புரு. சினேகிதா! நீ என்னுடன் இத்தனை காலம் பழகி என்னை இப்படித்தானா நினைத்தாய்.

சூரி. சினேகிதா! உனக்கு இஷ்டமுண்டானால் நீ செய்ய முடியாதது எது. நான் நேரே போய் கேட்டால் அவள் இல்லையென்று பதில் சொன்னால் அது எனக்கு எவ்வளவு அவமானமாயிருக்கும்.

புரு. நான் உனக்காக போய் கேட்டு அவள் அவர் என்ன பெண் பெண்டாட்டியா என்று கேட்டால் அந்த அவமானம் உனக்கில்லையா.

சூரி. அவள் அப்படி கேட்டால் பார்த்துக்கொள்வோம். அதில் அவமானம் ஒன்றையும் காணோம்.

புரு. சிநேகிதா! என்னை மட்டும் கல்லினால் செய்திருக்கிறதா. எனக்கு மானம் அவமானம் ஒன்றுமில்லையா. உனக்காக பிறர் கேழ்ப்பதை பெண் பெண்டாட்டிகள் இழிவாய் நினைக்கமாட்டார்களா. தங்கள் சிநேகிதருக்காக எல்லா விஷயத்துக்கும் நீங்கள்தான் பேசவேண்டுமோ, என்று கேட்டால நான் என்ன சொல்லுகிறது.

சூரி. சிநேகிதா! உனக்கு இதில் என்ன அவமானம் இருக்கிறது. எனக்காக நீ கேட்டு அவள் கேலி செய்தால் உனக்கு என்ன அவமானம்.

புரு. அதற்கு நான் போவதில் என்ன விசேஷம், உனக்கு இன்னும் எத்தனையோ சிநேகிதர்கள் இருக்கிறார்கள். அவர்களைபோகச் சொல்லேன்.

சூரி. நல்ல வேளை, ஒரு ஆளுக்குக் கூலி கொடுத்து அவளைப் போய் கேழ்க்கச் சொல்லென்று சொல்லாமல் இத்துடன் நிறுத்தினையே. ஏன் ஒரு கிராமபோன் ரிகார்டில் எடுத்து அதை அவள் முன் வைத்துவிட்டால் அது சொல்லிக் கொள்கிறது.

புரு. சிநேகிதா அப்படியல்ல நான் போய் சொல்வதில் விசேஷமென்ன அதிகமென்று எனக்கு விளங்கவில்லை. நீ அதை சொன்னால் உன் இஷ்டப்படி செய்கிறேன்.

சூரி. எனக்கு காரணம் சொல்லத் தெரியாது. சொன்னாலும் நீ அதை சரியான காரணமாய் அங்கீகரிக்கமாட்டாய். என் மனதிற்கு நீ போய் அவளைக்கேட்டால் அவள் சம்மதிப்பாளென்று தோன்றுகிறது.

புரு. நான் அவள் தகப்பனாரைக் கண்டு கேழ்க்கட்டுமா. எப்படி கேழ்க்கிறது

சூரி. சிநேகிதா இன்னும் என்னை கேலி செய்கிறாயே. அவள் தகப்பனாரை உன்னை யார் கேழ்க்கச் சொன்னது. நீ அவளைத் தான் கேழ்க்கவேண்டும் அவளுக்குத் தான் உன் மீது காதலிருக்கிறது.

புரு. சிநேகிதா என்னை கோமாளியாக்கும் பொருட்டு, நீ இந்த யோஜனை செய்கிறாய். உன் மனதில் என்னை அவமானம்

செய்யவேண்டுமென்ற எண்ணமே அதிகமாக இருக்கிறது. நான் போகவேமாட்டேன்.

சூரி. சினேகிதா இனி எனக்கு கதிவேறில்லை. நான் உயிர் விடவேண்டியதுதான். என் மனதோ அவளிடமிருக்கிறது எனக்கோ அவளை நேரில் போய் கேழ்க்க வெட்கமாயிருக்கிறது. உனக்கோ எனக்காக அவளை கேழ்க்க இஷ்டமில்லை.

புரு. சினேகிதா நான் நல்லது சொன்னாலும் உனக்குத் தெரியவில்லை. ஆகையால் உன் இஷ்டப்படி நான் அவளைப் போய் கேழ்க்கிறேன். மாட்டேனென்று சொல்லிவிட்டால் என்ன செய்கிறது.

சூரி. செய்வதென்ன உயிரை விடவேண்டியதுதான்.

புரு. அப்படி செய்யாதே. உலகத்தில் வேறு பெண்கள், இல்லையா.

சூரி. சினேகிதா சற்று முன் நீ என்ன சொன்னாய் உனக்கு மட்டும் உலகத்தில் வேறு ஸ்திரீகள் இல்லையோ.

புரு. நல்லது அவள் மாட்டேனென்றால் நாம் இருவரும் எங்கேயாவது தேசாந்தரம்போவோம். நல்லது நான் போய் பார்க்கிறேன். [போகிறான்.]

---

## அங்கம் 1—காட்சி 6.

சூரிய நாராயணன் பூந்தோட்டம்.

[ஸ்ரீமதி வருகிறாள்.]

ஸ்ரீமதி. ஆகா! என்று அந்த சுந்திர புருஷனைப் பார்த்தேனோ அன்று முதல் என் மனம் என்னிடத்தில் இல்லையே என்ன செய்வேன். அவர் என்னை சற்று நினைப்பாரோ அவர் யாரோ ஒன்றும் தெரியவில்லையே பேர் மட்டும் கேள்விப்பட்டேன். சகியிடம் சொல்லவும் வெட்கமாயிருக்கிறது. என் தகப்பனார் நான் குழந்தையாயிருக்கும் பொழுதே எனக்கு கலியாணம் செய்து வைத்திருக்கக் கூடாதா. அப்பொழுது எனக்கு இந்த கஷ்டமெல்

லாம் இராதே. இப்பொழுது என் மனம் ஒருவரிடமும், உடல் ஒரிவரிடமும் போய்விட்டால் என்ன செய்வேன். அவரைப் பார்த்த மாத்திரத்தில் நல்ல புத்திமானென்று தெரிந்தது. பணக்காரரோ ஏழையோ தெரியவில்லை பணக்காரராஞல் அவர் எங்கே என்னை லக்ஷ்யம் செய்யப் போகிருர் எனக்கு அவர் ஏழையாயிருந்தால் போதும்.
[சுந்தரி வருகிருள்.]

சுந்தரி. என்னடி ஸ்ரீமதி. உன்னை எங்கெல்லாம் தேடுகிறதம்மா எனக்கு கால் வலி எடுத்துவிட்டது. இங்கே வந்து இம் மல்லிகைக் கொடியை உற்றுப் பார்த்துக்கொண்டிருக்கிருயே. அக்கொடி எப்படி அக்கிளையை கட்டி தழுவிக்கொண்டிருக்கிறதோ அப்படி நாமும் இருக்கக் கூடாதாவென்று உனக்கு யோஜனையோ.

ஸ்ரீமதி. சுந்தரி உன் மன நிலைமையை நன்ருய் காட்டுகிருய். நான் அப்போ முதல் உனக்காக இங்கே காத்துக்கொண்டிருக்கிறேன்.

சுந். அதிருக்கட்டும் ஸ்ரீமதி உன் உடம்பென்ன அன்று சுந்தரமய்யர் வீட்டு ஊஞ்சலுக்குப் போனது முதல் ஏதோ ஒன்றை நினைத்து கவலைப்பட்டதுபோல இளைத்துக் கொண்டே வருகிறதே.

ஸ்ரீ. எல்லாம், என் மனது காரணம், நான் இளைத்து வருவதாகவும், கவலைப்படுவதாகவும் நினைத்துக்கொண்டால் அப்படியே தோன்றும்.

சுந். ஸ்ரீமதி என்னிடத்தில் ஏன் மறைக்கிருய். எனக்குத் தெரியாதா. நீ நினைக்கிற புருஷன் யார் சொல்லட்டுமா.

ஸ்ரீ. ஏது ஜோஸியம் கூட தெரிந்திருக்கிருயோ.

சுந். ஏண்டி, இது கூடத் தெரியாமல்போஞல் நான் உன் தோழியாயிருப்பானேன். அன்று உன் கண் எந்த புருஷன் மீது நாடுகிறதென்று பார்த்தேன். பிறகு அவர் யாரென்று விஜாரித்துக்கொணடேன்.

ஸ்ரீ. ஏண்டி அன்று நான் யார் முகத்தையாவது பார்த்தேஞ.

சுந். மனது அவர் யாரென்று நான் சொலலவில்லையே, என்று

தத்தளிக்கிறது. வெளியில் அதை மறைக்கப் பார்ப்பது போல் கேள்வி கேழ்க்கிறாய். கவலைப்படாதே அம்மா. அவர் பேர் புருஷோத்தமன். அவர் சுந்தரராஜய்யர் தமையன் பிள்ளை. ஸ்ரீமதியின் மனம் புருஷோத்தமனைத்தவிர வேறு யாரிடம் நாடும்.

ஸ்ரீ. கொள்ளிக்கட்டை போன்ற கண்களுடன் ஒருவர் அவர் பக்கம் உட்கார்ந்து என்னை சுட்டு விடுவார்போல் பார்த்தாரே அவர் யாரடி.

சுங். ஏண்டி இப்போ சற்று முன், நான் யார் முகத்தையாவது பார்த்தேனா என்று சொன்னாயே. இதெல்லாம் சாகஸம் தானே. அந்தக் கொள்ளிக் கண் சுந்தரராஜருடைய மற்றொரு முத்தண்ணா பிள்ளை சந்த்ரசேகரர், இப்போது அவர் தான் சுந்தரராஜர் சொத்து முழுமையும் அடைந்து அனுபவிக்கிறார்.

ஸ்ரீ. ஏண்டி இவருக்கு ஒன்றுமில்லையா. ஏன் அவர் மட்டும் அடையவேண்டும்.

சுங். இதற்குள் அன்பைப் பாரேன். இவருக்கு சொத்து எதற்காக. உன்னை அடைந்தால் அது போறாதா.

ஸ்ரீ. என்னடி சகி, கேலி செய்கிறாய். அவர் என்னை எங்கேடி நினைக்கப்போகிறார். அவருக்கு சொத்து இல்லையே என்று நான் வருத்தப்படவில்லை. தனக்கு சித்தப்பா சொத்து கிடைக்கவில்லையே என்று, எங்கே அவர் வருத்தப்படுகிறாரோ, என்பதற்கு கேட்டேன், அதிருக்கட்டும். எனக்கு ரோஜாப்பூ கொண்டுவரச் சொன்னேனே எங்கே.

சுங். ஓகோ மறந்துவிட்டேனே. இதோ கொண்டு வருகிறேன். (போகிறாள்.)

[புருஷோத்தமன் மற்றபுறமாக வருகிறான். ஸ்ரீமதி சங்கோஜத்தால் வேறு பக்கம் பார்ப்பதுபோல் நிற்கிறாள்.]

புரு. ஏது ஸ்ரீமதிபோலிருக்கிறதே. ஏது இங்குதனியாய்நிற்பது.

ஸ்ரீ. என் தோழி ரோஜாப்பூ கொண்டுவரப் போயிருக்கிறாள். அவளுக்காக காத்துக்கொண்டிருக்கிறேன்.

புரு. ரோஜா புஷ்பத்திற்கும், ரோஜா புஷ்பம் வேண்டுமோ. தாமரைப் புஷ்பத்தின்மீது நீலோத்பல புஷ்பம் இருக்கும்போது ரோஜாமட்டும் ஏன் இருக்கக்கூடாது.

ஸ்ரீ. தாங்கள் சொல்வது ஒன்றும் எனக்கு விளங்கவில்லையே.

புரு. ஸ்ரீமதி உனக்கு இது தெரியாதா. ஆனால் அந்த அர்த்தத்தை நான் சொன்னால் தான் உனக்கு கேழ்க்க சந்தோஷமாயிருக்கும். உன் முகம் தாமரை புஷ்பம் அல்லவா அதில் கண்களானநீலோத்பல புஷ்பங்களிருக்கின்றன அல்லவா.

ஸ்ரீ. என் பேர் ஸ்ரீமதி அல்லவே.

புரு. ஓகோ! உன்பேர் எனக்கு எப்படி தெரியுமென்று கேழ்க்கிறாயோ. என் பேர் எப்படி நீ தெரிந்துகொண்டிருக்கிறாயோ அப்படித்தான் நானும் தெரிந்துகொண்டேன்.

ஸ்ரீ. தங்களை எனக்குத் தெரியாதே.

புரு. ஸ்ரீமதி இதோ என்னை நிமிர்ந்து பார்த்து என்னைத் தெரியாதென்று சொல்லிவிடு சரிதான்.

[ஸ்ரீமதி, புன்சிரிப்புடன் தலை குனிகிறாள்.]

புரு. ஸ்ரீமதி உன்னிடம் ஒரு சமாச்சாரம் கேழ்க்க வந்தேன். கேழ்க்கவும் சங்கோஜமாயிருக்கிறது. உன் சகி எங்கே வந்து விடுவாளோ என்று யோஜனையாகவுமிருக்கிறது.

ஸ்ரீ. நல்லது என் சகியும் வந்து விடட்டும் அப்போது யோஜனையில்லாமல் சொல்லலாமல்லவா.

புரு. யோஜனையில்லாமல் சொல்லும் வார்த்தை சரியானதல்ல. ஆகையால் என் மனதிலிருப்பதை இப்பொழுதே சொல்லிவிடுகிறேன். என் சிநேகிதர் ஒருவர் ஒரு காரணத்தால் உருகிப்போகிறார். அவர் உயிர் உன்னிடத்திலிருக்கிறது. உனக்கு மனதிருந்தால் அவரைக் காப்பாற்றலாம். அவரும் மிகுந்த புத்திமான். உன் மனதை அறியாமல் நேரில் பார்ப்பதில் அவருக்கு இஷ்டமில்லை.

ஸ்ரீ. ஏன் அவருக்கு என்ன வியாதி. அதைச்சொன்னால் என் தகப்பனாரிடம் சொல்லி தகுந்த வைத்தியரை அனுப்புகிறேன்.

புரு. ஸ்ரீமதி நான் சொன்னதை அறியாதவள்போல் பேசுகிறாயே அவருக்கு வைத்யனால் ப்ரயோஜனமில்லை. அவருக்கு வேண்டிய வைத்யர் நீதான். உன்னைக் கண்டவுடனே மருந்தில்லாமலே அந்த வியாதி நீங்கிவிடும். நீ அவரைப் பற்றி சந்தேகிக்கவேண்டாம். நல்ல பணக்காரர். உன் மீது உயிரை வைத்தவர். நல்ல குணசீலன். நான் சொல்வதை நம்பு.

ஸ்ரீ. (தனிமையாக) இவர் சொல்வது ஒன்றும் தெரியவில்லை. இவர்தான் தானென்று நேரில் சொல்ல சங்கோஜப்பட்டுக்கொண்டு பிறருக்கு கேழ்க்கிறதுபோல் கேழ்க்கிறார். ஆனால் பணக்காரனென்கிறார் ஏதோ சந்தேகமாயிருக்கிறது. யோஜித்து தான் பதில் சொல்லவேண்டும். பார்ப்போம்.

புரு. ஸ்ரீமதி என்ன யோஜிக்கிறாய்.

ஸ்ரீ. ஒன்றுமில்லை. தாங்கள் இவ்வளவு கொண்டாடும் புருஷன் நேரில் ஒரு வார்த்தை சொல்லக் கூடாதாவென்று கொஞ்சம் யோஜித்தேன்.

புரு. அதைப்பற்றி நீ சந்தேகப்படவேண்டாம் நீ சம்மதித்தாயென்று தெரிந்தால் உடனே நேரில் பேசுவார்.

ஸ்ரீ. நான் சம்மதித்தேன்.

புரு. ஆகா! சந்தோஷம்; இனி சூரியநாராயணனை நேரில் வந்து பேசச் சொல்லுகிறேன். அவன் நல்ல அதிர்ஷ்டசாலி தான்.

ஸ்ரீ. (திகைத்து) என்ன சூரியநாராயணனா. அவருக்காகவா இவ்வளவு பேசினது தாங்கள்.

புரு. ஆம்! ஏன்? சூர்யன் பேர் சொன்னவுடனே மலரவேண்டிய உன் முகத்தாமரை வாடுகின்றது.

ஸ்ரீ. நான் மேலே சொல்லப்போனதை கவனிக்காமல் என்னைத் தடுத்து நீங்கள் ஏதோ சொல்லிக்கொண்டிருக்கிறீர்களே. சம்மதித்தேன் என்று வைத்துக்கொள்வோம். பிறகு நேரில் பேசுகிறவர் யாரென்றல்லவா கேழ்க்கவந்தேன்.

புரு. சூரியநாராயணன்தான் நேரில் பேசவருவான்.

ஸ்ரீ. அது முடியாதென்று சொல்லிவிடலாம். அவர் வீணில் சிரமப்படவேண்டியதில்லை.

புரு. ஸ்ரீமதி இது நிஜம்தானா கொஞ்சம் யோஜித்துச் சொல். உயிரைப்பற்றிய விஷயம் இது.

ஸ்ரீ. தகுந்த வைத்யம் செய்துகொள்ளச் சொல்லுங்கள். யோஜிக்கவேண்டியதில்லை. இது முடியாத காரியம்.

[சுந்தரி புஷ்பத்துடன் ஓடி வந்து]

சுந். சகி! (அதற்குள் புருஷோத்தமனை பார்த்து திகைத்து திரும்புகிருள்.)

ஸ்ரீ. சகி! என்னைத் தனியாய் விட்டுப்போகாதே. வீட்டிற்குப் போவோம் வா.

சுந். தனி என்ன! அவர்தான் துணை இருக்கிருரே.

ஸ்ரீ. இல்லேடி! வீட்டிற்குப் போகவேண்டும் வா.

[போகிருர்கள்.]

புரு. என் சிநேகிதனுக்கு இந்த சமாச்சாரத்தை நான் எப்படி சொல்லப் போகிறேன். அவன் உயிரை விட்டாலும் விடுவானே. என்ன செய்வேன். (போகிருன்.)

---

## அங்கம் 2—காட்சி 1.

### சந்த்ரசேகரன் வீடு.

[சந்த்ரசேகரன், ராமனுதன் வருகிருர்கள்.]

சந். ராமா உன்னை விஜாரித்துவரச்சொன்னேனே என்ன செய்தாய்.

ராம. அய்யா உமக்கு அந்த பெண் கிடைப்பது நிச்சயம்.

சந். (சந்தோஷத்துடன்) எண்டா நான் முன்னே சொல்லவில்லையா. யாரையடா விஜாரித்தாய்.

ராம. அவள் வீட்டு வாசல் கூட்டிபை விசாரித்தேன். மாட்டுக்காரனையும் விஜாரித்தேனையா.

சந். (திகைத்து) என்னடா இவர்களைத் தானு விசாரித்து எனக்கு தைரியம் சொல்லிவிட்டாய். அடே முட்டாள் உன்னையும் நான் நம்பி அனுப்பினேனே.

ராம. ஏனய்யா வீட்டு ரகசியம் வாசக்கூட்டிக்கும், மாட்டுக் காரனுக்கும் தெரியாமலிருக்குமா.

சங். நல்லது நீ போய் வா எனக்கு வேறு வேலை இருக்கிறது.
[ராமன் போகிறான்.]

ஆஹா! நான் என்ன செய்கிறது. (வேணி ஒளிந்து நிற்கிறாள்) என் மனம் ஸ்ரீமதியையே நாடி இருக்கிறதே. இந்தப் பயல் சொல்வது சுத்தப் பொய் அவளுக்கு என் மீது ப்ரியம் இருக்கிறதாக தெரியவில்லையே. ஒருவேளை நான் பணக்காரனென்பது அவளுக்கு தெரியாதோ. தெரிந்திருக்கலாமே அன்று அவள் குதிரை வண்டியில் போகும்போது நான் இரட்டை குதிரை சாரட்டில் போனேன் அவள் மோதிரம் கீழே விழுந்ததை எடுத்து நானே கொடுக்கப்போனதில் என்னையும் பாராமல் தன் சகியை வாங்கிக்கொள்ளச் சொன்னாளே. அதைப் பார்த்தால் சந்தேகமாய்த் தான் இருக்கிறது. சீ இனி இப்படி சந்தேகப்பட்டுக்கொண்டிருப்பதில் ப்ரயோஜனமென்ன. அவள் தனியே இருக்கும் சமயம் பார்த்து நேரே கேழ்க்கவேண்டும். ஆகா இவளுக்காகத் தானே நான் உயிலைக் கூட மாற்றி புருஷோத்தமனுக்கு அனுகூலமான உயிலை ஒளித்தேன். ஓகோ அதை கொளுத்தவேண்டுமே. எங்கே அதைப் பார்ப்போம் (சாவியை எடுத்து மேஜையைத் திறந்து உயிலை எடுத்துப் பார்த்து) ஆகா கிழவா. உன் வஞ்சனை என்னமாயிற்று இனி நாம் இதை வைத்திருக்கக் கூடாது. கொளுத்திவிடவேண்டும். (தீபத்தின் பக்கம்போய்) சீ இது என்ன யோஜனை, இதை வைத்திருந்தாலல்லவோ புருஷோத்தமனுக்கு நமது சாமர்த்தியம் தெரியும் அவனையும் நாம் அவமானப்படுத்தலாம். இருக்கட்டும் (மறுபடியும் மேஜையில் வைத்து பூட்டி சாவியை சட்டையில் போட்டுக்கொண்டு) இனி தாமதிக்கலாகாது. எப்படியாவது ஸ்ரீமதியை அடைய வழி தேடவேண்டும். என்ன செய்யலாம் (யோஜனையிலிருக்கிறான் வேணி வருகிறாள்).

ஸ்ரீமதி

**வேணி.** என்ன வெகு யோஜனையிலிருக்கிறீர்களே. என்னை இன்னாரென்று தெரிகின்றதோ.

சங். வேணி நீ ஏது இப்பொழுது இங்கே வந்தது. திடீரென்று எனக்கு முன் சமாச்சாரம் கூட கொடுக்காமல் நீ இங்கே வந்திருக்கிறாயே.

**வேணி.** புருஷர்களுக்கு ஸ்திரீகளை மறப்பது சகஜம் தானே. ஆனால் ஸ்திரீகள் அப்படி மறப்பார்களா. உங்களுக்கு என் ஞாபகமில்லாவிட்டாலும் நான் உங்களையே விஜாரித்துக்கொண்டிருக்கும்போது நீங்கள் திடீரென்று பணக்காரராகி செல்வத்தை அனுபவித்துக்கொண்டிருப்பதை கேட்டவுடன் நான் உங்களுடன் அந்த சந்தோஷத்தை அனுபவிக்க, நாள் நக்ஷத்திரம் பார்த்துக்கொண்டிருப்பதா. சமாச்சாரம் கேட்டேன். உடனே ஓடிவந்தேன்.

சங். ஓகோ நான் இத்தனை நாள் ஏழையாயிருந்ததால் வரவில்லை. இப்போது பணக்காரனாய் போனவுடன் பணத்தை அனுபவிக்க வந்துவிட்டாயோ.

**வேணி.** புருஷர்களுக்கெல்லாம் இம்மாதிரி கெட்ட எண்ணம் தோன்றுவது சகஜம்தானே என்னை விட்டு வந்தது யார் நீங்களோ, நானோ.

சங். வேணி, கோபித்துக்கொள்ளாதே கொஞ்சம் பேணி சாப்பிடுகிறாயா. மெத்த பசியாய் இருக்கிறாய்போல் தோன்றுகிறதே. கோபிக்காதே நான் வேடிக்கையாய் சொன்னேன் எனக்காக கொண்டுவரப்பட்ட பேணி இதோ இருக்கிறது எடுத்துக்கொள் இன்னும் கொண்டுவரச் சொல்லுகிறேன்.

**வேணி.** நீங்கள் எப்படி சொன்னாலும் நான் கேட்டுக்கொள்ள வேண்டியவள் தானே எனக்கு பசியாகத் தானிருக்கிறது ஏதாவது கொண்டுவரச் சொல்லுங்கள்.

சங். முன்னால் இந்த பேணியை எடுத்துக்கொள், வேணி. (கொடுக்கிறார்) யாரடா—அங்கே சீக்கிரம் தின் பண்டங்கள் கொண்டுவரச் சொல். வேணி—சற்று முன் நான் உன் ஞாபகமாகவேயிருந்தேன்.

**வேணி.** ஓகோ அதனால் தான் என்னைக் கண்டவுடனே அடித்து விடுவீர்கள்போல் பார்த்து திகைத்தீர்களோ. (ஆள் தின் பண்டம் வைக்கிறான்).

சங். வேணி எப்பொழுதும் உன் வேடிக்கைப்பேச்சை விடுகிற தில்லையே நீ. இதற்க்காகவே தான் உன்னை நினைத்தேன் வேணி.

**வேணி.** சரி இனி கோமாளி வேஷத்துக்கு ஒரு பெண் அனுப விப்பதற்க்கு ஒருபெண், 2 பெண்கள் அகப்பட்டார்கள்.

சங். என் காலை பிடிப்பதற்க்கு ஒரு பெண்ணும் மென்னைப் பிடிப் பதற்க்கு வேறு பெண்ணும் சேர்த்துக்கொள்ளுகிறது தானே.

**வேணி.** அதுவும் வரும் நான் உங்கள் பக்கத்திலிருந்து உங்களை பாதுகார்க்காவிட்டால்.

சங். நல்லது வேணி, நீ நன்றாய் பாடுவாயே. எங்கே ஒரு பாட்டு பாடு.

**வேணி.** நல்லது அப்படியே பாடுகிறேன் (பாடுகிறாள்) (ஆனந்த பைரவி) மஞ்சி தினமுநேடே, மக ருஜு கரம்மனே.

சங். (பாட்டு முடிந்த பிறகு) பேஷ் வேணி சமயமறிந்து பாடி னாயே. இதுதான் விசேஷம் உன்னிடத்தில்.

**வேணி.** சமயம் யாருக்கு உங்களுக்கா எனக்கா நீங்கள் யோஜித் திருந்த பெண்ணுக்கா.

சங். நான் யோஜித்திருந்த பெண்ணாகிய உனக்குத் தான்.

**வேணி.** இதெல்லாம் வீண்பேச்சு என்னிடம் நிஜத்தை சொல்லி விடுங்கள் இல்லாவிட்டால் நான் ஆணையிட்டுகேழ்ப்பேன்.

சங். நீ எத்தனை, ஆணையைவிட்டு கேட்டபோதிலும் உள்ளது தான் வரும்.

**வேணி.** சரி, அது கிடக்கிறது இனி நான் உங்களை விட்டுப் பிரி யாமல் இங்கேயே இருக்கலாமல்லவா.

சங். (யோஜித்து) இருக்கலாம் ஆனால்.

**வேணி.** சரி இனிமேல் நீங்கள், சொல்லவேண்டியதில்லை எனக்கு நோட்டீஸ் கொடுத்ததுபோல் தான். நான் இப்பொழு தே போகிறேன்.

சந். என்ன வேணி நான் முழுவதும் சொல்வதற்குள் எல்லா தீர்மானமும் நீயே செய்துகொள்கிறாயே எனக்கு இன்னும் ஒரு மாதத்திற்கு ஒழியாது. புதிதாய் வந்த சொத்தாதலால் வேலை அதிகமாக இருக்கிறது. இங்கே நீ இருந்தால் அந்த வேலை ஒன்றும் ஓடாது. அது தான் சொல்ல வந்தேன் இந்த ஒரு மாதமானதும் இந்த ராஜாங்கத்துக்கு நீ தான் ராணி.

**வேணி.** அது வரையில் வேணிதான் சரி நான் போய் வருகிறேன்.

சந். என்ன வேணி நான் இவ்வளவு சொல்லியும் உனக்கு த்ருப்தியாகவில்லையே. நீ இன்று இருந்துவிட்டுத் தான் போக வேண்டும்.

**வேணி.** நான் கேழ்க்கிறபடி நீங்கள் செய்வதானால் நான் இருக்கிறேன்.

சந். நீ என்ன கேழ்க்கிறாய் சொல் அந்தப்படியே செய்கிறேன்.

**வேணி.** (தலை குனிந்து) நான் இப்பொழுது கர்ப்பமாயிருக்கிறேன் நீங்கள் எனக்கு வாக்களித்தபடி கலியாணம் செய்து கொள்வீர்களென்று எனக்கு தோன்றவில்லை. ஆகையால் இன்னும் ஒரு மாதத்தில் என்னை கலியாணம் செய்து கொள்வதாக எழுதிக் கொடுங்கள்.

சந். வேணி பெண் புத்தி யென்பது சரியாயிருக்கிறது. (அவளை கட்டி முத்தமிட்டு) கண்ணே உனக்கேன் இந்த சந்தேகம். எழுதிக்கொடுத்துவிட்டு கலியாணம் செய்துகொள்ளாமல் போனால் நீ என்னை என்னசெய்யப்போகிறாய். கண்ணே உனக்கு வரும் அவமானம் எனக்கில்லையா. கவலைப்படாதே நேரமாகிறது உனக்கும் களைப்பாயிருக்கிறது தூங்குவோம் வா. (படுத்துக்கொள்ளப் போகிறார்.) வேணி உட்காருகிறாள். சற்று நேரத்திற்கெல்லாம் சந்த்ரசேகரன் தூங்கிப்போய் விடுகிறார்).

[வேணி மெள்ளஎழுந்திருந்து ஆணியில்மாட்டியிருந்த சட்டையிலிருந்து சாவியை எடுத்து மேஜையை திறந்து உயிலை எடுத்து தன் மடியில் வைத்துக் கொண்டு பூட்டி சாவியைசட்டையில்போடுகிறாள்.]

சந். (தூக்கத்தில்) ஸ்ரீமதி, ஸ்ரீமதி நீ அப்படி சொல்லாதே. நான் உன்னையே நம்பியிருக்கிறேன்.

**வேணி.** ஸ்ரீமதியின் பைத்தியமா உனக்கு வா சொல்லுகிறேன் வழி. ஒருக்கால் ஸ்ரீமதி சம்மதித்தபோதிலும், என் உயிர் உள்ளளவும் இந்த கலியாணம் நடக்கமாட்டாது. பார்த்துக்கொள்கிறேன். ஹா பாபி என்னை கலியாணம் செய்துகொள்வதாய் வாக்களித்து இந்த பாபியால் என் தாய் தகப்பன் எல்லோரையும் நான் விரோதித்துக் கொண்டிருக்க, நான் கர்ப்பமாயிருப்பது தெரிந்தும் இப்போது வேறு பெண்ணை கலியாணம் செய்துகொள்ள யோஜிக்கிறானே. சீ, இவனைக் காட்டிலும் காட்டில் சஞ்சாரம் செய்யும் சிங்கம், புலி இதுகளை கொடியதென்று சொல்லலாமோ. இருக்கட்டும் இவனுக்குத் தகுந்த சிக்ஷை செய்கிறேன்

(போகிறாள்.)

---

## அங்கம் 2—காட்சி 2.

சந்த்ரசேகரன் வீடு.

[சந்த்ரசேகரன் வருகிறார்.]

சந். ஆகா! ஸ்ரீமதியின் அழகைப் பார்த்தபிறகு இந்த வேணியை யாராவது லக்ஷ்யம் செய்வார்களா. நல்லவேளையாய் நான் சொன்னதை நம்பிப்போய் விட்டாள். அவள் இங்கே இருந்தால் என் காரியம் ஒன்றையும் முடிக்க விடமாட்டாள். ஆனால் பாபம் என்னையே நம்பி இருக்கிறாளே என்ன செய்கிறது. சீ! இதென்ன கெட்ட யோஜனை. அவளுக்கு என்னைப்போல எத்தனை பேர்கள் இருக்கிறார்களோ. தெரியாமலா அவளுக்கு தட்டுவாணி என்று பேர் வைப்பதற்கு பதிலாய் சுருக்கமாய் வேணி என்று பெயரிட்டிருக்கிறார்கள். அவளையாவது நான் கலியாணம் செய்து கொள்ளவாவது. எப்படியாவது ஸ்ரீமதியைப் பார்க்கவேண்டும். ஒரு வேளை அவள் தகப்பனார் நம்மை

கலியாணம் செய்து கொள்ளும்படி ஸ்ரீமதிக்குச் சொன்னால்கூட அவள் வீம்பாய் மாட்டேனென்றால் என்ன செய்கிறது. அதற்கு ஒரு யோஜனை செய்யவேண்டும். (யோஜித்து) ஆகா! இது ஒரு கஷ்டமா நமக்கு. உயிலை ஒரு நிமிஷத்தில் மாத்தின எனக்கு இது ஒரு சிரமமா. ஒரு யோஜனை தோன்றுகிறது. ஸ்ரீமதி தன் தகப்பனுக்கு ஏதாவது கஷ்டம் வந்தால் சகிக்கமாட்டாள். அப்போது அவள் தகப்பனை காப்பாற்றுவதாக வாக்கு கூறி அவளை சம்மதிக்கச் செய்யலாம். தகப்பனுக்கு கஷ்டம் வரும்படி எப்படி செய்கிறது. (யோஜித்து) ஒன்று செய்வோம். அவர் பணத்தை ஓர் பாங்கு ஏற்படுத்தி அதில் போடச் செய்வோம். பிறகு கடன் வாங்கியும் போடச்சொல்லி, வீட்டையும் ஈடு வைக்கச்செய்து கடைசியில் பாங்கை இன்சால்வெண்டுக்கு கொண்டு வந்தால் கடன் மிச்சமாகிறது. சொத்து போய்விடுகிறது. ஆம். இதுதான் சரியான யோஜனை. நாம் அன்று உயிலைக் கொளுத்த யோஜனை செய்தோமே கொளுத்தினோமா இல்லையா. கொளுத்திவிட்டோம்போலிருக்கிறதே என்னமோ நமக்கு வர வர ஞாபகம்கூட தடுமாறுகிறதே. ஸ்ரீமதியை கலியாணம் செய்யும் வரையில் இப்படித்தான் இருக்குமோ. இவ்வளவு சந்தேகம் எதற்கு மேஜையை திறந்து பார்த்தால் தெரிகிறது. (சாவியை சட்டையிலிருந்து எடுத்து திறந்து பார்த்து) ஓகோ கொளுத்திவிட்டோம். அதனால்தான் அது இங்கில்லை. (மறுபடி யோஜிக்கிறான்) இதென்ன என் ஞாபகம் இப்படி இருக்கிறது. நான் அன்று புருஷோத்தமனிடம் அதைக் காண்பித்து அவனை அவமானப்படும்படி செய்தபிறகு தான் கொளுத்த வேண்டுமென்று தீர்மானம் செய்து மேஜையிலேயே வைக்கவில்லையா. (மறுபடி யோஜித்து) இல்லை கொளுத்திவிட்டேன். தீபத்தினிடம் கூடகொண்டு போகவில்லையா அதை. ஓகோ இங்கே இப்படி காற்றில்லாமல் சற்று நேரமிருந்தால் நமக்கு பைத்யம் பிடித்து

விடும். சற்று வெளியே போய் காற்றை அனுபவிப்போம். (வெளியே போகிறான்.)

[சுந்தரய்யர், நாகராஜன் எதிரில் வருகிறார்கள்.]

சுந். சந்த்ரசேகரரே! எது வாக்கிங் புறப்பட்டீர்களோ. அண்ணா இவர்தான் சுந்தரராஜர் சொத்தை அடைந்த சந்த்ர சேகரர்.

நாக. நல்லது சந்தோஷம். உங்களைப் பார்த்தது நல்ல விசேஷம் தான். உங்களுக்கு தம்பி இருக்கிறார் அல்லவோ அவருக்கும் சொத்து கிடைத்திருக்கிறதோ.

சந். இல்லை. அவன் கெட்ட நடத்தை உள்ளவனென்று அவனைக் கண்டால் அவருக்கு பிடிக்காது. அதனால் ஒன்றும் கொடுக்கவில்லை.

நாக. சரிதான்.

சந். நானே தங்களை தெரிந்து கொள்ள வேண்டுமென்று ஆவலுடையவனாயிருந்தேன். நல்லவேளை கும்பிடப்போன தெய்வம் குறுக்கே எதிர்பட்டதுபோல் உங்கள் தரிசனம் கிடைத்தது.

நாக. தங்களுக்குஎங்கேயும் அவசரமாய்போகவேண்டியதில்லையே என் வீட்டுக்கு வாருங்களேன். சுந்தரய்யரும் அங்கே தான் வருகிறார்.

சந். ஒரு காரியமாய்த் தான் புறப்பட்டேன். ஆகிலும் அதற்கு அவ்வளவு அவசரமில்லை நாளை பார்த்துக்கொள்ளலாம். தாங்கள் கூப்பிடும்போது நான் வராமலிருப்பது நியாயமன்று. வீட்டில் ஏதாவது விசேஷம் உண்டோ.

நாக. ஒன்றுமில்லை, இன்றையதினம் ஸ்ரீமதி பிறந்த நாள். சில சினேகிதர்களை அழைத்திருக்கிறேன். அதற்காகத்தான் தங்களையும் கூப்பிட்டேன்.

சந். நல்லது இப்படிப்பட்ட சுபதினத்தில் எனக்கு உங்கள் சிநேகம் கிடைத்தது விசேஷம்தான். போவோம்.

[போகிறார்கள்.]

---

## அங்கம் 2—காட்சி 3.

### நாகராஜர் வீட்டில் ஒரு அறை.

[நாகராஜன், சுந்த்ரய்யர், சந்த்ர சேகரன் வருகிறார்கள்.]

நாக. ஸ்ரீமதி எங்கள் 3 பேருக்கும் காபி கொண்டு வா.

[ஸ்ரீமதி காபி கொண்டுவந்து சந்த்ர சேகரரைக் கண்டவுடன் முகத்தை திருப்பிக்கொண்டு, காபியை வைத்துவிட்டுப் போகிறாள்.]

சந். (தனக்குள்) அடாடா என்ன அழகு அழகுக்குத்தகுந்த அகம் பாவமும் இருக்கிறதே. என்ன செய்கிறது இருக்கட்டும். அதை அடக்குகிற விதமாய் அடக்குகிறேன்.

[நாகராஜர் காபியை பங்கிட்டு கொடுக்கிறார்.]

சுந். என்ன அண்ணா இந்த காபி ஒன்று பொல்லாத வஸ்து நாம் எங்கே போனாலும் நமக்கு முன்னே வந்து நிற்கிறது.

சந் காபி ஒன்று ஸ்த்ரீ ஒன்று இதுகளை நமக்கு நிந்திக்காமல் சரிப்படுகிறதில்லை அவைகளைவிட்டு பிரிந்தும் ஒரு நாழிகை கூட இருக்கவும் முடியவில்லை.

நாக. சந்தரசேகரரே சுந்த்ரராஜர் உமக்கு கொடுத்த ரொக்கம் ரொம்ப இருப்பதாகச் சொல்லுகிறீர்களே எவ்வளவு இருக்கலாம் நான் கேழ்க்கலாமோ.

சந். ஆகா தாங்கள் கேழ்க்கத் தடையென்ன 2, 3 லக்ஷமிருக்கும் அவருக்கு ப்ரியமான அற்புத நாடக பாங்கில் போட்டிருக்கிறார்.

நாக. அந்த பாங்கு எங்கிருக்கிறது எனக்கு தெரியவில்லையே.

சந். தாங்கள் பார்த்ததில்லையோ சென்னபட்டணத்தில் சமுத்ரக் கரையில் தானே இருக்கிறது. தங்கள் ரொக்கமெல்லாம் எந்த பாங்கிலிருக்கிறது

நாக. அந்த வழித்தெரிச்சலை ஏன் கேழ்க்கிறீர்கள் சுதேசி பாங்கில் போட்டிருக்கிறேன். அது பரதேசி பாங்காயிருக்கிறது. கேழ்க்கிற சமயத்தில் பணம் கிடைக்கிறதில்லை. ½ ரூ. வட்டி கொடுக்கிறார்கள் வட்டி அதிகம் கேட்டால் உன் பணத்தை வாங்கிப்போ என்கிறார்கள் உங்கள் பாங்கில் என்ன வட்டி வருகிறது.

சந். எனக்கு ¾ ரூ. வட்டி வருகிறது சில சமயம் அதிகமும் வருகிறது.

நாக. அப்படியானால் உங்கள் பாங்கை பார்க்கவேண்டும். ஏன் சுந்தரமய்யரே நமது பணத்தைக்கூட இந்த பாங்கிலேயே போட்டால் என்ன ?

சுந். தடையில்லாமல் போடலாம். முக்கால் வட்டி இந்த நாளில் யார் கொடுக்கிறார்கள். ஆனால் அதிக வட்டிக்கு ஆசைப்பட்டு கண்ட இடத்தில் கொடுத்தால் சில சமயம் வாங்குகிறவனுக்கு வட்டி நஷ்டமும் நமக்கு அசல் நஷ்டமும் வந்துவிடும்.

நாக. சந்த்ரசேகரரே இந்த பாங்கின் ரூல் தங்களிடமிருக்கிறதா.

சந். ரூல்கள், டைரக்டர்கள், ரிபோர்ட்டு எல்லாம் தங்களுக்கு அனுப்புகிறேன். சாவகாசமாய் பாருங்கள். தங்களையும் அங்கே கூட்டிப்போகிறேன். அங்கே வேலை நடக்கிற தினுசுகளையும் பாருங்கள்.

நாக. சந்த்ரசேகரரே, சுந்தரமய்யரே, இன்று ஸ்ரீமதி பிறந்த நாளாயிருப்பதால் அவளை கோவிலுக்கு அழைத்துக் கொண்டுபோய் பெருமாளை சேவித்து வருவோமா.

சுந். அப்படியே செய்வோம்.

நாக நான் உள்ளே போய் ஸ்ரீமதியையும் புறப்படச் சொல்லுகிறேன்.

[சுந்தரய்யர் வெளியில் போய் நிற்கிறார்.]

நாக. ஸ்ரீமதி நீ கோவிலுக்கு புறப்பட வேண்டாமா. சீக்கிரம் புறப்படு.

ஸ்ரீ. இதோ புறப்படுகிறேன் அப்பா. நீங்கள் முன்னமே சொல்லி யிருந்தால் இந்நேரம் நான் தயாராயிருப்பேன். (மெள்ள) ஏனப்பா அவர் போய்விட்டாரா.

நாக. ஏன்? அவர் போகவில்லை. இங்கே தான் இருக்கிறார்.

ஸ்ரீ. (திகைத்து) கோவிலுக்கும் வருவாரோ.

சங். (தனக்குள்) என்ன அவளுக்கு நாமும் கோவிலுக்கு வர வேண்டுமென்று இருக்கிறதுபோல் தோன்றுகிறதே.

நாக. ஏன் வந்தால் என்ன. வரத்தான் போகிறார். நான்தான் அவரையும் கோவிலுக்கு அழைத்தேன்.

ஸ்ரீ. அப்பா நீங்கள் மட்டும் போய் வாருங்களேன் நான் என்னத் திற்கு வரவேணும்.

சங். (தனக்குள்) என்ன ஜாலம். மனதில் நானும் வரவேண்டு மென்றிருக்கும்.

நாக. என் ஸ்ரீமதி அவர் உன்னை என்ன செய்கிறார்.

ஸ்ரீ. இல்லை அப்பா. சுந்தரி கூட இங்கே இல்லை. அதிலும் அவர் என்னைப் பார்த்து உருட்டி உருட்டி முழிக்கிறதை பார்த்தால் எனக்குப் பயமாயிருக்கிறதே.

நாக. பயமென்ன நாங்கள் கூட வருகிறோமல்லவா புறப்படு.

சங். (திகைத்து) ஆகா என்னை கண்டால் பயமாயிருக்கிறதாம். ஏது இவள் இருக்கிற தினுசை பார்த்தால் வேறு ஒரு வன் மீதுதான் காதல்கொண்டிருக்கிறாள் போலிருக்கி றது. அவன் இன்னானென்று தெரியவில்லை. அதை யும் தெரிந்துகொண்டு தகுந்த உபாயம் தேடவேண்டும். கோவிலில் இவளுடன் தனித்து பேசக்கூடிய சமயமும் நேர்ந்திருக்கிறது. பார்ப்போம். (நாகராஜர் ஸ்ரீமதியை அழைத்து வர எல்லோரும் போகிறார்கள்.)

---

## அங்கம் 2—காட்சி 4.

### கோவில் முன்பாக.

[நாகராஜய்யர், சுந்தரய்யர், சந்த்ர சேகரன், ஸ்ரீமதி வருகிறார்கள்.]

நாக. ஸ்ரீமதி இந்த ப்ராகாரத்தை சுற்றி வருவோமா.

ஸ்ரீ. அப்பா கால் வலிக்கிறது. நீங்கள் சுற்றி வாருங்கள். நான் இங்கேயே இருக்கிறேன் (தனக்குள்) இந்த சனி சற்று தொலையட்டும்.

நாக. சரி நாம் ப்ராகாரம் சுற்றி வருவோம் வாருங்கள் (மற்றவர்கள் போகிறார்கள்.)

ஸ்ரீ. இந்தச் சனியும் சற்று நேரத்திற்கு துலைந்தது, இன்றைக்கு விடிந்ததும் யார் முகத்தில் விழித்தேனோ தெரியவில்லை. 7½ நாட்டு சனியன் என்பது இதுதான் போலிருக்கிறது. பிடித்து 3 நாழிகை ஆகிறது. மீதி 4½ நாழிகையும் போகவேண்டும். அது போயும் விடுமோவிடாதோ தெரியவில்லையே. இது வந்ததை அந்த தம்பி வந்திருக்கக் கூடாதா அண்ணனுக்கு எட்டாதது தம்பிக்கு எட்டுமென்று சொல்வார்களே அவரைக் காணோமே. அய்யோ மறுபடியும் வந்துவிட்டதே சனியன்.

[சந்த்ரசேகரன் வருகிறார்.]

சந். (தனிமையாக) எனக்கு இங்கே இருந்து அவளிடம் பேச வேண்டுமென்று ஆசை இருந்தும் எங்கே நாம் இருப்பதாகச் சொன்னால் இவளும் ப்ராகாரம் சுற்ற புறப்பட்டு விடுவாளோ என்று நான் அவர்களுடன் கூடப் போவது போல கொஞ்சம் போய் அவர்களை அனுப்பி வந்துவிட்டேன். அவர்கள் வர இன்னும் ½ மணி நேரம் ஆகும். அதற்குள் இவளுடன் பேசி இவளை நமக்கு இசையும்படி செய்யவேண்டும். (உறக்க) ஸ்ரீமதி அந்த தாம்பாளத்தை இப்படி கொடு. நான் சற்று வைத்திருக்கிறேன். உன் மெல்லிய கை இந்த தாம்பாளத்தை தாங்காது.

ஸ்ரீ. என் கையிலேயே இருக்கட்டும் அதில் கனம் ஒன்றுமில்லை.

சந். இருந்தபோதிலும் நான் சற்று வைத்திருக்கிறேன்.

ஸ்ரீ. நீங்கள் மடி இல்லை. உங்களிடம் கொடுக்கக் கூடாது.

சந். ஸ்ரீமதி உன்னிடம் ஒரு சங்கதி பேசவேண்டும். சற்று உட்காரமாட்டாயா.

ஸ்ரீ. நான் நின்றே கேட்கிறேன் சொல்லுங்கள்.

சங். ஸ்ரீமதி நான் யார் தெரியுமா, உனக்கு.

ஸ்ரீ. புருஷோத்தமனுக்கு தமயனென்று கேள்விப்பட்டிருக்கிறேன்.

சங். ஆகா! அந்த பாபர் பயல் மூலமாய்த்தான் என் பெயர் தெரியவேண்டுமோ. என்ன ஸ்ரீமதி என்னை இப்படி அவமானப்படுத்துகிறாயே. நான் மிகுந்த பணக்காரனல்லவா. என் பேரைக்கொண்டு அந்தப்பயல் பிழைக்க வேண்டியிருக்க அவன் பேரைக்கொண்டா என்னைத் தெரிந்துகொள்கிறது.

ஸ்ரீ. நான் சொன்னால், அவரை ஏன் பயலென்றும் பரட்டையென்றும் வைகிறீர்கள். இப்பொழுது அவர் பேரைக் கொண்டுதான் உம்மை தெரிந்திருக்கிறேன், இவ்வளவு அசிகையுள்ளவரென்று.

சங். நான் அசிகையினால் சொல்லவில்லை உலகத்தில் ஒருவரைத் தெரியவேண்டுமானால் அவருக்கும் மேலானவரை சுட்டிக்காட்டி அவருக்கு இன்ன உறவென்று சொல்வது வழக்கம்.

ஸ்ரீ. நான் அப்படித்தானே சொல்லியிருக்கிறேன்.

சங். சரி நான் இது விஷயத்தில் உன்னிடம் சண்டை செய்ய வரவில்லை. உன் கலியாண விஷயமாய் கேழ்க்க வந்தேன்.

ஸ்ரீ. அது என் தகப்பனார் பொருப்பல்லவா. நீங்களேன் அதைப் பற்றி கவனிக்கவேண்டும்.

சங். என்ன ஸ்ரீமதி ஒன்றும் தெரியாதவள்போல் கேட்கிறாயே. நான் உன் கலியாண விஷயத்தை கவனிக்கிறதுபோல நீ என் கலியாண விஷயத்தை கவனிக்கவேண்டாமா.

ஸ்ரீ. இரண்டும் வேண்டாம். தாங்கள் இது விஷயத்தில் சிறமம் எடுத்துக்கொள்ளாமலிருந்தால் அதுவே போதும்.

சங் கிடக்கிறது. நீ என் கலியாண விஷயத்தை கவனிக்காத போதிலும், நான் உன் கலியாண விஷயத்தை கவனிக்கிறேன். ஸ்ரீமதி வெகு காலமாய் நான் ஒரு பெண்ணையும் லக்ஷியம் செய்வதில்லை. அவர்களைக்கண்டால் முகத்தைத் திருப்பிப் போவேன். பெண்ணின் மீது ஆசை

யுண்டாகும்படி செய்தது நீயே. உன்னைப்பார்த்தது முதல் நான் வேறு ஒரு பெண்ணையும் பார்க்கிறதில்லை. எப்படியாவது உன்னை கலியாணம் செய்துகொள்ள வேண்டுமென்ற ஆவலே எனக்கு மேலிட்டிருக்கிறது. என்ன சொல்லுகிறாய்.

ஸ்ரீ. ஆவல் மேலிட்டிருந்தால் அது சீக்கிரம் தொலைந்துவிடும். உள்ளே யிருந்தால் தானே தொலைவது கஷ்டம்.

சந். நான் நல்ல பணக்காரன். உனக்கு நகைகள் ஏராளமாய் போடுவேன்.

ஸ்ரீ. நான் பணக்காரரையே கலியாணம் செய்துகொள்கிறதில்லை யென்று விருதம்கொண்டிருக்கிறேன். நகைபோடும் புருஷனைப்பார்த்து நகைக்கவும் எனக்கு தெரியாது. இதெல்லாம் ஏன் வீண்பேச்சு. என்னிடம் இந்தப் பேச் செல்லாம் பேசவேண்டாம். என் தகப்பனார் தாக்ஷிணி யத்திற்காக உதாசீனமான பதில் நான் உங்களுக்குச் சொல்லவில்லை.

சந். ஸ்ரீமதி நீ கோபித்துக்கொள்வது நியாயமன்று. ஆனால் ஸ்த்ரீ கள் கோபிப்பதுபோல் நடிப்பது வழக்கந்தான். உன் னுள்ளத்தில் உள்ளதை உள்ளபடி சொல்லிவிடு. பிறகு நான் போய் விடுகிறேன்.

ஸ்ரீ. (கோபமாய்) நான் கோபம்போல் உம்மிடம் ஒன்றும் நடிக்க வரவில்லை. இது நாடகமன்று உள்ளதைத்தான் சொல் லுகிறேன். உள்ளத்திலொன்றும் வெளியிலொன்று மாயிருப்பது என் சுவபாவமன்று. தாங்கள் போகலாம். இனி என்னிடம் பேசினால் அவமரியாதை கிடைக்கும். (முகத்தை திருப்பிக்கொள்ளுகிறாள்.)

சந். (தனிமையாக) இனி இவளிடம் பேசுவதில் பிரயோஜன மில்லை. இவள் வீட்டில் புறப்படும்போதே சொன்னது போறாதா. இனி நமது யோஜனைப்படி முடிக்கவேண் டியதுதான். ஸ்ரீமதி இருக்கட்டும். நீ அலக்ஷ்யம் செய் யும் சந்த்ரசேகரனை இப்படிப்பட்டவனென்று அறிய மாட்டாய். உன்னை அறியும்படி செய்து உன்னை நாய்

போல் என்னைத்துடரும்படி செய்யாமல் போனால் நான் சந்த்ரசேகரனா.

[நாகராஜர், சுந்தரமய்யர் வருகிறார்கள்.]

**நாக.** ஸ்ரீமதி நாமெல்லோரும் கோவிலுக்குள் போவோமா.

[எதிரில் ஓர் அய்யங்கார் வர அவர் காதில் சுந்தரமய்யர் ஏதோ சொல்கிறார்.]

**அய்யங்கார்.** அய்யர்வாள் வரவேணும்; அம்மா வாசற்படி பார்த்து வாருங்கள். எங்கேயாவது தடுக்கப்போகிறது.

**நாக.** பெருமாள், இன்று கோவிலில் கூட்டம் அதிகமாயிருக்குமோ.

**அய்.** என்ன அய்யர்வாள் எவ்வளவு கூட்டத்திலும் தங்களையும் அம்மாளையும் ஒருவரும் மேலே படாமல் தரிசனம் செய்து வைக்க மாட்டேனா வாருங்கள்.

---

## அங்கம் 2—காட்சி 5.

### கோவிலுக்குள்

[சுவாமி தரிசனம் ஆகிறது. அய்யங்கார் நக்ஷத்திரம் கேட்டு அர்ச்சனை செய்கிறார். ஒரு தாசி பாடுகிறாள். (காபி ராகம்) தேவா, தேவா, சாயா மனோகரா.]

**ஒரு சாஸ்திரிகள்.** மேகசியாமம் என்று சுலோகம் சொல்லிக்கொண்டே தாசியை பார்த்தவண்ணம் நிற்கிறார்.

**ஓர் பிரபு.** சுவாமி பிரபோ எனக்கு இவ்வளவு செல்வமிருந்தும் ஒரு பிள்ளை இல்லையே. எப்படியாவது அனுக்ரகம் செய்யவேண்டும்.

**ஓர் ஏழை.** பிரபோ குடிக்கக்கஞ்சியில்லை. வருஷம் ஒன்றுக்கு ஒரு பெண் பிறக்கிறதே. இதற்கு நான் என்ன செய்வேன் எனக்கு ஜீவனத்தைக் கொடும். இல்லாவிட்டால்

இந்தப் பெண்ணையெல்லாம் நீர் கலியாணம் செய்துகொடும். இல்லாவிட்டால் என்னை கேலி செய்யும் அடுத்தாத்து சுப்பனுக்கு 10 பெண்ணைக் கொடும்.

**ஓர் தாசில்தார்.** பிரபோ எனக்கு கீழ்பட்டவனுக்கெல்லாம் டிப்டி கலெக்டர் வேலை கிடைத்துவிட்டதே. எனக்கு கிருபை செய்யக்கூடாதா.

**ஓர் உபாத்தியாயர்.** பிரபோ 10 வருஷமாய் பொது நன்மைக்கு நான் உழைத்திருக்க ஒரு சிறமுமில்லாமல் வக்கீல் சுந்தரய்யர் திவான் பகதூர் பட்டத்தை அடித்துக்கொண்டு போய்விட்டாரே. இதுவும் உமது திருவிளையாடலோ.

[தீபாராதனை ஆகிறது. எல்லோரும் கன்னத்தில் போட்டுக் கொள்கிறார்கள்.]

**ஒருவர்.** சன்னதி விடுங்கோ. மறைக்காதேயுங்கள்.

[அய்யங்கார் தீபாராதனை காண்பித்து துளசிதீர்த்தம் கொடுத்து சடகோபம் சேவித்து தக்ஷணைக்கு காத்திருக்கிறார். நாகராஜர் ரூ. 1 கொடுக்க அய்யங்கார் பல்லைக் காட்டிக்கொண்டு]

**அய்.** பிரபுக்களெல்லாம் இப்படி கொடுத்தால் ஏழையாகிய நாங்கள் எப்படி பிழைக்கிறது.

[நாகராஜர் மறுபடி ரூ. 1 கொடுக்க அய்யங்கார் சந்தோஷத்துடன்]

**அய்.** நீங்கள் அமோகமாயிருக்கவேணும். உங்கள் குழந்தைக்கு சீக்கிரம் ஒரு குழந்தை பிறக்கவேணும். (போகிறார்கள்)

**ஒருவர்.** என்ன ஓய் அய்யங்காரே குழந்தைக்கு இன்னும் கலியாணமே ஆகவில்லை தெரியாமல் இப்படிச்சொல்லலாமா.

**அய்.** (தனி) அப்படியா எனக்கு தெரியவில்லையே. என்ன ஆச்சரியம். இந்தப்பெண் சாந்தி முகூர்த்தமான பெண்போலிருக்கிறாள் இன்னும் கலியாணம் ஆகவில்லையாம். என்ன கலிகாலத்தின் கூத்து. ஓகோ ஏதோ ருதுவான பிறகு

தான் கலியாணம் செய்கிறதென்றும், ஜாதி பேதமில்லாமல் விவாகம் செய்யலாமென்றும், சிலர் ஏற்பாடு செய்திருக்கிறார்களாமே. இதில் அவர் சேர்ந்தவர்போலிருக்கிறது நடக்கட்டும். நமக்கென்ன ராமனுண்டாலென்ன, ராவணனுண்டாலென்ன. நம்ம தக்ஷிணையும் பொங்கல் புளியோதரையும், குறையாமல் நமக்கு வரும்படி எம்பெருமாள் பார்த்துக்கொண்டால் அதுவே நமக்கு போதும். (போகிறார்.)

---

## அங்கம் 2—காட்சி 6.

சென்னப்பட்டணம்.

[நாகராஜர், சந்த்ரசேகரர் வருகிறார்கள்.]

நாக. சந்த்ரசேகரரே உமக்கு என்னால் எவ்வளவு சிரமம். இதற்க்கு தகுந்த பிரதி உபகாரம் என்ன செய்யப்போகிறேன். எனக்காக உங்கள் தேகசிரமத்தை கொஞ்சமும்பாராமல் இந்த பட்டணத்திற்கு கூட்டி வந்தீரே—உமதுபாங்கு எங்கே இருக்கிறது.

சந். இதோ நாம் ஹைகோர்ட்டு பக்கம் வந்திருக்கிறோம். இந்த மூலே திரும்பினவுடனே பெரிய பீச் வீதியிருக்கிறது. அதில் தான் நமது பாங்கு இருக்கிறது.

நாக. சந்த்ரசேகரரே பட்டணம் இப்போது எவ்வளவு மாறியிருக்கிறது பார்த்தீரா. முன் மின்சார வெளிச்சமே கிடையாது. இப்போது திடீரென்று வெளிச்சம் வருகிறது. வந்ததுபோல் போய்விடுகிறது. போய்விட்டால் விளக்கு நெருப்பு பொட்டி அகப்படாது. இருட்டில் திண்டாடவேண்டியதுதான்.

சந். முன் காப்பி கிளப்பெல்லாம் பெஞ்சி மட்டும் போட்டிருப்பார்கள். இப்போது மேஜை, நாற்க்காலி, பீங்கான்கிண்ணங்கள், ஸ்பூன் சகிதமாயிருக்கின்றன. நாமும் வெள்ளைக்காரர் மாதிரி ஆகின்றோம்.

நாக. எங்கே பார்த்தாலும், காபி கிளப், கிளப் என்று போட்டிருக்கிறார்களே யொழிய காபியை ஊரை விட்டு, கிளப்புகிற வழியைக்காணோம்.

சங். இதுதான் நமது பாங்கு.

நாக. (நிமிர்ந்து பார்த்து) ஆஹா! எவ்வளவு பெரிய கட்டடம்.

சங். மாடியில் ஆபீசெல்லாம். உயர போவோம் வாருங்கள். (உயர போகிறார்கள்) ஆபீஸில் இப்போது வேலை அதிகம். நாம் முதலில் மானேஜர் விசுவேசுவரரை பார்ப்போம். ஓகோ அவரே இதோ வருகிறார்.

[விசுவேசுவரர் வருகிறார்.]

விசு. வரவேணும்.

சங். உங்களுக்கு வேலை அதிகமாயிருக்கும் நான் கொடுக்கும் சிறமத்தை மன்னிக்கவேண்டும். இவாள் நாகராஜர் என்ற ஓர் பிரபு. மிகுந்த பணக்காரர். அவருக்கு நமது பாங்கில் துகை போடவேண்டுமென்று ஆசை. நமது ரூல் ரிபோர்ட்டு எல்லாம் பார்க்க வந்திருக்கிறார்.

விசு. இப்போது கொஞ்சகாலமாய் ரூ. 10,000க்கு குறைந்த துகை வாங்குகிறதில்லை என்று ஏற்பாடு செய்திருக்கிறது. எல்லோரும் இந்த பாங்கிலேயே போடவேண்டுமென்று வருகிறார்கள். நாங்கள் என்ன செய்கிறது.

சங். நல்ல பாங்காயிருந்தால் எல்லோரும் தான் தங்கள் பணங்களை போடப் பார்ப்பார்கள். அதிலும் பாப்பார்கள் பார்ப்பாரைப்பார்த்தே ஆடுபோல் நுழைய பார்ப்பார்கள்.

விசு. ஆனால் அய்யர்வாள் லக்ஷக்கணக்காய்த்தானே போடுவார். அவர் இங்கே போடத்தடை என்ன இருக்கிறது. சற்று தயவுசெய்து வாருங்கள் நமது பாங்கு வேலை செய்வதைப் பாருங்கள். (பெரிய ஹாலுக்கு வருகிறார்கள். ஓர் இடம் கூட்டமாயிருக்கிறது).

ஒருவர். முதலியார்வாள் ரூ. 20,000 ஒரு செலான் கொடுங்கள். பேர் தெய்வநாயகம் பிள்ளை.

வேறு ஒருவர். அய்யா ரூ. 30,000 அமீர் சாயபு.

வே-ஒ. அய்யா 40,000 பகவன்சிங் ஏனய்யா அவசரமென்ன ஏன் இப்படி நெருக்குகிறீர்கள் ரயில்வே டிக்கட் வாங்குகிறதுபோல்.

வே-ஒ. அய்யா! அதைத்தான் நானும் உம்மைக்கேட்கிறேன்.

வே-ஒ. (குறுக்கே புகுந்து) அய்யா 5000 திருமலைபிள்ளை.

சேவுகன். (அவரை வெளியில் இழுத்துவிட்டு,) அடுத்த வருஷம் வாருங்கள் பார்க்கலாம். இப்போது 10,000-க்கு குறைந்தது வாங்குகிறதில்லை. (கூட்டத்தைப் பார்த்து) அய்யா நீங்கள் இப்படி சேர்ந்தால்போல் கேட்டால் முதலியார் எதை கவனிக்கிறது.

ஒரு. சேவகனிடம் தனியாய் போய் அய்யா இங்கே வாரும்.

சே. (தனிமையாய்ப்போய்) ஏங்காணும் கூப்பிட்டீர். உமக்கும் நமக்கும் என்ன ரகசியம் இருக்கிறது. முன் தடவை வந்தீரே. என்னை திரும்பிப்பார்த்தீரா.

ஒரு. அப்பா-நீ கோபித்துக்கொள்ளாதே. இந்தா ரூ. 1 வைத்துக்கொள். முதலியாரிடம் சொல்லி என்னை முன்னால் கூப்பிடச் சொல்.

சே. (ரூபாயை எறிந்து) என்ன ஓய் நான் லஞ்சம் வாங்குகிற பேர்வழியா உம்மை போலீஸில் ஏன் காட்டிக் கொடுக்கக் கூடாது.

அவர். இந்தாப்பா இன்னும் ரூ 1 வைத்துக்கொள். என் காரியத்தை முடித்துக் கொடு.

சே. (இரண்டு ரூ. எடுத்துக்கொண்டு சந்தோஷத்துடன்) அப்படி இல்லை. அய்யா நான் லக்ஷம் ரூ. கொடுத்தாலும் வாங்குவேனா. வீட்டில் சம்சாரம் 10-ம் பிரசவமாகி பெண் பிறந்து அதிலும் சீக்காயிருக்கிறாள். வைத்தியருக்குக் கொடுக்க கையில் பணமில்லை. வாரும் முதலியாரிடம்.

ஒரு. (இந்த சமயம் முதலியாரிடம் போய்) முதலியார்வாள் என்னை தெரியாதா தங்களுக்கு. போன வருஷம் தாங்கள் ஒருநாள் என் வீட்டில் வந்திருந்து போகும்போது கூட ஒரு பலாப்பழம் நான் கொடுக்கவில்லையா.

நாக. எனக்காக தாங்கள் இவ்வளவு உபகாரம் செய்கிறீரே. இதற்கு நான் என்ன பிரதி செய்யப்போகிறேன்.

சங். (தனியாக) உமது பெண் தான் பிரதி உபகாரம் (உறக்க) அய்யா உபகாரம் செய்வதில் பிரதி உபகாரத்தை எதிர் பார்க்கக் கூடாது. போன வருஷம் நான் ஜுரத்தால் கஷ்டப்பட்டபோது துறைசாமி என் பக்கத்திலேயே இருந்து ஒத்தாசை செய்தான் அவனுக்கு நான் பிரதி உபகாரம் செய்யக் கூடியது ஒன்றுமில்லை. அவனுக்கு என்னைப்போல் ஜுரம் வந்தால் தான் நான் பிரதி உபகாரம் செய்யலாம்.

நாக. வேண்டாம்-வேண்டாம். அப்படிப்பட்ட பிரதி உபகாரத்தை நான் எதிர் பார்க்கவில்லை. இனி நாம் ஊருக்குப் போய் சீக்கிரம் நமது துகையை இந்த பாங்கில் போட ஏற்பாடு செய்யவேண்டும்.

விசு. அய்யர்வாள் நீங்கள் அதற்குக் கூட சிறமப்படவேண்டாம். இதோ நான் சிலான் தருகிறேன் அந்த பாங்கிலிருந்து தாங்கள் தங்கள் துகையை cheque ஆக வாங்கி அதை இந்த சிலானில் வைத்து தபாலில் ரிஜிஸ்டர் செய்து அனுப்புங்கள் மற்றவைகளை நான் பார்த்துக்கொள்கிறேன்.

நாக. அப்படியே செய்கிறேன் நல்லது நான் போய் வருகிறேன்.

சங். நானும் போய் வருகிறேன் (போகிறார்கள்.)

நாக. (ஓர் ட்ராம் வண்டி வருவதைப் பார்த்து) சந்த்ரசேகரரே இதென்ன ட்ராமில் ஒருவர் கைமேல் ஒருவர் கைபோட்டு கூட்டமாய் நிற்கிறார்களே. ஏதாவது சண்டையோ. அய்யோ ஒருவர் கீழே விழுந்துவிட்டாரே.

சங். இல்லை டிராமில் தினந்தோறும் இப்படிக் கூட்டந்தான். ஜனங்கள் உட்கார இடமில்லாமல் இப்படி நிற்கிறார்கள். சிலர் அவசரமாய் வண்டி ஓடும்போதே இறங்க தெரிந்தது போல் இரங்கி விடுகிறார்கள் பிறகு கீழே விழுகிறார்கள். இதெல்லாம் டிராம் வண்டிக்கு சகஜம் (போகிறார்கள்.)

---

## அங்கம் 2—காட்சி 7.

### சூரிய நாராயணன் தோட்டம்.

[புருஷோத்தமன், சூரிய நாராயணன் வருகிறார்கள்.]

புரு. (வாடின முகத்துடன்) சிநேகிதா நீ இவ்வளவு ஆவலுடன் காத்திருப்பவனுக்கு பதில் நான் என்ன சொல்வேன்.

சூரி. சிநேகிதா உன் முகத்தைப் பார்க்கும்பொழுதே பதில் தெரிகிறதே.

புரு. ஆம்.

சூரி. சரி. இனி தீர்ந்தது. என் பிராணனை விடவேண்டியது தான்.

புரு. சிநேகிதா கேவலம் ஒரு ஸ்திரீக்காக நீ பிராணனை விடலாவது.—ஏதோ கடவுள் ஸ்திரீயை கலியாணம் செய்து கொள்வதற்காகத் தான் நம்மை சிருஷ்டித்தார் போலும். இந்த ப்ராணன் இருக்கிறமட்டும் நாம் பிறருக்கு உபகாரமாயிருந்து அது வந்தது போல போகவேண்டுமே யொழிய நாமொன்றும் செய்யக்கூடாது. மேலும் உன் உயிர் என்று சொல்கிறாயே ஒழிய அது கூட சர்க்காரைச் சேர்ந்ததல்லவா. நீ பிராணனை விட முயன்றால் உன்னை தண்டிப்பார்களே.

சூரி. சிநேகிதா நீ சொல்வது நியாயந்தான். எனக்கும் ஒரு யோஜனை தோன்றுகிறது. நான் காசிக்குப்போய் இந்த ஆசையெல்லாம் மறக்கிறேன். நான் ஒன்றுமட்டும் உன்னைக் கேட்டுக்கொள்கிறேன். நீ எங்கேயும் போகாமல் அவளுக்கு ஒரு தீங்கும் வராமல் அவளை பாதுகாக்கவேண்டும்.

புரு. (அவனை கட்டிக்கொண்டு) சிநேகிதா உன்னை விட்டுப் பிரிந்து நான் எப்படி யிருப்பேன். எனக்கு உன்னைப்போல் சிநேகிதன் யாரிருக்கிறான். நானும் வருகிறேன் நாமிருவரும் போவோம்.

சூரி. அப்படியல்ல. அவள் உன்னை கலியாணம் செய்துகொள் வாள் என்று என் மனதில் தோன்றுகிறது. அப்படிச் செய்துகொண்டாலும், செய்யாவிட்டாலும் நீ இங்கிருந் து அவளை காப்பாற்று நான் போய் வருகிறேன்.

புரு. சிநேகிதா நான் உன் இஷ்டப்படி செய்கிறேன். ஆகிலும் நீ அடிக்கடி எனக்கு கடிதம் எழுதிக்கொண்டிருக்கவேண் டும். உன் ஞாபகத்திற்கு எனக்கு ஏதாவது கொடுக்க வேண்டும்.

சூரி. இந்தா, இந்த போட்டோவை வைத்துக்கொள்.

புரு. (அதைப் பார்த்து) சிநேகிதா என்ன என் போட்டோவை கொடுக்கிறாயே, உன் போட்டோவல்லவா எனக்கு நீ கொடுக்கவேண்டும்.

சூரி. சிநேகிதா நீ இதை வைத்துக்கொள் என்னிடம் வேறொன் றிருக்கிறது. என் போட்டோ நீ எடுத்துக்கொள்ள வேண்டியதுதான். சரி நான் போய் வருகிறேன்.

[போகிறான்.]

புரு. (தனி) சூரியநாராயணன் சொல்வதும் உண்மை தான் போ லிருக்கிறது. அன்று நான் ஸ்ரீமதியிடம் இவனைப்பற்றி பேசுகிறபோது இவன் பேர் சொல்லுகிற வரையில் அவள் முகம் என்ன சந்தோஷத்தைக் காட்டியது. வெகு சீக்கிரத்தில் சம்மதமென்றாள். இவன் பேர் சொன்ன வுடனே அவள் முகமலர்ச்சியெல்லாம் எங்கேயோ போய் பிறகு சம்மதமென்று சொன்னதைக் கூட தந்திரமாய் மாற்றிவிட்டாள். இருக்கட்டும் அவளை அன்று பார்த்த இடத்திற்கே போவோம். அவளை அன்று பார்த்த இடத் தை பார்த்தாவது திருப்தி யடைவோம். (போகிறான்.)

## தோட்டத்தில் ஓர் புறம்.

[ஸ்ரீமதி, சுந்தரி வருகிறார்கள்.]

ஸ்ரீ. சுந்தரி அன்று எனக்கு ரோஜா கொண்டு வந்ததுபோல் இன்றைக்கும் ரோஜா கொண்டுவா.

சுந். என்ன என்ன அன்று உன் ராஜாவைக் கொண்டு வந்தது போல் இன்றும் உன் ராஜாவைக் கொண்டு வருகிறதா.

உன் ராஜாவை நான் எப்படி கொண்டு வருகிறது. ஓஹோ எனக்குத் தெரியாமலே சிநேகமாயிருக்கிறதோ.

ஸ்ரீ. என்னடி உன் காது செவிடா. ரோஜா கொண்டு வரச் சொன்னால் ராஜா என்கிறாய். ராஜா பேரிலேயே ஞாபகமோ.

சுந். ஏண்டி நான் அன்று ரோஜா கொண்டுவந்ததுபோல் கொண்டு வந்தால் நீ அன்று புருஷோத்தம ராஜாவுடன் பேசிக் கொண்டிருந்ததுபோல் இன்றும்பேசிக்கொண்டிருந்தால் நானென்ன செய்கிறது.

ஸ்ரீ. போடி உனக்கு எப்போ பார்த்தாலும் கேலிதான்.

சுந் சரி. அப்படியே செய்கிறேன் (ஸ்ரீமதியின் போட்டோவை கையில் கொடுத்து) இந்தா இது என் மடியிலிருந்தால் ரோஜாவின் ஈரம் படும். நீ உன் மடியில் வைத்திரு.

[போகிறாள்.]

ஸ்ரீ. சுந்தரியின் ப்ரியமே ப்ரியம். என்னைச்சற்று காணவிட்டால் என் போட்டோவைப்பார்க்கவேண்டுமாம். எப்போதும் அதை மடியில் வைத்துக்கொண்டே யிருக்கிறாள். புருஷோத்தமராஜா அவரை என் ராஜாவென்று சொல்லக் கூடாது. சுந்தரி என் மனதிலிருப்பதை சரியாகத்தான் சொல்கிறாள். ஹா! அன்று நான் என்ன மோசம் போனேன். அவரென்றே நினைத்து சம்மதித்தேன். எந்த புருஷனாவது இப்படி இருப்பாரா. அவருக்கு என்மீது காதலிருந்தால் சிநேகிதனுக்காக கேழ்க்க வருவாரா. ஒருவேளை தனக்கென்று கேழ்க்க சங்கோஜப்பட்டு இப்படி கேட்டிருப்பாரோவென்றால் நான் சம்மதமென்று சொன்ன பிறகாவது தன் காதலை ஒப்புக்கொள்ளலாமல்லவா. அப்படியும் செய்யவில்லையே. அய்யோ அவருக்காகவல்லவா இந்த உயிரை நான் வைத்திருக்கிறேன். அவரை அன்றே நான் நேரில் கேட்டிருக்கக் கூடாதா. நான் கேட்கப்போகும் சமயத்தில் இந்த ஸ்திரீ ஜன்மமல்லவா தடுத்துவிட்டது. ஏதோ சங்கோஜம் தோன்றி நிறுத்திவிட்டேன். அவரை இப்பொழுது கண்டால்

சங்கோஜமில்லாமல் கேட்டு விடுவேன். சகுந்தலையை இப்படிப்பட்ட சமயத்தில துஷ்யந்தன் கண்டதுபோல [illegible] என் முன் தோன்றப் போகிறாரா. [illegible] இவ்விடத்திலேயே சற்று சிரமம் தீரப் படுத்துக் கொள்வோம். (படுத்துத் தூங்குகிறான்.)

தோட்டத்தில் மற்றொரு பக்கம்.

[புருஷோத்தமன் வருகிறான்.]

[illegible]. இந்த ராஜா புஷ்பம்தான், அவள் [illegible] வைத்திருந்த ஷேமபோட்டோ. ([illegible] எடுத்துக்கொண்டு சட்டையில் [illegible]) அய்யா [illegible] என்ன ஜன்ம [illegible]. இந்த ஸ்ரீமதியை கலியாணம் செய்துகொள் [illegible] பணக்காரனாயிருக்கக்கூடாதா. [illegible] என் கண்மணி என்மீது ஆசை வைத்திருக்கலாம். ஆனாலும் அவள் என்னை கலியாணம் செய்துகொண்டால் உலகம் நிந்திக்குமே. முதலாவது அவள் தகப்பனருக்கே த்ருப்தியாயிராது. அனேகம் பணக்காரர்கள் அவளை அடையப் பார்க்கும்பொழுது ஓர் ஏழையை அவள் கலியாணம் செய்துகொண்டாளென்று பெண்கள் அவளை அலக்ஷியம் செய்வார்களே. அதைப் பார்க்க என் மனம் சகிக்குமா. அவள் ஏன் என்னால் மனங் கலங்கவேண்டும். இதை நினைத்துப்பார்த்தால் சூரியநாராயணனுடன் நாமும் காசிக்குப்போயிருக்கலாமென்று தோன்றுகிறது ஆனால் என் கண்மணிக்கு ஒரு அபாயமும் வராதபடி நான் பார்த்துக்கொள்ள வேண்டுமல்லவா. அந்தப்படி சூரியநாராயணனுக்கும் வாக்குக் கொடுத்திருக்கிறேனே. ஆ! என் செல்வமே, உனக்கு என் மன நிலை தெரியுமோ. ஒருவேளை நான் ஆசையில்லாதவனென்று நினைத்து வெறுத்திருப்பாயோ அல்லது உன் ஆசைதான் யாரிடத்திலிருக்கிறதோ ஒன்றும் தெரியவில்லையே. நல்லது இங்கே நல்ல காற்று வருகிறது. சற்று படுத்துறங்குவோம். (படுத்துறங்குகிறான்.)

[சுந்தரி வருகிறாள்]

சுந். ஓகோ இவர் இங்கே படுத்துத் தூங்குவது என் தோழிக்குத் தெரியாதே. அவள் அங்கே படுத்துத் தூங்குகிறாள். ஆஹா! என்ன அழகு. இவர்தான் என் ஸ்ரீமதிக்குத் தகுந்தவர். அவள்தான் இவருக்குத் தகுந்தவள். இவர்கள் இருவரையும் ஒன்று சேர்த்து வைத்தால்தான் என் மனம் த்ருப்தியடையும். இதென்ன அவர் பக்கத்தில் கடிதம் போல் ஏதோ வெள்ளையாய் கீழே கிடக்கிறதே. என்ன கடிதமோ. அதை மெள்ள எடுத்துப் பார்ப்போம். அது அவர் கடிதமாயிருந்தால் அதில் அவர் மனது அல்லது என் தோழி விஷயமான சமாச்சாரம் ஏதாவது இருக்கக் கூடாதா. பார்ப்போம். (மெள்ள கடிதத்தை எடுத்துப் பார்த்து) ஓகோ இது இவருடைய போட்டோ. நல்ல வேளை பழம் நழுவிப்பாலில் விழுந்ததுபோலிருக்கிறது. இவைகளை மாற்றி விடுவோம். பிறகு ஒருவரையொருவர் தேடி அவர்களே பேசி தீர்மானம் செய்து கொள்ளட்டும். நாம் வேடிக்கை பார்ப்போம். (ஸ்ரீமதியின் போட்டோவை எடுத்து வந்து என் ப்ராணநாதர் புருஷோத்தமராஜனுக்கு என்று எழுதி புருஷோத்தமன் சட்டையில் வைத்து [ஸ்ரீமதியிடம் போய் புருஷோத்தமன் போட்டோவில் என் கண்மணி ஸ்ரீமதிக்கு என்று எழுதி ஸ்ரீமதியின் மடியில் வைத்து] ஒளிந்து கொள்கிறாள்.)

ஸ்ரீ. (தூக்கத்தில் சுந்தரீ இதோ அவர் கோபித்துக்கொண்டு போகிறார். போய் நல்ல வார்த்தை சொல்லி அழைத்து வாடி. (திடீரென்று எழுந்திருந்தும் சுற்றுமுற்று பார்த்து) ஓகோ! நாம் என்ன கனவு கண்டோமோ. இது தோட்டமல்லவா. எங்கே சகியைக் காணோமே. நான் வெகு நேரம் தூங்கிவிட்டேனே. சகியும் என்னை விட்டு விட்டு போய்விட்டாளோ. அப்படி போகமாட்டாளே. என்ன கனவு என்ன கனவு அவர் என்னிடம் வந்து சல்லாபம் செய்வதுபோல கனவு கண்டேனே. ஒரு வேளை அது கனவிலே தான் நேருமோ. மறுபடி கண்களை மூடிக்

கொண்டால் அப்படியே மறுபடியும் கனவு காண்பேனே ப்ராணநாதா. என்னை தாங்கள் இப்படி சோதிக்கலாமோ. நான் ஸ்த்ரீ ஜாதியன்றோ நான் தங்களைத்தேடி என் காதலை தங்களுக்கு தெரிவிக்க ஆசைப்பட்டும் முடியாமல் என் சங்கோஜமே மேலிட்டிருக்கிறதே. நீங்கள் புருஷனல்லவா. அதிலும் புருஷ உத்தமனல்லவா. என்னைத் தேடிவந்து என்னை ப்ரியே அன்று அழைக்கமாட்டீர்களா ஹா! இப்படி ஸ்வப்னத்தில் தம்மை பார்ப்பதைவிடதமது போட்டோ ஒன்றாவது இருந்தால் அதைப் பார்த்தாவது நான் சந்தோஷிக்கமாட்டேனா. அதென்ன கீழே ஓர் கடிதம் கிடக்கிறது. அதென்ன கடிதமோ எடுத்துப் பார்ப்போம். (எடுத்து) ஓகோ போட்டோ போலிருக்கிறதே. (பார்த்து திடீரென்று ஆச்சரியத்தால் கீழே போட்டு விடுகிறாள்) இதென்ன மறுபடியும் ஸ்வப்னமோ என் ப்ராணநாதர் போட்டோ இங்கே எப்படி வந்தது. என்ன ஆச்சரியம். (அதை மறுபடி பார்த்து) ஆஹா ஸ்ரீமதிக்கு என்று எழுதியிருக்கிறதே. அவர் போட்டோ நமக்கு கிடைக்கவேண்டுமென்று எண்ணும் போதே அது கிடைத்துவிட்டதே. அதுபோலவே, என் ப்ராணநாதரும் எனக்கு கிடைக்கவேண்டுமென்றால் அவரும் கிடைப்பாரோ.

புரு. (பின்னால் வந்து) கிடைப்பார்! கிடைப்பார்! தடையில்லை. (ஸ்ரீமதி திடுக்கிட்டு எழுந்து நிற்கிறாள்) ஸ்ரீமதி உட்கார் எல்லாம் அறிந்தேன்.

ஸ்ரீ. என்ன அறிந்தீர்கள்.

புரு. உனக்கு என் மீதிலிருக்கும் காதலை அறிந்தேன்.

ஸ்ரீ. அப்படி ஒன்றுமில்லையே.

புரு. ஓகோ எழுத்து மூலமான ஆதாரத்தை காண்பித்தால்தான் ஒப்புக்கொள்வாயோ இதோ நான் தூங்கும்போது நீ என் சட்டையில் வைத்திருக்கும் போட்டோவால் அறிந்தேன்.

ஸ்ரீ. போட்டோவாவது நான் ஒன்றும் வைக்கவில்லையே.

புரு. ஸ்த்ரீகள் பாசாங்கென்பது சரியாயிருக்கிறது. ஒன்றும் அறியாதவள்போல் பேசுகிறாயே. இதோ பார் உன் போட்டோ. இதுதான் இக்ஷணி கொண்டுவந்து போட்டதாக வைத்துக்கொள்வோம். இதில் என் ப்ராணநாதர் புருஷோத்தமராஜனுக்கு என்று எழுதியிருப்பது பொய் தானோ. புருஷோத்தமராஜன் இஸ்பேட் ராஜாவா, க்ளாவர்ராஜாவா, ஓகோ! என் மடியிலிருந்த போட்டோ வைக்காணோமே.

ஸ்ரீ. (தன் மடியைப் பார்த்து) புருஷர்கள், ஸ்த்ரீகளை பாசாங்குகாரிகள் என்று சொல்லிக்கொண்டே தாங்கள் திருடுகிறதும் போர்ஜரியும் கூட செய்கிறார்கள்—ப்ராண! இது தங்களிடம் எப்படி வந்தது. இந்த எழுத்து என் எழுத்தல்லவே.

புரு. என்ன பாசாங்கு—இப்போது கூட ப்ராணநாதா என்றழைக்க வந்தாயே. ஸ்ரீமதி எங்கே அதில் எழுதியிருக்கிறபடி அழைபார்ப்போம்.

ஸ்ரீ. அது நான் எழுதியிருந்தாலல்லவா அந்தப்படி எனக்கு அழைக்கத் தெரியும். நல்லது இதில் எழுதியிருக்கிறபடி நீங்கள் அழையுங்கள் பார்ப்போம்.

புரு. ஸ்ரீமதி எங்கே அதை இங்கே கொண்டா பார்ப்போம்.

ஸ்ரீ. இதென்ன புருஷர்கள் சாகசமோ இது கொண்டுவந்து வைத்தது கூட உங்களுக்கு அதற்குள் மறந்துவிட்டதோ.

புரு. (வாங்கிப் பார்த்து) ஸ்ரீமதி இது நான் எழுதவில்லையே. உன்னிடம் இது எப்படி வந்தது. ஆகிலும் நம்மிருவர் மனதும் தெரிந்த ஒருவரால் இப்படி எழுதி மாத்தி வைக்கப்பட்டதென்று நினைக்கிறேன். இது பகவான் செயலேயல்லாமல் வேறல்ல. ஆகையால் அதில் கண்டபடியே அழைக்கிறேன். கண்மணி! இப்படிவா: என் பக்கம் (கட்டிக்கொள்கிறான்) இனி அந்தபோட்டோவைபோட்டுவிடு, அசல் கிடைத்த பிறகு காப்பி எதற்கு.

ஸ்ரீ. (கட்டிக்கொண்டு) ப்ராணநாதா! அது தானே உங்களுக்காக என்னிடம் தூது வந்தது. தூதனை நான் அவமரியாதை செய்யலாமோ.

[மடியில் வைத்துக்கொள்கிருள்.]

புரு. இந்தா இதையும் சேர்த்து வைத்துக்கொள்.

ஸ்ரீ. அதை நீங்களே வைத்துக்கொள்ளுங்கள் அது இரண்டும் ஒன்றும் சேருவதைப்பார்க்க என் மனம் சகிக்குமா. பிராணநாதா அது இரண்டும்தானு சேரவேண்டும்.

புரு. கண்மணி அதைத் தான் சொல்ல வந்தேன். என் மனதிற்க்கு அது இரண்டும்தான சேரவேண்டுமென்று தோன்றுகிறது. ஸ்ரீமதி நீ என் மனதை அறியமாட்டாய், உனக்கு என் மீதிலிருக்கும் காதலைவிட எனக்கு 1000 பங்கு அதிகமாக இருந்தும் உனக்கு வரும் அவமானத்தைக் குறித்து நான் சம்மதிக்கக் கூடவில்லை. நான் மகா ஏழை என்னை நீ கலியாணம் செய்துகொண்டால் எல்லோரும் பணத்திற்கு ஆசைப்பட்டு கலியாணம் செய்துகொண்டானென்று என்னை ஏசுவார்கள். உன் சினேகிதப் பெண்கள் நல்ல பணக்காரர்களிருக்க ஏழையைக் கலியாணம் செய்துகொண்டாளென்று உன்னை இகழ்வார்கள். இதையெல்லாம் நான் நினைக்கும்போது என்னல் நீ ஏன் இப்படி கஷ்டமடையவேண்டுமென்று தோன்றுகிறது. ஸ்ரீமதி வேண்டாம். இந்த வீண் ஆசையை விட்டு விடு.

ஸ்ரீ. சற்று முன் ஸ்த்ரீகள் பாசாங்கென்றீர்களே. புருஷர்கள் இவ்வளவு பாசாங்கு செய்து ஸ்த்ரீகள் மனதை சோதிக்கும்பொழுது ஸ்த்ரீகளை நீங்கள் கேலி செய்வானேன். பிராணநாதா. என் தகப்பனூர் பணக்காரரே ஒழிய நான் ஏழை தானே. அவருக்குப் பிறகு அவர் பணம் எனக்கு வேண்டாம். அதை தருமத்திற்கு உபயோகப் படுத்தச் சொல்லுகிறேன். நீங்கள் சம்பாதித்ததைக் கொண்டு காலக்ஷேபம் செய்து உங்களுடன் உங்கள் நிழல்போல் நானும் கூடவே இருக்கிறேன்.

புரு. ஸ்ரீமதி, நீ செய்வாய் தடையில்லை. அப்பொழுதும் ஜனங்கள் என்ன சொல்லுவார்கள். பெண்கள் எல்லாம் என்ன சொல்லுவார்கள்.

ஸ்ரீ. (முகத்தைத் திருப்பிக்கொண்டு விசனத்துடன்) சரி நீங்கள் ஜனங்கள் அபிப்ராயத்தைப் பார்த்துக்கொண்டிருங்கள். அவர்கள் சந்தோஷமடைந்தால் சரிதான். நான் பிராணனை விட்டால் கூட பாதகமில்லை. ஸ்ரீராமர் ஜனங்கள் அபிப்ராயத்தைப் பார்த்து சீதையை காட்டிற்கு அனுப்பினது போல் என்னை இந்த உலகத்தைவிட்டு அனுப்பிவிடுங்கள்.

புரு. (ஸ்ரீமதியைக் கட்டிக்கொண்டு) கண்மணி நீ விசனப்படாதே. நான் உன் இஷ்டப்படியே செய்கிறேன் நீ சொல்வது சரிதான். நாமிருவரும் சம்மதித்திருக்க ஜனங்கள் என்ன சொன்னாலென்ன நான் உன்னிஷ்டப்படியே செய்கிறேன்.

சு. ஆகா! ஸ்ரீமதி நானும் என் இஷ்டப்படியே செய்தேன் பார்த்தாயா.

இருவரும் (சந்தோஷத்துடன்) சுந்தரி இதெல்லாம் உன் வேலையோ.

சு. ஆம்: ஸ்ரீமதியை புருஷோத்தமனிடம் சேர்க்கவேண்டியது என் கடமையல்லவா.

[போகிறார்கள்.]

---

## அங்கம் 2—காட்சி 8.

### நாகராஜய்யர் வீடு.

[நாகராஜய்யர், சந்த்ரசேகரன் வருகிறார்கள்.]

நாக. சந்த்ரசேகரரே இந்த பாங்கில் பணத்தைப் போட்ட பிறகு தான் எனக்கு த்ருப்தி ஏற்பட்டது. பழய பாங்கில் என்றைக்கும் சண்டைதான். நீர் இல்லாவிட்டால் எனக்கு இந்த பாங்கு தெரிகிறதேது. நீர் செய்த உபகாரத்துக்கு நான் ப்ரதி உபகாரம் செய்யவேண்டும்.

சங். ஒரு ப்ரதி உபகாரமிருக்கிறது. ஆனால் அது ப்ரதி உபகாரமாக நினைக்கக் கூடியதல்ல. தங்கள் பெண் ஸ்ரீமதியை நான் கலியாணம் செய்வதாயிருந்தால் தங்களுக்கு சம்மதம் தானே.

நாக. ஸ்ரீமதி சம்மதித்துவிட்டால் எனக்கு வெகு சந்தோஷம். நான் ஸ்ரீமதியைக் கேட்டு அவள் சம்மதித்தால் தங்களுக்கு தெரியப்படுத்துகிறேன். ஸ்ரீமதி எல்லாம் தெரிந்தவளாதலால் அவள் யாரை கலியாணம் செய்துகொள்ள சம்மதிக்கிறாளோ அவருக்கே அவளைக் கொடுப்பதாய் தீர்மானித்திருக்கிறேன். ஆகையால் அவளைக் கண்டு அவள் சம்மதத்தைத் தெரிந்துகொண்டு, பிறகு சொல்லுகிறேன்.

சங். அப்படியே செய்யுங்கள் (போகிறார்.)

நாக. சந்த்ரசேகரர் வெகு நல்லவர் நமக்குத்தான் என்ன ஒத்தாசையெல்லாம் செய்திருக்கிறார். நமக்கு ரூ. 10,000 சில்லரையாக பலரிடம் சிபார்சு செய்து கடன் வாங்கிக் கொடுத்திருக்கிறார். இவருக்கு எப்படியாவது நமது ஸ்ரீமதி சம்மதிக்கவேண்டும். நாமே அவளைக் கூப்பிட்டு நேரில் அவள் சம்மதத்தை அறியலாமாயினும் அது சரியல்ல. அவள் சங்கோஜத்தால் உள்ளதைச் சொல்லமாட்டாள். அது கூடாது அவள் தாய் சிறுவயதிலேயே இறந்துவிட்டபடியால் நான் அவள் மனம் சிறிதும் கோணாமல் தாய்போல் அவளை பாதுகார்த்து வருகிறேன். ஆகையால் அவளிஷ்டம்போல் செய்யட்டும்.

[ஒருவன் தந்திகொண்டு வந்து கொடுத்துப் போகிறான்.]

நாக. (உடைத்துப் பார்த்து திடீரென்று கீழே விழுகிறார்). (எழுந்து) ஆ என் விதியே இதற்கு நான் என்ன செய்வேன் இதென்ன கனவோ. நினைவோ தெரியவில்லையே. இப்போதுதான் நான் நேரில் பட்டணம்போய்ப் பார்த்து வந்த பாங்கு இதற்குள் இன்ஸால் வெண்டென்றால் இதை யார் நம்புவார்கள். இதென்னமோசமோ ஒன்

றும் தெரியவில்லையே. சந்த்ரசேகரர் ஏதாவது மோசம் செய்திருப்பாரோ வென்றால் அவர் வெகு நல்லவராயிற்றே. மேலும் தன் பணத்தையும் அவர் அங்கே போட்டிருக்கிறாரே அவர் புஸ்தகத்தைக் கூட பார்த்தேனே. ஓகோ இனி எனக்கு என்ன கதி இருக்கிறது. பணம் போனால் போகிறது. ஏராளமாய் கடன் வேறு வாங்கி வீட்டையும் ஈடு வைத்து இப்படியெல்லாம் இந்த பாங்கை நம்பிச் செய்தேனே. கடன்காரர்கள் இம்சைக்கு என்ன செய்வேன். வேறு எங்கேயாவதுபோய் பிழைக்கலாமென்றாலும் எனக்கு சிறு வயதா. நான் என்ன தொழில் செய்கிறது. என் பாடு எப்படி போனாலும் நான் ஸ்ரீமதியை எப்படி காப்பாற்றுவேன். அவள் செல்வத்திலேயே வளர்ந்த குழந்தையாயிற்றே. கஷ்டம் என்பதே அவளுக்குத் தெரியாதே. என்ன செய்வேன். அவள் சுகத்துக்கு சொஞ்சம் குறைவு நேரிட்டால் என் மனம் சகிக்குமா. நான் இதை என் கண்மணியிடம் எப்படி சொல்லுவேன். சீ. சீ. ஒருபோதும் சொல்லக்கூடாது. சொல்லி அவளும் வருந்தினால் நான் எப்படி சகிப்பேன். நான் ஒருவன் கஷ்டப்படுவதுபோதாதா ஈசனே! ஈசனே (மெள்ள) ஸ்ரீமதி வருகிறாள். அவள் முன் நமது விசனத்தைக் காட்டக்கூடாது.

ஸ்ரீ. (டீ கொண்டு வந்து வைத்துவிட்டு தகப்பனாரை உற்றுப் பார்த்து) அப்பா என்ன உங்கள் முகம் இவ்வளவு வாட்டமாயிருக்கிறதே. காரணமென்ன.

நாக.. ஸ்ரீமதி அப்படி ஒன்றுமில்லையே. இன்று கொஞ்சம் தலைவலி. இந்த இழவு காபி, டீ, சமயத்தில் இல்லாவிட்டால் தலைவலி வந்து விடுகிறது.

ஸ்ரீ. (பக்கத்தில் வந்து) சொல்லுங்கள் அப்பா ஏதாவது கெட்ட சமாச்சாரம் கேள்விப்பட்டீர்களா. முன் உங்களுக்கு உடம்பு அசௌக்யமாயிருந்தபோது கூட உங்கள் முகம் இப்படி இல்லையே.

நாக. அப்படி ஒன்றும் இல்லை ஸ்ரீமதி. இருந்தால் நான் உன்னிடம் சொல்லமாட்டேனு.

ஸ்ரீ. (தயங்கி) என்னப்பா, என்னமோ உங்களைப் பார்த்தால் எனக்கு ஒன்றும் ஓடவில்லை. தலைவலியா. Menthal கொண்டு வந்து கொடுக்கட்டுமா அப்பா.

நாக. கொண்டுவா (போய், மென்தால் கொண்டுவந்து கொடுத்து விட்டுப் போகிறுள்.) ஆ! மென்தால் போட்டு போகும் தலைவலி ஒரு வலியா. இந்த சங்கதி வெளியே தெரிந்தால் என் கடன்காரர்களெல்லாம் வந்து தங்கள் பணத்தைக் கொடுக்கும்படி கிட்டி வைப்பார்களே. நானென்ன செய்வேன். அப்பொழுது ஸ்ரீமதிக்கு தெரியாமல்போகுமா அதற்கு நாமே சொல்லிவிட்டால் என்ன. அய்யோ என் வாயால் அவளிடம் எப்படி சொல்லுவேன். சீ. சீ. கூடவே கூடாது. ஸ்ரீமதிக்கு எவ்வளவு காலத்திற்கு பிறகு தெரியவேண்டுமோ அப்போது தெரியட்டும். அது வரையிலாவது அவள் சந்தோஷமாயிருக்கட்டும். (சந்த்ரசேகரர் பரபரப்புடன் வருகிறுர்.)

சந். நாகராஜரே உமக்கு தந்தி வந்ததா. இதென்ன இடி விழுந்துபோலிருக்கிறது. ஒருவேளை பொய்யாக இருக்குமோ. அப்படி ஏன் பொய்யாக தந்தி கொடுக்கவேண்டும்.

நாக. சந்த்ரசேகரரே நான் என்ன செய்கிறது. எனக்கு சொத்து ஒன்றுமில்லாமல் போனல் போகிறது. கடனை வாங்கியும போட்டிருக்கிறேனே. கடன்காரர் இம்சைக்கு நான் என்ன செய்வேன.

சந். அய்யா! நான் மகா பாபி. என்னுல் நீங்களும் கஷ்டப்படுகிறீர்கள். நீங்கள் வேறு இடத்தில போட்டிருந்த பணத்தையும் இங்கே போடச் செய்தேனே. என் பணம் போனதில் கூட எனக்கு அதிக துக்கம் உண்டாகவில்லை. என்னுல் இவ்வளவு கஷ்டமும் தங்களுக்கு நேர்ந்திருப்பது தான் எனக்கு அதிக துக்கத்தைக் கொடுக்கிறது.

நாக. அய்யா : என் அதிர்ஷ்டத்துக்கு நீங்கள் என்ன செய்வீர்கள். ஒருவேளை என் துரதிர்ஷ்டத்தால் தான் உங்கள

பணம் கூடபோய்விட்டதோ என்னமோ. அப்படி நீங்கள் சொன்னதை மட்டும் நம்பியா நான் போட்டேன். நானே வந்து பார்த்து ரூல்களையெல்லாம் பார்த்துத் தானே போட்டேன்! உங்கள் மீது என்ன குற்றம்.

சந். அய்யா நீங்கள் கவலைப்படவேண்டாம். நான் உடனே பட்டணம்போய் இது நிஜமாவென்று விஜாரித்து வருகிறேன்.

நாக. இது பொய்யாக இருக்கப்போகிறதா. எனக்குத் தோன்றவில்லை. இருந்தபோதிலும் போய் பார்த்துவாருங்கள். நான் ஸ்ரீமதியின் முகத்தை எப்படி காண்பேன். அவளிடம் இதை எப்படி சொல்லுவேன். இனி அவள் சுகத்துக்கு குறைவு நேரிடும்பொழுது அவள் கஷ்டப்படுவதைப் பார்த்து நான் எப்படி சகிப்பேன்.

சந். அய்யா, ஸ்ரீமதியிடம் இதெல்லாம் ஒன்றும் சொல்லவேண்டாம். அவள் வீணில் வருந்துவானேன். ஒருவேளை இது பொய்யாக இருக்கக்கூடாதா. நல்லது நான் போய் வருகிறேன் (போகிறான்)

நாக. சந்த்ரசேகரர் சொல்வது நியாயம் தான். ஸ்ரீமதியிடம் இதை இப்பொழுதே சொல்லி அவளுக்கு ஏன் கவலையைக் கொடுக்கவேண்டும். ஒருவேளை இது பொய்யாக இருந்தாலும் இருக்கலாம். பார்ப்போம். சந்த்ரசேகரர் இதற்குத் தகுந்த ஏற்பாடு செய்வார். நான் அவரை நம்பி என் பணமெல்லாம் அந்த பாங்கில் போட்டிருக்க, அவர் இந்த சமயத்தில் என்னை கைவிடுவாரா. பார்ப்போம் (போகிறார்.)

---

## அங்கம் 3—காட்சி 1.

### நாகராஜய்யர் வீடு.

[ஸ்ரீமதி வருகிறாள்.]

ஸ்ரீ. என் தகப்பனார் சில நாளாய் ஏதோ கவலைப்பட்டுக் கொண்டிருப்பதாக தோன்றுகிறது. அவர் முன்போல் சாப்பிடு

கிறதில்லே. முகத்தைப் பார்த்தால் வெகு விசனத்தை மன திலேயே நினைத்து அனுபவிப்பதாக தெரிகிறது. கேட்டாலோ, ஒன்றுமில்லே ஒன்றுமில்லேயென்று மறைக்கிருர். ஏதாவது சிறிப்பு மூட்டினலும் சிறிக்கவேண்டுமே என்று சிறிக்கிருர். சிறிப்பு வரவில்லே. நான் என்ன செய்கிறது. இவருக்கு என்ன கவலே இருக்கக்கூடும். எனக்கு இன்னதென்று தெரிந்தாலும் என்னுல் கூடிய ஒத்தாசையை செய்வேனே. அவர் இப்படி கஷ்டப்படுவதை நான் எத்தனே நாள் ஒன்றும் செய்யக்கூடாமல் பார்த்துக்கொண்டிருப்பது. அவர் வயது காலத்தில் அவருக்கு ஒரு கவலேயுமில்லாமல் நான் அவரை பாது காக்கவேண்டியிருக்க அவர் இப்படி விசனப்படுவதை நான் பார்த்துக்கொண்டா இருக்கிறது. நான் ஏன் அவரை கட்டாயம் செய்து கேழ்க்கக் கூடாது. அவர் கஷ்டப்படுவதைப் பார்த்து எனக்கும் கவலேயாக இருக்கிறதே. என்ன செய்வேன் (சந்த்ரசேகரர் வருகிருர்). ஐயா, உங்களே யார் இப்பொழுது அழைத்தது.

சந். நீ அடைந்திருக்கும் கவலே, அதை நீக்கும் பொருட்டே இவ்விடம் வந்தேன்.

ஸ்ரீ. என் கவலேயை நீங்கள் எப்படி நீக்கக்கூடும்.

சந். அதுதான் சொல்ல வந்தேன். அதற்குள் கோபித்துக் கொள்கிருய். நீ யோஜித்துக்கொண்டிருப்பதை சொல்லட்டுமா. உன் தகப்பனரைப்பற்றி இது போதுமா.

ஸ்ரீ. ஐயா இந்த ஜோஸ்யமெல்லாம் உங்களே யார் கேட்டார்கள். நீங்கள் வந்த காரியத்தைச் சொல்லுங்கள்.

சந். அதுதான் சொல்வதற்குள் நீ அவசரப்படுகிருயே. உன் தகப்பன் படும் கஷ்டம் இவ்வளவென்று உனக்குத் தெரியாது.

ஸ்ரீ. (பக்கத்தில் வந்து) ஐயா ஐயா! அது உங்களுக்குத் தெரிந்திருந்தால் தயவு செய்து சீக்கிரம் சொல்லுங்கள்.

சந். ஒரே வார்த்தையில் சொலலுகிறேன். உன் தகப்பனர் பாபர் சொத்தெல்லாம் போய்விட்டது.

ஸ்ரீ. சீ. சீ. இதற்குத்தானு இவ்வளவு கஷ்டப்படுகிருர். இதை அவர் முன்பே என்னிடம் சொல்லியிருக்கக் கூடாதா. நான் சித்திரம் எழுதி பெண்களுக்கு சங்கீதம் சொல்லிக் கொடுத்து அவரைக் காப்பாற்றுவேனே. இதற்க்குத் தானு இவ்வளவு விசனப்படுகிருர். நான் இதோ அவரிடம் போகிறேன்.

சங். ஸ்ரீமதி அதற்க்குள் அவசரப்படாதே மற்ற சமாச்சாரங்களைக் கேட்டுவிட்டுபோ. அவர் சொத்தை இழந்ததோடு இருந்தால் பாதகமில்லை கடன்கள் வாங்கியிருக்கிருர். கடன்காரர்களெல்லாம் வந்து ஹிம்சை செய்வார்களே.

ஸ்ரீ. ஐயோ கடன் வேறே வாங்கினுரா. என்னிடம் கடன் ஒன்றுமில்லை யென்று சொல்லியிருக்கிருரே.

சங். கடன் முன்னுவில்லை இப்பொழுதுதான், பாழும் பாங்கில் போடுவதற்க்கு வாங்கினுர்.

ஸ்ரீ. போகட்டும்: இவ்வளவுதானே. வீட்டை விற்று கடனை அடைத்து விடலாமே. இந்த யோஜனை அவருக்குத் தோன்றவில்லையோ: இதோ நான்போய் அவருக்கு தேறுதல் சொல்லுகிறேன்.

சங். ஸ்ரீமதி, முழுவதும் கேளேன். அதற்குள் அவசரப்படுகிருயே. வீட்டின்பேரிலும் அதன் மதிப்புக்கு சரியாய் ஈடுவைத்து கடன் வாங்கியிருக்கிருரே என்ன செய்கிறது.

ஸ்ரீ. அய்யோ, அதுவும் ப்ரயோஜனமில்லையா, (விசனத்துடன் உட்கார்ந்து) அப்பா நானென்ன செய்வேன், உங்களை நான் எப்படி காப்பாற்றுவேன், நான் செய்யக்கூடிய வழி ஒன்றையும் காணேனே. ஏனய்யா இந்த பாங்கில் அவர் எப்பொழுது போட்டார் இன்னும் யார் போட்டிருக்கிருர்கள்.

சங். இப்போது சமீபத்தில் தான் போட்டார். இப்படியாகுமென்று யாருக்குத்தான் தெரியும். நானும் தான் போட்டிருக்கிறேன்.

ஸ்ரீ. (யோஜித்து) இதெல்லாம் உமது சூதோ. அவரை இப்படி யெல்லாம் செய்யச்சொல்லி இப்போது நீர் வருத்தப்படுவது போல் பாசாங்கு செய்கிறீரோ.

சங். (கோபித்து) ஸ்ரீமதி நீ இப்படி என்மீது சந்தேகம் கொள்வது நியாயமா. நான் ஏதோ இந்த சமயத்தில் உங்களுக்கு உபகாரம் செய்யலாமென்று வந்தேன், இக்காலத்தில் நன்மை செய்வது ஆகாது, நல்லது நான் போய் வருகிறேன்.

ஸ்ரீ. அய்யா தாங்கள் கோபித்துக்கொள்ளக் கூடாது. என் வருத்தத்தில் நான் இன்னது சொன்னேன் என்று எனக்கே தெரியவில்லை.

சங். ஆனால் சொல்லுகிறேன் கேள். உன் தகப்பனார்தன் கஷ்டத்தை உன்னிடம் சொல்ல ரொம்பவும் வெட்கப்படுகிறார். அது அவர் மனதிலேயே குடி கொண்டிருப்பதால் அவர் படும் கஷ்டம் சொல்லிமுடியாது. இனி எத்தனை நாள் அவர் இப்படி இருக்கமுடியும். நீயோ பெண் பாவம். நீ என்ன செய்யலாம். இன்னும் கொஞ்சகாலத்தில் அவர் உயிருடன் இருப்பது சந்தேகம் தான்.

ஸ்ரீ. (கண்ணீர் விட்டு) ஐயா! ஐயா! உங்கள் வாயால் அப்படி சொல்லாதேயுங்கள். ஆம் நீங்கள் சொல்வதும் சரிதான். இதற்கு என்ன செய்கிறது. அப்பா நான் உங்களை இந்த சமயத்தில் காப்பாற்றாமல் போனால் நான் ஜன்மம் எடுத்து என்னபயன், அய்யோ எனக்கு ஒன்றும் தோன்றவில்லையே. என்ன செய்வேன்.

சங். ஸ்ரீமதி உனக்கு உன் தகப்பனாரை காப்பாற்ற முடியும். அதற்கு உபாயம் சொன்னால் கேழ்ப்பாயா.

ஸ்ரீ. ஐயா என்னால் முடியுமானால் நிச்சயமாய் காப்பாற்றுவேன். என்ன உபாயம் சொல்லுங்கள். என் மானம் போகாமல் நான் செய்யக்கூடிய ஒத்தாசை எதையும் செய்கிறேன்.

சங். அப்படியானால் நான் சொல்வதைக்கேள். நீ மிகுந்த பணக்காரனை ஒருவனை கலியாணம் செய்துகொள், அவன் உன் தகப்பனாரைக் காப்பாற்றுவான்.

ஸ்ரீ. அய்யோ, அப்படி பணக்காரர் யார் என்னை கலியாணம் செய்து கொள்ள காத்திருக்கிறார்.

சங். நான் தான். நான் அந்த பாங்கில் பணம் கொஞ்சம் போட்டேனே ஒழிய, என் மற்ற சொத்துக்களெல்லாம் அப்படியே இருக்கின்றன. நீ என்னை கலியாணம் செய்வதாய் வாக்குக்கொடுத்தால் நான் கடன்களை தீர்ப்பதுமன்றி கலியாணத்தின்போது உன் தகப்பனுருக்கு ரூ. 50,000 இனுமாய் கொடுக்கிறேன்.

ஸ்ரீ. (யோஜித்து) ஐயா இதைத்தவிர வேறுவழி ஒன்றுமில்லையா.

சங். ஒன்றையும் காணேம். நீ உன் தகப்பனுருடைய சுகத்தையும், நன்மையையும் தேடும் பெண்ணுயிருந்தால் நீ சம்மதிக்கவேண்டும். இல்லாவிட்டால் கடன்காரர்கள் ஹிம்சையையும் அவமானமும் பொறுக்கமாட்டாமல் அவர் என்ன செய்வாரோ தெரியாது.

ஸ்ரீ. ஐயா நான்கொஞ்சம் யோஜித்துச் சொல்லுகிறேன். எனக்கு கொஞ்சம் சாவகாசம் கொடுங்கள். என் தகப்பனுரையிது விஷயமாய் கேட்டீர்களா. நான் யோஜித்து சொல்லும் வரையில் என் தகப்பனுருக்கு கடன்காரர்கள் ஹிம்சையில்லாமல் செய்வீர்களா.

சங். அது என்னுல் முடியும். கடன்காரர்கள் ஒருவருக்கும் இந்த சங்கதி தெரியாமலிருக்கும்படி செய்கிறேன். தெரிந்தபோதிலும் நான் ஜவாப்தாரியென்று சொல்லி கண்டிக்காமலிருக்கும்படி செய்கிறேன். நீ நன்முய் யோஜித்துப் பார். இப்படி செய்தால் தான் உன் தகப்பனுரைக் காப்பாற்றலாம். நான் அவரைப்பார்த்தேன் என்னை நீ கலியாணம் செய்துகொள்வதில் அவருக்கு வெகு சந்தோஷம்.

ஸ்ரீ. நல்லது. நான் யோஜித்துச் சொல்லுகிறேன். தாங்கள் தயவுசெய்து என் தகப்பனுரை கடன்காரர்கள் நிர்ப்பந்தம் செய்யாமல் பார்த்துக்கொள்ளவேண்டும். தாங்கள் போய் வாருங்கள் (போகிறுன்) எனக்கு ஒன்றும் ஓடவில்லை. நான் என்ன செய்வேன். அய்யோ இனி என்

தப்பனார் சந்தோஷமாயிருப்பதை நான் பார்க்கப்போகி றேனா. அய்யோ இவர் சொல்லுகிறபடி செய்தால் என் ப்ராணநாதரையிழக்கவேண்டும். செய்யாவிட்டால் நா ன் தகப்பனாரையிழக்கவேண்டும். இந்த சங்கடத்திற்கு நான் என்ன செய்வேன். (போகிறாள்)

---

## அங்கம் 3—காட்சி 2.

நாகராஜய்யர் வீடு.

[ஸ்ரீமதி வருகிறாள்.]

ஸ்ரீமதி. அய்யோ! இந்த ஜன்மம் நான் ஏன் எடுத்தேன். என் தகப்பனார் சொத்து சாமான்யமாய் அழிக்கக் கூடியதா. அது எப்படி திடீரென்று மாயமாய் போய்விட்டதோ தெரியவில்லையே. யாரோ அவரை மோசம் செய்திருக் கிறார். அதெல்லாமிப்பொழுது யோஜித்து என்ன பயன். நானிப்பொழுது சந்த்ரசேகரர் வார்த்தையை கேட்டால் தான் தகப்பனாரைக் காப்பாற்றலாம். அவரெ ன்னை சிறு வயது முதல் தாய்க்குத் தாயாய் தகப்பனுக் குத் தகப்பனாய் என் மனம் சிறிதும் கோணாமல் பாது கார்த்து வந்திருக்க இப்போது அவர் கஷ்டப்படுவதை நான் பார்த்திருப்பதா கூடாது ஆ! அப்படி செய்வத னால் நானிந்த சந்த்ரசேகரரை யல்லவா கலியாணம் செய்துகொள்ளவேண்டும். சீ. சீ. இதென்ன யோஜனை. என் புருஷோத்தம ராஜனைவிட்டு—ராஜன்—அவர் என் ராஜாவன்றோ அவரைவிட்டு நானிந்த அவலக்ஷணத் தையா கலியாணம் செய்துகொள்கிறது. என் ராஜா என்னை ரோஜாவாக மதித்திருக்க அவருக்கு ரோஜா கொடுப்பதைவிட்டு ரோஜாவின் முள்ளையா கொடுக்கி றது. அவரை அப்படி கஷ்டப்படவிட்டு நான் உயிர் வைத்திருப்பானேன். என் நாதரைவிட்டென் உயிர் தரிக்குமோ. அவரிதைக் கேட்டால் பிராணனை விட்டு விடுவாரே. தகப்பனார் ஒருவர் கஷ்டப்படுவதைப் பார்த்

தால் நாங்களிருவரும் கஷ்டப்படவேண்டியிருக்கிறது. ஆசை இல்லாத விடத்தில் கலியாணம் செய்வதைவிட உயிரை விடலாம்.

[நாகராஜய்யர் வருகிறார்.]

நாக. ஸ்ரீமதி நீ என்ன யோஜிக்கிறாய். உடம்பென்ன உனக்கு. ஏதோ விசனமாயிருக்கிறாயே. என்ன காரணம்.

ஸ்ரீ. ஒன்றுமில்லை அப்பா. நீங்கள் ஏதோ கவலையுடனிருக்கிறீர்களே யென்று, அதைப் பார்க்கப் பார்க்க எனக்கும் கவலையாயிருக்கிறது.

நாக. ஸ்ரீமதி அப்படி ஒன்றுமில்லையே. நீ ஏன் வீணில் என்னைப் பார்த்து கவலைப்படுகிறாய். எனக்கு கவலை ஒன்றும் இல்லை.

ஸ்ரீ. அப்பா! உள்ளதைச் சொல்லமாட்டீர்களா. அதிருக்கட்டும். இந்த இந்த சந்தரசேகரை உங்களுக்கு நன்றாய் தெரியுமா.

நாக. ஸ்ரீமதி ஏன் அவரை எனக்கு நன்றாய் தெரியும். அவர் எனக்கு எவ்வளவு ஒத்தாசை செய்திருக்கிறாரே. அவருக்கு உன்னை கலியாணம் செய்துகொள்ளவேண்டுமென்று ஆசைகூட இருக்கிறது. உன்னை அது விஷயமாய் ஏதாவது கேட்டாரா.

ஸ்ரீ. (யோஜித்து) கேட்டார். அப்பா உங்களுக்கு சம்மதம் தானா.

நாக. உனக்கு சம்மதமானால் எனக்கும் சம்மதம்தான். ஸ்ரீமதி இது விஷயத்தில் நீ என் அபிப்ராயத்தை கேழ்க்காதே. உனக்கு எந்த புருஷன் மீது காதலிருக்கிறதோ. அவனையே நீ கலியாணம் செய்துகொள்வதில் எனக்கு சம்மதம். நல்லது நான் சந்த்ரசேகரரை பார்க்கிறேன். அவரிடம் கொஞ்சம் காரியமிருக்கிறது. போய் வருகிறேன்.

[போகிறார்.]

ஸ்ரீ. அப்பாவுக்கு சந்த்ரசேகரர் ரொம்பவும் வேண்டியவராயிருக்கிறார். அவரை கலியாணம் செய்துகொண்டால் அப்பாவுக்கு மிகவும் திருப்தியாயிருக்கும். நானும் அவ

ரை மணந்தால் அப்பாவின் கவலை தீரும். என் கவலை மட்டும் என் உயிருள்ளளவும் இருக்கவேண்டியதுதான். அய்யோ என் கவலை இருக்கட்டும் அதைப்பற்றி நான் கவனிக்கவில்லை. என்னால் ஒரு பாவமுமறியாத அவர் கவலைப்படுவாரே. இதற்கு நான் என்ன செய்வேன். நல்லது இந்த கவலைதீர சற்று தோட்டத்திற்கு போவோம்.

[போகிறாள்.]

---

## அங்கம் 3—காட்சி 3.

புருஷோத்தமன் வருகிறார்.

புரு. என் கண்மணி. வெகு நாளாய் இங்கே ஏன் வரவில்லை. என்ன காரணமோ தெரியவில்லையே. ஏதாவது உடம்பு அசௌக்யமோ. அப்படி உடம்பு அசௌக்யமாயிருந்தால் சுந்தரி யிடமாவது சொல்லி யனுப்பியிருப்பாளே. அல்லது ஏதாவது விசனகரமான சமாச்சாரம் நேர்ந்திருக்குமோ. எப்படி யிருந்தாலும் சொல்லி யனுப்பி யிருப்பாளே. என் கண்மணி இல்லாத இத்தோட்டம் கூட ஏதோ கண்ணைக் கட்டிவிட்டதுபோல் இருண்டிருக்கிறதே (ஸ்ரீமதி பின்புறமாக வந்து கண்ணைக் கட்டுகிறாள்) இது ஸ்ரீமதியாகத்தான் இருக்கவேண்டும். அவள் தான் புருஷன் நினைத்ததை செய்யக்கூடிய பதிவ்ரதை.

ஸ்ரீ. அப்படி இல்லை உங்கள் வாக்கு பொய்பாகக் கூடாது. நீங்கள் கண்ணைக் கட்டினதுபோல் இருண்டிருக்கிறதென்று பொய் சொல்லுகிறது. அதை நான் கேட்டுக்கொண்டிருக்கிறதா. அதை நிஜமாக்கினேன். ஏது ஜோஸியம் கூட தெரியும் போலிருக்கிறதே. கண்ணைக் கட்டினது ஸ்ரீமதி என்றீர்களே. நான் எந்த புருஷனை கலியாணம் செய்து கொள்ளப்போகிறேன் சொல்லுங்கள். உங்கள் ஜோஸ்யத்தின் திறமையை பார்க்கிறேன்.

புரு. நீ புருஷர்களில் உத்தமனை கலியாணம் செய்துகொள்ளப் போகிறாய் எனக்கு தற்புகழ்ச்சி யென்பதே தெரியாது.

ஸ்ரீ. அதனால் தான் உங்களை புருஷர்களில் உத்தமனென்று சொல்லிக்கொண்டீர்களோ. நான் புருஷர்களில் அதம னைத் தான் கலியாணம் செய்துகொள்ளப் போகிறேன்.

புரு. அப்படியானால் புருஷர்களில் அதமன் நான்தான். எனக்கு பேர்தான் புருஷோத்தமன். ஆகா! கண்மணி என்ன உன் முகத்தாமரை திடீரென்று வாடுகிறது.

ஸ்ரீ. (அவனைக் கட்டிக்கொண்டு விசனத்துடன்) அய்யோ பிராண நாதா. எனக்கு இந்த சமயத்தில் என்ன வேடிக்கை வேண்டியிருக்கிறது. தங்களைக் கண்டவுடனே என் கவலையெல்லாம் எங்கேயோ பறந்துபோய் நான் என்னை யே மறந்து உங்களிடம் சல்லாபம் செய்கிறேன். இதெல் லாம் எனக்கு என்ன வேண்டியிருக்கிறது. (எட்டிப் போய்) பிராண-அய்யா இனி என்னை தொடாதேயுங்கள். நான் மஹா பாபி. இதுதான் கடைசி முறையாய் நான் உங்களைப் பார்ப்பது. இனி நான் உங்களுக்கு தகுந்த வளல்ல.

புரு. கண்மணி இதென்ன நீ என்னை சோதிக்கிறாயா என்ன. அய் யோ நீ பேசுவது உண்மைபோலிருக்கிறதே. உன் முகம் அழுதழுதுவாடிப் போயிருக்கிறதே. (ஓடிப்போய் அவளை இறுகக் கட்டிக்கொண்டு) கண்மணி உனக்கு என்ன ஆபத்து வந்தது. சீக்கிரம் சொல். நான் இப்போ தே சென்று உனக்கு தீங்கிழைத்தவனை கொன்று வருகி றேன்.

ஸ்ரீ. அய்யா! அய்யா! வேண்டாம்! வேண்டாம்.

புரு. ஸ்ரீமதி உன் வாயால் இனி என்னை அய்யாவென்று அழை யாதே. என்னை பிராணநாதாவென்றழை இல்லாவிட் டால் அழைக்கவேண்டாம். இதோ நானும் உன்மேலிரு ந்த கையை எடுத்துவிட்டேன்.

ஸ்ரீ. (மறுபடி கட்டிக்கொண்டு கண்ணீருடன்) பிராணநாதா! பிராணநாதா! நீங்களும்என்னை இப்படி கடிந்துபேசினால்

நான் என்ன செய்வேன். அய்யோ! என் தலைவிதி இப்படி யெல்லாம் நேர்ந்ததே.

புரு. (மறுபடி அவளைக் கட்டிக்கொண்டு வருத்தத்துடன்) கண்மணி நான் மகா பாபி. உன் விசனத்தை அறியாமலே, நான் உன்னை கோபித்துக்கொண்டேன். என்ன ஆபத்து நேர்ந்தது. கண்மணி, சீக்கிரம் சொல்.

ஸ்ரீ. பிராணநாதா என் தகப்பனார் தன் சொத்தெல்லாம் பாங்கில் போட்டிருந்தார் எல்லாம் போய்விட்டது.

புரு. கண்ணே இதற்குத்தானா இவ்வளவு வருத்தம். நான் உன் தகப்பனாருக்கு யாதொரு கவலையுமில்லாமல் செய்யமாட்டேனா.

ஸ்ரீ. பிராணநாதா இன்னும் கேளுங்கள். அவர் இந்த பாங்கில் போடுவதற்காக கடன்களும் ரொம்ப வாங்கி வீட்டையும் ஈடு வைத்து எல்லாம் சேர்த்து போட்டார். இப்பொழுது சொத்துபோயும் கடன் இருக்கிறதே. கடன்காரர்கள் இம்சை செய்வார்களே. இதற்கென்ன செய்கிறது.

புரு. ஆ! கண்மணி உன் விசனத்தின் காரணம் இப்போதுதான் தெரிகிறது. உன் தகப்பனாருக்கு இந்தக் கவலையில்லாமல் செய்யவேண்டும். இதற்கென்ன செய்கிறது. கண்மணி என்னால் செய்யக்கூடியது ஏதாவதிருக்கிறதா.

ஸ்ரீ. (அழுது) இருக்கிறது. தங்களை—தங்களை இழப்பதுதான்.

புரு. கண்மணி, என்ன: என்ன: நீ சொல்லுகிறது எனக்குத் தெரியவில்லையே, என்னை இழந்தால் உன் தகப்பனார் கடன் எப்படி அடையும் (வருத்தத்துடன்) ஓகோ நான் ஏழை. வேறு பணக்காரனாய் கலியாணம் செய்துகொண்டால் அவன் கடனை அடைப்பான். கண்ணே: யாராவது அப்படி கடனை அடைக்க சம்மதமுள்ளவனாயிருக்கிறானா.

ஸ்ரீ. (வாயை பொத்தி) பிராணநாதா வேண்டாம் வேண்டாம் அதை உங்கள் வாயால் சொல்லாதேயுங்கள். வரும் கஷ்டமெல்லாம்வரட்டும். கடன்காரர்கள்செய்யக்கூடிய இம்சையெல்லாம் செய்யட்டும்.

புரு. கண்மணி விசனப்படாமல் சொல், யாராவது அப்படி கடனை அடைக்க சம்மதிக்கிறார்களா.

ஸ்ரீ. உங்கள் அண்ணா சந்த்ரசேகரர் அப்படி செய்கிறேனென்கிறார்.

புரு. ஹா! அப்படியா : அவனுக்கு உன்னை கலியாணம் செய்து கொள்ள சம்மதம் தானா. உனக்கு யார் சொன்னது.

ஸ்ரீ. அவரே என்னைக்கேட்டார். நான் யோஜித்துச் சொல்வதாக சொன்னேன்.

புரு. கண்மணி, கண்மணி! நீ அப்படியே செய். அய்யோ உன் முகம் கலங்குகிறதே, ஸ்ரீமதி உன் தகப்பனார் கஷ்டத்தை அனுபவித்தால் என் மனம் சகிக்குமா. அவரைப்பார்த்து நீ கஷ்டப்படுவதை நான் சகிக்கமுடியுமா. ஸ்ரீமதி நீ யோஜித்துப்பார். என்னை இழந்தால் பாதகமில்லை. உன் தகப்பனார் கஷ்டப்பட்டால் அது உன்னால் சகிக்க முடியுமா. நீ சந்த்ரசேகரன் சொல்லுகிறபடி செய். என்னை இனி நினைக்காதே (அழுது) அய்யோ உன்னைப்பிரிந்து நானென்ன செய்யட்டும். கண்ணே நீ என்னைப்பற்றி கவலைப்படாதே. நீ சந்த்ரசேகரரையே கலியாணம் செய்துகொள். உன தகப்பனாரைக் காப்பாற்று. இனி நான் கலியாணமே செய்து கொள்வதில்லை. உன் சமீபத்திலேயே இருந்து உனக்கு ஒரு தீங்கும் வராமல் பாது காப்பது என் கடமை.

ஸ்ரீ. பிராணநாதா. வேண்டாம். வேண்டாம். என் தகப்பனார் கஷ்டப்பட்டாலும் நான் இறப்பது நிச்சயம். தங்களை இழந்தாலும் நான் இறப்பது நிச்சயம். சந்த்ரசேகரனை கலியாணம் செய்துகொண்டு நான் தங்களை நினைத்து உயிர் விடுவதைவிட தங்கள் அன்பை அடைந்தே நான் உயிர் விடுகிறேன்.

புரு. ஸ்ரீமதி நான் சொல்வதை கேள். உலகத்தில் மனிதருக்கு மானம் பெரிதேயல்லாமல் மற்றது ஒன்றும் பெரிதல்ல. உன் தகப்பனாரை கடன்காரர்கள் கண்டபடியெல்லாம் வைது மானம் போகும்படி செய்வதை நீ எனக்காக

பொறுத்துக்கொண்டிருப்பதா. நீ என்னிடம் உண்மை காதலுடையவளாயின் நான் சொல்லுகிறபடி கேள். நீ சந்த்ரசேகரரை கலியாணம் செய்துகொண்டு உன் தகப்பனைக் காப்பாற்று.

ஸ்ரீ. (அவனைக் கட்டிக்கொண்டு கண்ணீர் விட்டு) பிராணநாதா. தங்கள் வாயால் என்னை பிறியும்படி சொல்லுகிறீர்களா.

புரு. (விசனத்துடன்) ஸ்ரீமதி இந்த சமயத்திற்கு இப்படித்தான் செய்யவேண்டும் நீ.

ஸ்ரீ. நாதா! உங்கள் உத்திரவுப்படியே செய்கிறேன். ஆகிலும் என்னைப்பிரிந்ததால் நீங்கள் உங்கள் உயிருக்கு அபாயம் ஒன்றும் தேடிக்கொள்ளக்கூடாது.

புரு. கண்மணி. அப்படி நீ கனவிலும் நினைக்க வேண்டாம் உனக்கு ஒரு அபாயமும் வராமலிருக்கும்பொருட்டும் உன்னைக்காப்பாற்றும் பொருட்டுமே நான் உயிர் வைத்துக்கொண்டிருக்கிறேன்.

ஸ்ரீ. (கட்டிக்கொண்டு) பிராணநாதா. இனி நான் தங்களை என் கண்ணாலாவது பார்க்கலாமா. அய்யோ! நான் என்ன செய்வேன். [போகிறார்கள்.]

---

## அங்கம் 3—காட்சி 1.

### சந்தரசேகரன் வீடு.

[சந்த்ரசேகரர் வருகிறார்].

சந். சீ. என்புத்தி தான் என்ன புத்தி. கொஞ்சம்கூட நம்மிடத்தில் ப்ரியமில்லாத ஸ்ரீமதியை நான் ஏன் இப்படி கட்டாயம் செய்து அவள் விஷயமாய் நமது பணத்தை செலவுசெய்ய முயலவேண்டும். ஆனால் அவள் இப்போது அப்படி இருக்கிறாளேயொழிய கலியாணம் செய்து கொண்டால் அவளுக்கு ப்ரியம் வந்துவிடும். ஆகா! அவள் அழகென்ன! புத்தியென்ன! இப்படிப்பட்ட பெண் நமக்குக் கிடைத்தால் நாம் என்னதான் கொடுக்கக்கூடாது. நாம்

இவ்வளவு உபகாரம் செய்வதாய் சொல்லியும் யோஜித்து சொல்வதாகச் சொல்லி ஒன்றும் இதுவரையில் சொல்லாமலிருக்கிருள். நானும் அவள் வார்த்தையை நம்பி கடன்காரர்களை கண்டிக்க சொல்லவில்லை. இனி தாமதிக்கலாகாது. அவளாக நமக்கு சொல்லியனுப்பி கலியாணம் செய்துக் கொள்வதாக வாக்களிப்பாளென்று தோன்றவில்லை. கடன்காரர்களைக் கொண்டு அவள் தகப்பனை நிர்ப்பந்தித்தால் அப்பொழுது வருத்தம் பொறுக்கமாட்டாமல் நமக்கு சொல்லி அனுப்புவாள். அப்பொழுது நமது காரியம் பலிக்கும். ஆகிலும் இப்படி ஒருபெண்ணை நிர்ப்பந்தம் செய்து கலியாணம் செய்து கொள்ளலாமா. சீ. இதென்ன யோஜனை சுப்பிரமணியசுவாமி வள்ளியம்மையை விநாயகரைக்கொண்டு யானை ரூபமாய் பயமுறுத்தச்சொல்லி அந்தபயத்தில் தானே அவள் தன்னை கலியாணம் செய்வதாய் வாக்குதத்தம் வாங்கினார்.

ராம. நீர் செய்வதெல்லாம் சாஸ்திரத்தை அனுசரித்துத் தானே. முருகக்கடவுள் மீது வள்ளிக்கு உண்மையான காதலிருந்தது. அது தெரிந்து அவர் அப்படி செய்தார். இவளுக்கும் உமது மீது சிம்மத்துக்கும் யானைக்குமுள்ள ப்ரியமிருக்கிறது.

சங். ராமா. நீ எங்கிருந்து வந்தா—யிப்போது ஆகாசத்திலிருந்து குதித்தது போல்.

ராம. நான் துஷ்ட நிக்ரகம் செய்ய வந்தவனல்லவா, அவாள் எங்கிருந்தாலும் நான் அங்குவந்து குதிப்பேன்.

சங். ஏண்டா அஸத்துப்பயலே நான் துஷ்டனா இனி இப்படிச் சொன்னால் தெரியும்.

ராம. அது கிடக்கிறது. எனக்கு ஏன் சொல்லியனுப்பினீர் சொல்லும்.

சங். ராமா, நீ நாகராஜருக்கு கடன் கொடுத்திருக்கும் பேர்வழிகள் எல்லாரையும் இன்று அவரை கண்டிக்கச் சொல். சீக்கிரம் போ.

ராம. அப்படியே செய்கிறேன் (போகிருன்).

சங். ஸ்ரீமதி இனி நீ என்ன செய்வாய் பார்ப்போம். இனி நீயே எனக்கு சொல்லியனுப்புவாயேயன்றி நான் அதைப்பற்றி கவலைப்படவேண்டியதில்லை. (போகிறான்)

## அங்கம் 3—காட்சி 5.

### நாகராஜய்யர் வீடு.

[நாகராஜய்யர் வருகிறார்.]

நாக. (தனக்குள்) ஸ்ரீமதியோ என்னைப் பார்த்துப் பார்த்து தானும் கவலைப்படுகிறாள். அவளிடம் நமது கவலையை சொல்லிவிடலாமென்று பார்த்தாலும் நாவெழவில்லை. சொன்னாலும் அவள் வருத்தம் இன்னும் அதிகரிக்கும். அய்யோ நான் இந்த இம்சைக்கு என்ன செய்வேன். இப்படி வருமென்று நான் கனவிலும் எண்ண முடியாதே. நான் அதிக ஆசைப்பட்டதாலல்லவா இப்படி வந்தது. பழய பாங்கு நல்லதாயிருந்ததே. அதிலிருந்து மாற்றுவதோடு நின்றேனா கடனும் வாங்கிப்போட்டேன். என் புத்தியில்லாத நடத்தையால் இப்போது நன்றாய் அனுபவிக்கிறேன்.

ஓர் கடன்காரன். அய்யா! நாகராஜரே என் கடனுக்கு என்ன வழி சொல்லுகிறீர். நான் இத்தனை நாள் மரியாதையாய் நீரே ஒழிப்பீரென்று பார்த்தேன் இனி தாக்ஷணியம் வைக்க முடியாது.

ராம. ஓய் என்—காணும் அவரை இம்சை செய்கிறீர். பாவம் அரிச்சந்திரன்போல் அவர் உம்மிடத்தில் அகப்பட்டுக் கொண்டு முழிக்கிறார். நான் தருகிறேன் வாரும்—காணும்.

ஓர் க. அய்யா தாருமய்யா இப்படி சொல்லப்பட்டவர்கள்தான் யாரிருக்கிறார்கள்.

ராம. புடியும் மடியை புடியும்.

ஓர் க. (வெகு ஆவலுடன்) பவுனாக இருக்கிறதோ நோட்டாக இருக்கிறதோ.

ராம. கனமாய் இருக்குங்காணும், மடியை கெட்டியாய் பிடியும்.

ஓர் க. ஓகோ துட்டாயிருக்கிறதோ. இதை நான் எப்படி மாத்துகிறது. (மடியை உதறி) சீ. சீ. என்னங் காணும் புளியங்கொட்டையைப் போடுகிறீர் இதென்னத்துக்கு.

கடனதை வாங்கிக்கொள்ள துணியையும் விறித்த ஐயா
வருத்த இப்புளியங்கொட்டை விரைவில் நீர் விதைத்தீராஞல்,
பருத்த நற்புளியம் தோப்பும், காய்க்குமே புளியை விற்ருல்,
கடனும்மைச் சேர்த்துமேதான் காற்றுப்போல் பறந்துபோமே.

ராம. ஓய் முட்டாள் இப்போ பேசிகொண்டிருக்க நேரமில்லை எல்லா வற்றையும் சீக்கிறம் பொறுக்கிக்கொள்ளும். அப்புறம் கடன் அடையதாமதப்படும். உடனே இதைக் கொண்டுபோய் உம்து கொல்லையில் நடும். பெரிய புளியந்தோப்பாகும் குத்தகைக்கு நல்ல இனமாய்ப் பார்த்து அடையும். அங்கேயும் ஏமாந்துபோகப் போகிறது ரொக்கக் குத்தகைக்கு அடைந்தால் இன்னும் விசேஷம். குத்தகை பணத்தை அற்புத நாடக பாங்கில் போடா தேயும். உமது கடன் உடனே அடையும்

ஓர் க. சீ. சீ. உமக்கு கேலி எப்போது செய்கிறதென்பது தெரியவில்லை போங்காணும். நாகராஜரே என்ன சொல்லுகிறீர்.

நாக. அய்யா! நான் என்ன செய்யட்டும். கொஞ்சம் பொறுத்துக்கொள்ளுங்கள். சீக்கிரம் ஏதாவது ஏற்பாடு செய்கிறேன்.

ஓர் க. நல்லது இன்னும் 2 நாள் பார்ப்பேன். பணம் வரா விட்டாலோ வாரண்டுடன் வருவேன். அப்புறம் என் பேரில் மனஸ்தாபப்படக் கூடாது (போகிறுன்.)

வே க. நாகராஜரே, நன்ருயிருக்கிறது வியாபாரம். என் கடனை அடுத்த ஜன்மத்தில் கொடுக்கிறதாக தீர்மானமோ இனி இப்படி யிருந்தால் முடியாது.

ராம. வாரும், வாரும், உமக்கு எவ்வளவு கொடுக்கவேணும், அவர்.

வே. ஒ. ஏதோ நீர் கேழ்ப்பதைப் பார்த்தால் துகை தயாராய் வைத்து அவரவர்க்குள்ள நகையை இப்பொழுதே கணக்குப் பார்த்து கொடுத்து விடுவீர்போலிருக்கிறதே.

ராம. ஆமாம், ஐயா! இப்போதுதான் ஒரு கடன்காரரை திருப்தி செய்து அனுப்பினேன். அதனால்தான் உம்மையும் கேழ்க்கிறேன்.

வே. க. எனக்கு ரூ. 5,000 கொடுக்கவேண்டும். அது தவிற வட்டியும் வரவேண்டும்.

ராம. நான் சொல்லுகிறபடி உமக்கு சம்மதமானால் உமது கடனை இப்பொழுதே ஒழித்து விடுகிறேன்.

வே. க. சொல்லும் எனக்கு கட்டுமானால் ஒப்புக்கொள்ளுகிறேன்.

ராம. உமக்கோ அவர் நிலமை தெரியும் உமது இஷ்டப்படி எதிர் பார்த்தால் முடியாது.

வே. க. நீர் எப்படி ஒழித்தபோதிலும் சம்மதம் பார்த்துக்கொள்ளும் எனக்கு வேறு ஐவேஜியில்லே.

ராம. அசலேயும் வட்டியும் ஜாடாவாய் தள்ளி ஒழிப்பதானால் இப்போதே உமது கடனை தீர்த்துவிடுகிறேன்.

வே. க. (சிறித்து) போங்காணும் இதுதானு. நீர் கடனை ஒழிக்கிற வழி.

ராம. சிறிக்கமாட்டீரா நீர் கடனுக்கு வழி பண்ணிவிட்டேனல்லவா (போகிறான்.)

வே. க. ஐயா! என்ன சொல்லுகிறீர்கள்.

நாக. ஐயா! பயப்படாதேயுங்கள் உங்கள் கடனை மோசம் செய்யமாட்டேன். சீக்கிறம் ஒழித்துவிடுகிறேன்.

வே. க. அய்யா: கடைசி தடவை சொன்னேன். நாளை சாயங்திரத்திற்குள் ஒழிக்காமல் போனால் ஜயில் போய் சேர வேண்டியிருக்கும். (போகிறான்.)

வே. க. ஏனய்யா என் வயிறு எறிகிறதே. உமது வீடு ரூ. 5000 போராதென்கிறார்கள் ரூ. 7000க்கு என்னே ஏமாற்றி

ஈடு வைத்தீரே. நான் என் தொகையை எப்படி வசூல் செய்கிறது. உமக்கு வேறு சொத்தும் இல்லையே. உமது ஈடும் வேண்டாம் ஒன்றும் வேண்டாம் ; பணத்தை கீழே வையும்

நாக. அய்யா இந்த சமயத்தில்தானு நீரும் நிர்ப்பந்திக்கவேண்டும். கொஞ்சம் பொறும் உமது தொகையை கொடுத்து விடுகிறேன். என் வீட்டை ரூ. 8000-க்கு இப்போது யாரும் வைத்துக்கொள்வார்கள்.

[சந்த்ரசேகரர் வருகிறார்.]

சந்த்ரசேகரரே வாரும் நானே உம்மிடம் வரலாமென்றிருந்தேன். கடன்காரர்கள் இம்சை பொறுக்கக் கூடவில்லை. இவருக்கு ஈடு போராதாம். நான் ஏமாற்றிவிட்டேனும்.

நாக. இருக்கட்டும் (கடன்காரனை பார்த்து) நீர் போமய்யா. நான் அவரைக் கேட்டுக்கொண்டு வேண்டிய ஏற்பாடு செய்கிறேன்.

வே. க—அய்யா ! தங்கள் சொன்னுல் சரிதான் (போகிறான்.)

சந். நாகராஜரே தாங்கள் சொல்லாமலே நான் எல்லாம் அறிந்து கொண்டேன். நான் தங்களுக்கு ஒத்தாசைசெய்யலாமோ.

நாக. நான் எந்தக் காரணத்தைக்கொண்டு தங்கள் ஒத்தாசையை கோறுவது.

சந். ஸ்ரீமதி என்னை கலியாணம் செய்துகொண்டால் நான் எல்லாம் செய்யலாமல்லவா.

நாக. ஸ்ரீமதியை தாங்கள் கேட்டீர்களா.

சந். அவளை கேழ்க்கத்தான் வந்தேன்.

நாக. சரி, அவளை பாருங்கள் நான் போகிறேன் (போகிறார்.)

[ஸ்ரீமதி வருகிறாள்.]

சந். ஸ்ரீமதி இங்கே நடந்ததெல்லாம் உனக்கு தெரியுமா.

ஸ்ரீ. நன்றாய் தெரியும். என் உயிர் ஒன்றுதான் போகவில்லை. என் தகப்பனார் படும் கஷ்டத்தை நான் பார்க்கவேண்டியிருக்கிறது.

சந். ஸ்ரீமதி இப்போதாவது சொல் நான் சொன்னபடி நீ செய்

தால் இந்த கஷ்டத்தை இப்பொழுதே நீக்கி விடுகிறேன். உனக்கும் ரூ. 50,000 தருகிறேன்.

ஸ்ரீ. எனக்கு ஒன்றும் வேண்டாம் நீங்கள் சொன்னபடி செய்கிறேன். இந்த கடன்களை மட்டும் உடனே தயவு செய்து தீர்த்துவிடுங்கள்.

சந். முகூர்த்தம் வருகிற வெள்ளிக்கிழமை நன்றாயிருக்கிறது.

ஸ்ரீ. இப்பொழுதே—யிருந்தாலும் சரிதான் இந்தக் கடன்களை இப்பொழுதே தீர்த்து என் தகப்பனாரிடமும் தீர்ந்துவிட்டதாக சொல்லுங்கள்.

சந். சரி அப்படியே செய்கிறேன் (போகிறார்கள்)

---

## அங்கம் 3—காட்சி 6.

சந்த்ரசேகரன் வீடு.

[சந்த்ரசேகரன் வருகிறார்.]

சந். நமது அதிர்ஷ்டமே அதிர்ஷ்டம். எந்தக்காரியம் நான் மனது வைத்தால் நடக்கிறதில்லை. புருஷோத்தமனுக்கென்று ஏற்பட்ட உயிலை மறைத்து அவனுக்கு சொத்து ஒன்றுமில்லாமல் எல்லாவற்றையும் நான் அடையவில்லையா. சற்றுமுன் என்னைக் கண்டால் முகத்தை திருப்பிக்கொண்டுபோன ஸ்ரீமதியின் கர்வத்தை அடக்கி அவள் என்னை கலியாணம் செய்துகொள்ள சம்மதிக்கும்படி செய்யவில்லையா. நமக்கு அசாத்யமென்பது என்ன இருக்கிறது.

ராம. இதுவும் புருஷோத்தமன் சொத்துதான் நீர் அடையப்போகிறீர்.

சந். அடே நீ எங்கிருந்து திடீரென்று வருகிறாய். உனக்கு ஒன்றும் தெரிகிறதில்லை. வாயில் வந்ததையெல்லாம் உளரிக்கொண்டிருக்கிறாய். புருஷோத்தமன் சொத்தாவது என்னடா பிதற்றுகிறாய்.

ராம. ஆமாம் அய்யா! எனக்கு உமது பேரில் ஆசை. உமக்கு

அவள் பேரில் ஆசை. அவளுக்கு புருஷோத்தமன்பேரில் ஆசை. புருஷோத்தமனுக்கு அவள் பேரில் ஆசை.

சங். ஏண்டா அவளுக்கு புருஷோத்தமனிடம் ஆசையென்று யார் சொன்னது. என்னை யல்லவோ அவள் கலியாணம் செய்துகொள்ளப் போகிருள்.

ராம. இல்லை நீர் அவளை கலியாணம் செய்துகொள்ளப் போகிறீர்.

சங். இரண்டும் ஒன்றுதானேடா.

ராம. எப்படி ஒன்ருகும்? இருவர் மனமும் ஒன்ருனலல்லவோ அப்படி சொல்லலாம். நீர் அவளையே நினைத்துக்கொண்டிருக்கிறீர். அவள் புருஷோத்தமனையே நினைத்துக் கொண்டிருக்கிருள்.

சங். கலியாணம் செய்து விட்டால் நினைக்கமாட்டாடா.

ராம. அது உமது வீண் எண்ணம். கலியாணம் உடல் இரண்டை ஒன்று சேர்க்குமேயல்லாது மனதை ஒன்று சேர்க்கமாட்டாது. மனது புருஷோத்தமனையே நாடும்.

சங். அசத்துப்பயலே உளராதே. நான் கலியாணம் நிச்சயம் செய்துவிட்டேன். இனி கலியாணத்திற்கு வேண்டிய ஏற்பாடுகளெல்லாம் செய்யவேண்டும்.

ராம. கலியாணமிருக்கட்டும். தாலிப்பேச்சை அறுத்துப் பேசினீர்களா?

சங். என்னடா. மடப்பயலே கலியாணம் செய்ய யோஜிக்கும் போதே தாலியை அறுக்க சொல்லுகிருய்.

ராம. இல்லை. அய்யா! உமது மனதில் ஏன் அப்படி வித்தியாசமாய் தோன்றுகிறது. பேச்சை அறுத்துப்பேசுகிறதென்ருல் சந்தேகத்துக்கு இடமில்லாமல் பேசுவது. சில இடங்களில் ஒரு தாலி தான் செய்வார்கள். சில இடங்களில் இரண்டு செய்வார்கள் அதில் தான் மனஸ்தாபம் வருகிற வழக்கம்.

சங். அது கிடக்கிறது. வருகிற வெள்ளிக்கிழமை கலியாணம். நீ போய் நாகராஜர் கடன்காரர்களைக் கண்டு ஒருவரும் கடனை கேழ்க்கக் கூடாதென்று சொல்.

ராம. ஏன் நீர் எல்லாக்கடனையும் ஒப்புக்கொண்டீரோ. கடனுக்கு ஒப்புக்கொண்டு கடனுக்குக் கலியாணம் செய்கிறீரோ.

சங். அசத்துப்பயலே கடனுக்காகவா கலியாணம் செய்து கொள்ளப்போகிறேன். இனிமேப்படி பேசாதே.

ராம. நல்லது கலியாணத்துக்கு நான் என்ன செய்யவேண்டும்.

சங். எல்லாம் நீதாண்டா செய்யவேண்டும். கொட்டகை போட்டு சிங்காரிக்கவேண்டும். நல்ல பாட்டுக்கச்சேரி, சதிர்க்கச்சேரி எல்லாம் வைக்க வேண்டும். நல்ல நாயனம், பாண்டு வாத்யம் தருவிக்கவேண்டும்.

ராம. எல்லாம் விபரமாய் சொன்னால் அந்தப்படி ஏற்பாடு செய்கிறேன்.

சங். சங்கீதத்துக்கு ராமனாதபுரம் பூச்சி அய்யங்கார், பிடில் கோவிந்தசாமி பிள்ளை, பில்லாங்குழல் சஞ்சீவிராவ், ம்ருதங்கம் அழகநம்பி, இவர்களை தருவிக்கவேண்டும். சதிருக்கு திருவாரூர் ராஜாம்பாள், நாயனத்துக்கு செம்புனார் கோவில் ராமசாமிபிள்ளை, பாண்டு வாத்யத்துக்கு தஞ்சாவூர் கோவிந்தசாமி ராவ் கம்பெனி, இவர்கள் வரவேண்டும்.

ராம. இதற்கெல்லாம் என்ன சிலவாகும்.

சங். ரூ. 10,000 ஆகும்.

ராம. கலியாணச்சிலவு மொத்தம் என்ன ஆகும்.

சங். ரூ. 50,000.

ராம. இந்த 50,000 ரூபாயை புருஷோத்தமனுக்கு கொடுத்தாலென்ன. பிறர் இப்படி கொள்ளையிட்டு கொண்டு போவதை அவனுக்கு கொடுத்தால் என்ன. அவன் உமது தம்பி தானே.

சங். அவனுக்கு எதற்காக கொடுக்கிறது.

ராம. ஸ்ரீமதி தகப்பன் கடனை அடைத்து, அவளை கலியாணம் செய்து கொள்வதற்காக.

சங். மடயா இப்போது புருஷோத்தமன் கலியாண விஷயமாய்த் தான் உன்னை யோஜனை கேட்டேனே.

ராம. அப்படிச்செய்தால் ஸ்த்ரீ புருஷர்கள் ஒத்து வாழ்வார்களென்று சொல்லவந்தேன்.

சங். ஏன் நாங்களிருவரும் ஒத்து வாழமாட்டோமோ.

ராம. இல்லை வாழலாம். ஆனால் புருஷோத்தமன் அடிக்கடி மத்யஸ்தம் செய்துவிட வேண்டியிருக்கும். அதனால் பாதகமில்லை.

சங். ராமா. இதெல்லாம், உன்னை கேழ்க்கவில்லை. நான் சொன்னபடி நீ செய்வாயா மாட்டாயா.

ராம. செய்யத்தான் வந்திருக்கிறேனே. ரூ. 10,000-க்கு பாடகர்கள் தருவிக்கவேண்டும். அவர்கள் ஒவ்வொருவரும் ஒரு நாளைக்கு எத்தனை மணி வேலை செய்யவேண்டும்.

சங். ஏண்டா. அவர்களென்ன கூலியாட்களா வேலை செய்யவாவது ஒவ்வொரு வித்வானும் ஒருநாள் கச்சேரி செய்வார்.

ராம. ஒரு நாள் என்றால் ராத்திரியுமா. நான் எப்படி தூங்காமல் விழித்துக்கொண்டிருக்கிறது.

சங். மடயா! ஒரு நாள் என்றால் 24 மணியா பாடுவார்கள். 3-மணி நேரத்திற்கு மேல் பாடமாட்டார்.

ராம. என்னய்யா இவ்வளவு பணத்தை வாங்கிக்கொண்டு 3-மணிதானா பாடுகிறது. ஒரு வித்வான் பாடும்போது மற்றவர்கள் என்ன செய்கிறது.

சங். ஒன்றும் செய்கிறதில்லை.

ராம. போமய்யா கேலி பண்ணுகிறீர். அவ்வளவு பணத்தை கொடுப்பதாக பேசிவிட்டு சும்மா இருக்கச் சொல்வார்களோ. ஒன்றும்செய்யாமல் உட்கார்ந்திருந்தால் சவுக்கை எடுத்துக்கொண்டு அடிக்கமாட்டேனா, அவர்களை.

சங். அப்பா, அப்படி ஏதாவது செய்துவிடாதே. அப்போது கலியாணத்தில் பாட்டு பெரிய பாட்டாய் போய்விடும்.

ராம. பின்னே, பணத்தை வாங்கிக்கொண்டு சும்மா இருக்கவாவது. எல்லா வித்வான்களும் சேர்ந்து வேலை செய்யட்டும். நாயனம், பாண்டு, வாய்ப்பாட்டு, பிடில், பில்லாங்குழல் எல்லாரும் சேர்ந்து வாசிக்கட்டும்.

சங். ஏன் தாசியை விட்டுவிட்டாய். அவளும் அவளுக்கு தோன்றின இடத்தில் நின்று சதிர் ஆடிக்கொண்டிருக்கட்டும். நாமெல்லாம் கலியாண சிரமம் தீற எங்கேயாவது போய் தூங்குவோம். பேஷ்! நல்ல புத்திசாலி, வேலைவாங்க விட்டால் உன்னை விடவேண்டும்.

ராம. அதனால் தான் நீங்கள் என்னை வரவழைத்தீர்கள். எனக்கு தெரியாதா. சரி அது விஷயம் நான் பார்த்துக்கொள்ளுகிறேன். மற்றவிஷயங்கள்.

சங். அப்பா! அதுதான் சொல்லவந்தேன். அந்த விஷயமட்டும் நீ பார்த்துக்கொள்ளவேண்டாம். சாப்பாடு விஷயமெல்லாம் நீ பார்த்துக்கொள்.

ராம. அப்படியே செய்கிறேன். சமயலில் யார் கெட்டிக்காரர் யாரைப்போடலாம்.

சங். சமயலுக்கு தனுக்கு சுந்தரமய்யரை போடு நன்றாய் செய்வார். இக்காலத்தில் காபிசண்டை பலமாயிருக்கிறது. அதில் சிலர் தங்களுக்கு எப்போதும் பேர் வாரதென்று கண்டு காபி வரவில்லையென்று சண்டை போட்டு பேர் வாங்குகிறது, பிறகு எல்லாரும் காபி சண்டை போட்ட பிரபு இவர்தான் அவர் கோபிக்காமலிருக்கவேண்டுமென்று சொல்லும் கீர்த்தியை அடைவார். அப்படிப்பட்ட சண்டை இல்லாமல் அவர் பார்த்துக்கொள்வார். சமயலிலும் ஒவ்வொரு பதார்த்தமும் தனுக்காயிருக்கும்.

ராம. என்னய்யா! உமக்கு லாபம் தெரியவில்லை. நல்ல சமயல்காரனைப் போட்டால் எல்லோரும் அதிகமாய் சாப்பிடுவார்கள். நமக்கும் சிலவு அதிகமாகும். டாக்டருக்கும் வரும்படி அதிகமாகும். சமயல் தெரியாதவனைப் போட்டால் தான் நல்லது.

சங். முட்டாள், உனக்குத்தெரியாது. நான் சொன்னபடி செய்போ. (போகிறார்கள்).

---

## அங்கம் 3—காட்சி 7.

சந்த்ரசேகரர் வீடு. கலியாணம்.

**ஒரு சாஸ்திரிகள்.** (வேறு ஒருவரைப்பார்த்து) சாஸ்திரிகளே ஏது இவடம் வந்தது. அதிசயமாயிருக்கிறதே.

**வே-சா.** தாங்கள் எதற்காக வந்தீர்களோ, அதற்காகவே தான் நானும் வந்தேன்.

**ஒ-சா.** சரி, சரி, நல்ல பிரபுவாமே அவதாரம் அகப்படுமா.

**வே-சா.** வராஹாவதாரம் தான் அகப்படும். பாதம்கூட சதுஷ் பாதம் தான். சுத்தலௌகீகனும் நம்ம வாயில் மண்ணை போட்டுவிட்டு தேவடியாள், மேளகாரன், இவர்களுக்கு தாராளமாய் கொடுப்பானும்.

**ஒ-சா.** இல்லையே வாத்யார் சொன்னரே. ஒரு காவேரி ஸ்னனத்துக்கு குறையாதாமே.

**வே-சா.** ஓய் கெட்டியாய் இப்படி சொல்லாதேயும். எவனுவது வாயைப் பார்த்து போடப்போருன் அபசகுனம் போல் சொன்னுரென்று. வாத்யாருக்கென்ன கல்யாணமானுலும், கல்லெடுப்பானுலும் அவர் வரும்படி வந்துவிடும். நம்ம பாடு திண்டாட்டம். இக்காலத்தில் தாசிகளுக்குக் கொண்டாட்டமும் வைதீகர்களுக்கு திண்டாட்டமுமாயிருக்கிறது.

**தெருவில் ஒருவன்.** அப்படி இருந்தும் வைதீகாள் வடையை தின்றுவிட்டு உப்பிப்போய் விடுகிருர்களே.

**வே-சா** சாஸ்திரிகளே. இந்தப்பயல் போக்கிரித்தனத்தைப் பார்த்தீரா.

**ஒ-சா.** என்னய்யா! ஒரு பாட்டுக்கச்சேரிக்கு ரூ. 10,000 சிலவு செய்கிறவர் வைதீகாளுக்கு ரூ. 1,000 சிலவு செய்யமாட்டாரா.

**வே-சா.** அது மனசு வராதப்பா. காலம் கலிகாலமில்லையா, என்னமோ. பார்ப்போம்.

**ஒ-சா.** ஏன் கலியாணம் ஆரம்பிக்க இத்தனைபோது. முகூர்த்த காலம் வரவில்லையோ.

**வே-சா.** முகூர்த்தமெல்லாம் பேருக்குத்தான் அது வாத்யார் சொன்னபடி கேழ்க்கும். எல்லாம் வாத்யார் வைத்த சட்டம் தானே. வாத்யார் தாமதம் செய்கிறூர். வாருங்கள் போய் பார்ப்போம். (போகிறூர்கள்).

---

## அங்கம் 3—காட்சி 8.

சந்த்ரசேகரன் வீடு.

[வேணீ வருகிறூள்.]

**வேணீ.** ஆகா, இந்த சந்த்ரசேகரனை நான் விட்டேனு. என்னை முட்டாளென்றல்லவா எண்ணி விட்டான். என்னை கலியாணம் செய்து கொள்வதாய் சத்யம் செய்து கொடுத்து விட்டு இப்போது ஸ்ரீமதியை கலியாணம் செய்துகொள்ள பார்க்கிறுனல்லவா. நல்லது இந்த கலியாணம் நடக்கிறதை பார்க்கிறேன். இப்பொழுதாவது அவனை சந்தித்து என்னை உடனே எங்கேயாவது கூட்டிப்போய் கலியாணம் செய்துகொள்ளும்படி கேழ்க்கிறேன். இல்லாவிட்டால் என் சுகம் போய் எனக்கு அவமானம் நேரிடும் பொழுது இவன் மட்டும் சுகப்படுவானேன். இவன் சுகத்தையும் கெடுத்து விடுகிறேன். (உயிலை எடுத்து) ஆஹா இது வெளியில் வந்தால் இந்த சொத்து முழுவதும் புருஷோத்தமனுடையதல்லவா. மகா பாபி அவன் சொத்தை திருடிக்கொண்டது மன்றி சொத்தைக் காட்டிலும் அதிகமாய் மதித்திருக்கும் ஸ்ரீமதியையும் திருடப் பார்க்கிறுனே. ஆனுல் அவர்கள் எப்படி போனுல் எனக்கென்ன. என்னை இவன் கலியாணம் செய்துகொண்டால் சரிதான் இவன் பணமெல்லாம் நமக்கு உபயோகமாகும். இல்லாவிட்டால்—யாரோ வருகிறுப் போலிருக்கிறது. ஒளிந்துகொள்ளுகிறேன் (ஒளிகிறுள்).

**சந்.** ராமனுக்கு எழுதியிருந்த கடிதத்தை நேற்று இங்கே வந்தபோது எங்கேயோ போட்டுவிட்டேனே. இப்போது தான் சட்டையைப் பார்த்ததும் ஞாபகம் வந்தது.

என்ன செய்கிறது. அது யார் கையிலாவது அகப்பட்டால் என் கதி என்ன ஆகும். நான் என்ன செய்வேன். (தேடுகிருன் கீழே பார்த்துக்கொண்டு போய் வேணிமேல் விழுகிருன். பிறகு திடுக்கிட்டு அவளைப் பார்த்து) வேணி நீ எதிங்கே வந்தது.

வே. உங்கள் கலியாணத்தை நான் மட்டும் பார்க்கவேண்டாமா! நீங்கள் அழைக்காவிட்டாலும் நானுக விஜாரித்து வந்தேன்.

சங். வேணி, கலியாணமாவது, என்ன சமாச்சாரம்.

வே. ஆம், அப்படித்தான் சொன்னேன் ஒரு சந்த்ரசேகரர் என்பவர் ஒரு ஸ்ரீமதி என்னும் பெண்ணை இன்று கலியாணம் செய்யப் போகிருராமே தங்களுக்குத் தெரியுமோ, அது விஷசேகரரே, அய்யோ! சந்த்ரசேகரரே.

சங். ஆம் அதற்கென்ன.

வே. நீங்கள் — இல்லை— அவர்— அந்த சந்த்ரசேகரர்.

சங். வேணி இதெல்லாம் என்னத்திற்கு நான் தான் அந்த சந்த்ரசேகரர்.

வே. அப்படிச் சொல்லுங்களேன். முன்னமே சொல்லலாகாதா. நீங்கள் ஸ்ரீமதியை கலியாணம் செய்துகொள்வதை உங்கள் மூத்த மனைவியாகிய நான் பார்த்து சந்தோஷிக்காமல் வேறு யார் சந்தோஷிப்பது.

சங். வேணி நீ என்னோடு ஏதோ சண்டைபோட வந்திருக்கிருய். இந்த சமயத்தில் நீ யிப்படி செய்வது நியாயமில்லை.

வே. சண்டை என்ன என் சக்களத்தி எப்படி யிருக்கிருளென்று நான் பார்க்கவேண்டாமா. அவளுக்கு என் புருஷனுடைய குணுதிசயங்களையெல்லாம் எடுத்துச் சொல்ல வேண்டாமா.

சங். வேணி நீ இங்கே வந்தது சரியல்ல. நீ உடனே போய்விடு. உனக்கு வேண்டிய பணம் தருகிறேன். உனக்கு என்ன வேண்டும். சீக்கிரம் சொல்.

வே. எனக்கு நீங்கள் தான் வேண்டும்.

சங். வேணி உன் கேலியை நிறுத்து, இது சமயமல்ல உனக்கோ இனி நான் உன்னை கலியாணம் செய்துகொள்ளமாட்டேனென்று தெரியும். ஆகையால் உனக்கு வேண்டிய பணத்தைக் கேள்.

வே. எனக்கு வேண்டிய பணம் உம்மால் கொடுக்க முடியுமா? உமக்கு ஏது பணம்.

சங். நான் பணக்காரனல்லவா.

வே. என்னிடம் ஏன் மறைக்கிறீர். பணம் உம்முடையதா. புருஷோத்தமனுடையதா.

சங். உனக்கு ஏதோ பைத்யம் போலிருக்கிறது. என்ன உளருகிறாய்.

வே. பைத்யம் எனக்குப்பிடித்தால் உமக்கு நல்லதுதானே. ஆனாலும் இன்னும் பிடிக்கவில்லை. புருஷோத்தமனுக்கு உயில் மூலமாய் கிடைத்த சொத்தை நீர் சிலவு செய்ய என்ன பாத்தியம்.

சங். நல்லது. இனி நீ இவ்வளவு பிடிவாதம் செய்யும்பொழுது அதன் உண்மையை விளக்க வேண்டும். உனக்கு யார் சொன்னது.

வே. ஒருவர் என்ன சொல்லுகிறது. எனக்கு நேரே தெரியும்.

சங். ஹா! இவ்வளவுதானா ஓர் ஏழைப்பெண் வார்த்தையை யார் நம்பப் போகிறார்கள்.

வே. அதைத் தான் பார்ப்போம். நானும் என் சக்களத்தியிடம் வருகிறேன் அவள்கூட நம்பமாட்டாளா. பார்ப்போம்.

சங். சீ. சீ. நாயே, நீ எங்கே கிடந்தவள். சக்களத்தியா அவள் உனக்கு, என்னைப் போல் ஆயிரம் பேரைப் பார்த்த உனக்கு அவள் சக்களத்தியா. இன்னும் ஒருமுறைசொல். உன் நாவை அறுக்கிறேன்.

வே. கிடக்கிறது. கோபித்துக்கொள்ள வேண்டாம். என் ஓர்ப்படியிடம் என்னைக் கூட்டிப்போங்கள். நான் அவளை பார்க்க வேண்டும்.

சங். பார்த்தால் என்ன, உலகத்திலுள்ள பைத்யங்களில் இது ஒன்று என்று நினைத்துக்கொள்வாள்.

ஸ்ரீமதி

வே. புறப்படுங்கள். வைத்யம் யாரென்று காண்பிக்கிறேன்.

சங். உன் பேச்சை யார் கவனிப்பார்கள். ஏதாவது எழுத்து மூல மான ஆதாரமாயிருந்தாலும் பார்க்கலாம்.

வே. அப்படி அவள் சந்தேகப்பட்டால் என் ஆதாரத்தைக்காண பிக்கிறேன். போவோம் வாருங்கள்.

சங். ஆதாரமா, உன்னிடத்தில் என்ன ஆதாரம் இருக்கப் போகி றது. வீண் மிறட்டு மிறட்டுகிறாய்.

வே. ஒன்றுமில்லை போவோம். வாருங்கள், இனி தாமதம் செய் யக்கூடாது. முகூர்த்தகாலம் வந்துவிட்டது.

சங். எங்கே அந்த ஆதாரங்களை காட்டு பார்ப்போம். (மனதில்) ஓகோ அந்த உயிலை கொளுத்திவிட்டதாக நினைத்தோமே. அது கொளுத்தப்படவில்லை போலிருக்கிறது. அய்யோ நான் என்ன செய்வேன். இவள் முன் ஒரு நாள் இரவில் என் வீட்டிலிருந்தபோது அதை திருடிவிட்டாள்போலி ருக்கிறது.

வே. இல்லை. வேடிக்கையாய் சொன்னேன். என்னிடம் ஆதிரவு ஏது.

சங். வேணி, நான் இதுவரையில் வேடிக்கையாய் பேசினேன். எங்கே அந்த ஆதரவுகளைக் காண்பி கோபித்துக்கொள் ளாதே.

வே. (மனதில்) காண்பிப்போம். அதைப்பார்த்து பயந்தாவது நம்மை கலியாணம் செய்து கொள்ள சம்மதிப்பாரோ பார்ப்போம். (உறக்க) அதை உங்கள் கையில் கொடுக்க மாட்டேன். நீர் தூரத்தில் நிற்கவேண்டும். பக்கத்தில் வந்தால் இதோ கத்தி குத்திவிடுவேன்.

சங். சரி எங்கே காட்டு பார்ப்போம்.

வே. தூரத்தில் நின்று உயிலை காண்பிக்கிறாள்.

சங். (மனதில்) ஆஹா ! அதே உயில்தான் அதை இவள் திருடியி யிருக்கிறாள். (உறக்க) வேணி, எங்கே அதை இப்படி கொடு பார்ப்போம்.

வே. ஒருபோதும் கொடுக்கமாட்டேன். இதை ஸ்ரீமதியிடமும் புருஷோத்தமனிடமும் காண்பித்த பிறகு தருகிறேன்.

அல்லது நீர் என்னை கலியாணம் செய்துகொண்ட பிறகு தருகிறேன்.

சந். வேணி, உனக்கு எவ்வளவு பணம் கொடுத்தாலும் த்ருப்தியில்லையா, வேறு யாரையாவது கலியாணம் செய்து கொள்ளேன்.

வே. எனக்கு பணமே வேண்டாம். நீர்தான் வேண்டும்.

சந். (மனதில்) இனி இவளிடம் கடுமையாய் பேசுவதில் பிரயோஜனமில்லை. (உறக்க) வேணி நான் உன்னை கலியாணம் செய்துகொண்டால் இதை கொடுப்பாயா.

வே. அப்போது தான் கொடுப்பேன்.

சந். நல்லது வேணி நான் வீட்டிற்கு மெள்ளபோய் கொஞ்சம் பணம் எடுத்துக்கொண்டு வந்து விடுகிறேன் நாம் இருவரும் இரகசியமாய் எங்கேயாவது போய் கலியாணம் செய்து கொண்ட பிறகு இங்கே வருவோம்.

வே. அது சரி

சந். நான் போய் சீக்கிரம் வருகிறேன். நீ இங்கேயே இரு. இந்த சமாச்சாரம் வேறு ஒருவரிடமும் வெளியிடாதே.

(போகிறான்).

---

## அங்கம் 3—காட்சி 9.

சந்த்ரசேகரன் தோப்பு.

[வேணி பின்புறம் பார்த்து நிற்கிறாள். சந்த்ரசேகரர் வருகிறார். தயாகரன் ஓர் பக்கம் ஒளிந்து நிற்கிறான்.]

சந். ஆகா! தெய்வச்செயல்தான் எப்படி இருக்கிறது. எங்கிருந்தோ சனியன் குறுக்கிட்டதுபோல் இது வந்திருக்கிறதே இன்னேரம் கலியாணம் ஆகியிருக்க வேண்டும். சீ. சீ. இதைக் காட்டிலும் பெரிய இடையூறுகளையெல்லாம் அறை நிமிஷத்தில மாற்றின எனக்கு இது ஒரு கஷ்டமா. இவள் இந்த கலியாணத்தை நிறுத்த வேண்டுமென்றே

வந்திருக்கிறாள். இனி நல்ல வார்த்தை சொன்னாலும் கேழ்க்கமாட்டாள். பணத்திற்கும் அவள் ஆசைப்பட வில்லை. ஆகா வீட்டிலோ எல்லோரும் என்னைகலியாணத் திற்கு உட்காரும் பொருட்டு தேடுகிறார்கள். எனக்கு கைக்கு எட்டினது வாய்க்கு எட்டவில்லை இங்கேயோ இவள் போகிறதாயில்லை. வேறு வழியைக் காணோம். அவளை—அவளை கொன்றுதான், உயிலை வாங்கவேண் டும். உயிரை வாங்கவேண்டுமேயென்று யோஜித்தால் முடியாது, இதோ அவள் நிற்கிறாள், நல்லவேளை, முது கைக்காட்டிக்கொண்டு நிற்கிறாள். இதுதான் தருந்த சம யம். (சுற்றுமுற்றும் பார்த்து துப்பாக்கியை எடுத்து சுடுகிறான்) அவள் கீழே விழுகிறாள்.

சங். (திகைத்து பக்கத்தில் போக பயந்து) ஆகா, நான் என்ன காரியம் செய்து விட்டேன். இனி என்னை எல்லோரும் கொலைபாளி என்றுதானே சொல்லுவார்கள். ஓகோ. யாராவது இதை இங்கே பார்த்திருந்தார்களோ. ஆகா. இப்பிணத்தைப் பார்க்கவும் நமது மனம் பதறுகிறதே. (முகத்தைதிருப்பி உட்காருகிறான்) ஆ! வேணி உன்கெதி இப்படித்தானு ஆயிற்று (கீழே இருந்த உயிலை தயாகரன் எடுத்துப்போகிறான்) என்னை நீ இப்படி நிர்ப்பந்திக்கா மல் அந்த உயிலை என்னிடம் கொடுத்திருந்தால் உனக்கும் தகுந்த சொத்து கொடுத்து தகுந்த புருஷனையும் கலியா ணம் செய்து வைத்திருப்பேனே. நீயும் வெகு சுகமாய் இருக்கலாமே. இப்போது வீணில் இறக்கும்படி நேரிட் டதே. என்னை கலியாணம் செய்து நீ அடையும் பயன் என்ன. எல்லாம் உன் பிடிவாதம் என் பிடிவாதத்தாலே இப்படி வந்தது. ஓகோ! அவர்கள் காத்திருப்பார்களே. நான் சீக்கிரம் இதை மறைத்துவைத்துவிட்டு கலியாணத்திற்குப்போக வேண்டும். இந்த துப்பாக்கியும் இங்கே இருக்கக்கூடாது ஆ! நான் இவ்வளவு காரியம் செய்தும் முக்யமாய் செய்ய வேண்டியதை மறந்து விட்டேனே. ஆனல் அது எங்கே

போகிறது. (எழுந்திருந்து) அவள் மடியை சோதித்து, சுற்றிலும் பார்த்து, ஆகா! அதை இங்கே காணேமே. ஒருவேளை நாம் அவளுக்கு அனுகூலமாய் சொன்ன வுடனே இது வேண்டியதில்லை என்று கிழித்தெறிந்து விட்டாளோ அப்படித்தான் இருக்கவேண்டும். நல்லது நாம் இதை சீக்கிரம் மறைத்துவிட்டுப் போக வேண்டும்.

[புருஷோத்தமன் வருகிறுன்.]

புரு. ஆ! அண்ணு! இதென்ன இது.

சந். அடே, உன்னை யார் இங்கே வரச்சொன்னது.

புரு. உனக்கு ஒத்தாசை செய்யத்தான். நீ தனியாய் ஒத்தாசை யில்லாமல் மறைக்கப்ரயத்தினம், செய்கிறுயே. என்று தான் வந்தேன்.

சந். புருஷோத்தமா! நான் உன்னை கெஞ்சிக் கேட்டுக்கொள்ளு கிறேன். நீ இதை வெளியிடலாகாது நானும் வேணு மென்று செய்யவில்லை. அவள் என்னை ரொம்பவும் நிந் தித்துக் கோபமூட்டினுள். ஆகையால் நான் அவளை அவளை

புரு. சுட்டுவிட்டாய். நன்றுயிருக்கிறது.

சந். புருஷோத்தமா: உனக்கு என் சொத்தில் பாதி தருகிறேன். இந்த சமயத்தில் நீ என்னை காப்பாற்றவேண்டும்.

புரு. மூடா! உன்னைப்போல் நான் பணப்பேய்பிடித்தவனென்று எண்ணினுயோ.

சந். புருஷோத்தமா நீ சொன்னபடி கேட்கிறேன். எப்படியாவது நீ என்னைக் காப்பாற்றவேண்டும்.

புரு அவள் யார்.

சந். அவளை நான் வைத்திருந்தேன். அவள் இன்று வந்து கலி யாணத்தை நிறுத்தி விடுவதாயும் என்னை அவமானப் படுத்துவதாயும் பயமுறுத்தினுள் நான் எவ்வளவோ நல்ல வார்த்தை சொல்லிப் பார்த்தேன். பணம் ஏராளமாய் கொடுப்பதாயும் சொன்னேன். அவள் வீம்பாய் என்னை அவமானப்படுத்தப் பார்த்தாள், கோபத்தில் அவளை

சுட்டுவிட்டேன். நீ என்னைக் காண்பித்துக் கொடுத்து நான் அவமானம் அடைந்தால் அது உனக்கில்லையா யோசித்துப் பார்.

புரு. (தனிமையாக) ஆம், இவனை போலீஸில் காட்டிக்கொடுத்தால் நமக்கென்ன ப்ரயோஜனம். இவன் செய்கை வெளியில் வரும்போது என் காதலியின் சமாச்சாரமும் வெளியில் வருமல்லவா. கடைசியில் இவன் மரணம் அடைந்தால் என் கண்மணியின் தகப்பன் கெதி என்ன ஆகும். அவர் அவமானத்தால் உயிர் விட்டால் என் ஸ்ரீமதியும் உயிர் விடுவாளே. அவள் தகப்பன் கடனை இவனைத்தவிற வேறு யார் ஒழிக்கப்போகிறார்கள்! நல்லது இக்கொலை வெளி வராமல் போகாது. நான் ஏன் இனி உயிர் வைத்திருக்கவேண்டும். இக்கொலை நாம் தாம் செய்ததாக இருக்கட்டுமே. நமது கண்மணியை உத்தேசித்து இவனைக் காப்பாற்றுவோம். ஆகிலும் இதில் ஏதோ ரகசியம் இருக்கிறது. நமது கண்மணியை இப்போது இவன் கலியாணம் செய்து கொள்ளும்படி விடலாகாது (உறக்க) அண்ணா நீ கவலைப்படவேண்டாம் நான் உன்னை காப்பாற்றுகிறேன், ஆகிலும் நீ அண்ணாவென்று நான் காப்பாற்றப் போகிறதில்லை. இனி உன்னிடம் ஒளிப்பானேன். நான் தான் ஸ்ரீமதியை கலியாணம் செய்துகொள்ள தயாராயிருந்தேன். அவளுக்கும் என்மீதுதான் காதல். தெய்வகதி அவள் தகப்பனுக்கு கடன் அதிகமாகி அதை தீர்ப்பதாய் நீ சொன்னதைக்கேட்டு அவள் தகப்பனாரை அவமானத்திலிருந்து காப்பாற்றும் பொருட்டு உன்னையே கலியாணம் செய்து கொள்ளும்படி நான் அவள் சம்மதமில்லாதவளை சம்மதிக்கச் செய்தேன். ஆகிலும் நான் சொல்லும் கண்டிஷன்களுக்கு நீ உடன்பட்டால் நான் உன்னைக் காப்பாற்றுவேன். அதென்னவென்றால் நீ மூன்று மாத காலத்திற்கு ஊரைவிட்டுப்போகவேண்டும். அதுவரையில் அவள் தகப்பனுக்கு கடன்காரர்கள் இம்சைகூடாது. இது உனக்கு சம்மதமானால் உன்னைக் காப்பாற்றுவேன்.

சங். புருஷோத்தமா! என்னை ஊரைவிட்டுப் போகச்சொல்லி நீ கலியாணம் செய்துகொள்ள பார்க்கிருயோ.

புரு. அப்படி நான் செய்து கொள்வதானல் அவள் உன்னைக் கலியாணம் செய்து கொள்ள சம்மதிப்பாளா.

சங். அப்படியானல் சரி. நீ சொன்னபடி செய்கிறேன்.

புரு. சரி. இனி நீ இங்கே இருக்கக்கூடாது. நான் உனக்காக கொலை கேஸில் அகப்பட்டுக்கொள்ளப் போகிறேன்.

சங். சீ. சீ. நீயும் வந்துவிடு நாம் ஓடிப்போய் விடுவோம்.

புரு. அது கூடாது. கேஸ் எப்படியும் வெளியே வரும் நீ அகப்பட்டுக்கொண்டால் ஸ்ரீமதிக்கு அவமானம் வரும். ஓடிப்போ. யாரோ வருகிற சப்தம் கேழ்க்கிறது. (சந்த்ரசேகரன் போகிருன்).

புரு. ஆஹா! இதென்ன தர்மசங்கடம். அவன் துப்பாக்கி இருக்கிறதே. (எடுத்து அதைப்பார்த்து பேரை அழித்து வேறு பேர் எழுதி கீழே போட்டு) இப்போது ஒருவரும் அவனை சந்தேகிக்கமாட்டார்கள். நமது சட்டையில் ரத்தம் பட்டிருக்கிறது, இருக்கட்டும். நல்லதுதான் துப்பாக்கியும் என்னுடையதென்று நினைப்பார்கள். இவன் எதற்காக இப்படிப்பட்ட கொலை செய்திருக்கக் கூடும் தெரியவில்லையே.

ஓர் **கான்ஸ்டேபில்.** (ஓடிவந்து) ஓகோ. கொலை. கொலை. அய்யா! நீர் தானு இதைச் செய்தது.

புரு. நான் ஒன்றும் சொல்லமுடியாது. என்னை ஜயிலுக்கு கொண்டுபோகலாம். (போகிருர்கள்).

---

## அங்கம் 4—காட்சி 1.

### சந்த்ரசேகரன் வீடு.

[வாத்யார், சாஸ்திரிகள் வருகிருர்கள்.]

**வாத்யார்.** என்ன. ஆச்சரியமாயிருக்கிறது முகூர்த்தகாலம் வந்து விட்டதே. இன்னும் யஜமானனைக்காணுமே. நானும் எங்கெங்கே தேடினேன்.

ஸ்ரீமதி

**சாஸ்திரிகள்.** வாத்யார்வாள் இதென்ன தாமதம், முகூர்த்தகாலம் கூட போய்விடும்போலிருக்கிறதே. நீர் ஒன்றும் கவனிக்கவில்லையே. ஏன் வரும்படி இதுவரையில் வந்தது போருதோ. இடப்பில் ஒருபக்கம்தான் சொருக அகப்பட்டதோ.

**வே-சா.** என்ன வாத்யாரே நாகராஜர் கோபிக்கிருரே. முகூர்த்த காலம் வந்து எந்நேரமாகிறது. நீர் தாமதம் செய்கிறீரே.

**வாத்.** என்னய்யா செய்கிறது. கலியாணம் செய்து கொள்ளுகிற வரைக்காணுமே. இனி அவர் வந்தபோர்து வரட்டும்.

[நாகராஜர் வருகிருர்.]

**நாக.** என்ன வாத்யாரே ஏன் தாமதம் கலியாணத்திற்கு ஆரம்பம் செய்ய வேண்டாமா. நேரம் என்ன ஆகிறது இங்கே இப்படி பேசாமல் நிற்கிறீரே.

**வாத்.** என்ன அய்யர்வாள். உங்கள் மாப்பிள்ளையைத்தான் தேடுகிறேன் அவரைக் காணுமே.

**ஸ்ரீ.** அப்பா, அவர் தம்பியைக்கூட காணுமே.

**நாக.** அவர்கள் இருவரும் சேர்ந்து எங்கேயோ போயிருக்கிருர்கள்போலிருக்கிறது. ஸ்ரீமதி. புருஷோத்தமன், வெகு நல்லவன் புத்திசாலி, எனக்கு அவன் மீது வெகு பிரியம் இத்தனை நாள் எனக்கு அவனை தெரியாமல் போய்விட்டது. ஆகிலும் பணக்காரனுயில்லை.

**ஸ்ரீ.** அப்பா அவரை உங்களுக்கு எப்படி தெரியும்.

**நாக.** இப்போது சமீபத்தில் தான் என் சிநேகிதர் சுந்தரமய்யர் மூலமாய் தெரிந்துக்கொண்டேன். சந்த்ரசேகரனைவிட இவன் இன்னும் நல்லவன். இதென்ன தெருவில் இரைச்சல் கேழ்க்கிறது. ஓகோ, அனேகர் கூட்டமாய் போலீசாருடன் வருகிருர்களே. ஒருவன் கையில் விலங்கு போடப்பட்டு வருகிருன். ஓகோ! புருஷோத்தமன் போலிருக்கிறதே. (நாகராஜய்யர் கோபமாய் போலீஸ் கான்ஸ்டேபிளிடம் போய்) உனக்கென்ன பைத்யமோ அவரை ஏன் விலங்கிட்டிருக்கிருய்.

**போலீஸ்காரர்.** சுவாமி, குலை-குலை.

நாக. ஹா! கொலையா, யார் யாரை கொலை செய்தது. சந்த்ரசேகரர் எங்கே.

போ. அவர் அதோ வருகிறார். கலியாண வீட்டுக்குப் பின்புறம் தோப்பில் கொலை அய்யா.

நாக. யார் கொலை செய்தது.

போ. இவர்தான் செய்திருக்கலாம். (புருஷோத்தமனைக் காட்டுகிறான்).

நாக. என்ன பொய் சொல்லுகிறாய் இவராவது கொலை செய்யவாவது. கொலை செய்யப்பட்டது யார்.

போ. ஒரு சிறு பெண்.

நாக. அவர் பெண்ணென்றால் நிமிர்ந்து கூட பார்க்கமாட்டாரே. அவருக்கு ஏண்டா விலங்கு போட்டாய் அவரை விட்டுவிடு. அவர் கொலை செய்ததாக யாரடா சொன்னது.

ஸ்ரீ. (நடுங்கிக்கொண்டு தனி) என்னப்பா, இவருக்கு ஏனிப்படி விலங்கு போட்டிருக்கிறார்கள்.

நாக. பொறு அதைத்தான் கேழ்க்கிறேன். ஏண்டா. அவர் கொலை செய்ததாக யார் உனக்குச் சொன்னது.

போ. அவரை யிப்போது வேண்டுமானாலும் கேளுங்களேன். ஒன்றும் சொல்லமாட்டேனென்கிறாரே.

நாக. புருஷோத்தமரே நீர் இந்த கொலை செய்திருப்பீரென்று எங்களுக்குக்கெல்லாம் தோன்றவில்லை. நீர் என்ன சொல்லுகிறீர்.

புரு. (ஸ்ரீமதியைப்பார்த்து பெருமூச்சுவிட்டு, தலைகுனிந்து) நான் சொல்ல வேண்டியது ஒன்றுமில்லை. கான்ஸ்டேபில்! என்னை ஜயிலுக்கு கூட்டிப்போ ஏன் தாமதம் செய்கிறாய்.

ஸ்ரீ. (மெதுவாய்) அப்பா அவரை தனியாய் கூப்பிட்டு கேளுங்கள் நீங்கள்.

நாக. (புருஷோத்தமனை தனியாய் கூட்டிப்போய்) என்ன என்னிடம் கூட உண்மையை சொல்லக் கூடாதா. நடந்ததென்ன இவர்கள் ஏன் உமது கையில் விலங்கு போட்டார்கள்.

புரு. உண்மையைத்தான் அவர்கள் சொல்லுகிறார்களே.

[சந்த்ரசேகரர், சுந்தரமய்யர் வருகிறார்கள்.]

சங். என்ன இது.

ஸ்ரீ. (சந்த்ரசேகரரைப்பார்த்து) நீங்கள்தான் கேளுங்களேன். அதென்ன ஒன்றும் சொல்லமாட்டேனென்கிறாரே.

சங். புருஷோத்தமா. நீ யிப்படி சொல்வது சரியில்லே. இதனால் வரும் கேடை அறியாமல் சொல்லுகிறாய் நடந்தென்ன சொல்.

புரு. நானென்ன சொல்லுகிறது. சொல்லக்கூடியது ஒன்று மில்லே இனி என்னை ஜயிலுக்கு கொண்டுபோக வேண்டி யது தான்.

ஸ்ரீ. (மெதுவாய்) அப்பா. இவர் ஏதாவது குற்றம் செய்தவராக உங்களுக்குத் தோன்றுகிறதா.

நாக. எனக்குத்தோன்றவில்லே குற்றம்செய்தவன் இப்படிசொல்ல மாட்டான். இதில் ஏதோ ரகசியமிருக்கிறது. (போலீஸ் கான்ஸ்டேபிலேப்பார்த்து) சரி இனி அவரைகேழ்ப்பதில் ப்ரயோஜனம் ஒன்றுமில்லே. நீ என்ன காரணத்தினு லிவரை விலங்கிட்டாய் சொல்.

போ. ஒரு கேடி அந்த தோப்புக்குள் போனதுபோல் தோன்றி ற்று. நான் அவனை தேடிக்கொண்டு போனேன். அப் போது ஒரு பெண் மாதிரி இருந்தது. கீழே படுத்திருந் தாள் இவர் பக்கத்தில் நின்றார். நானும் பக்கத்தில் போய் பார்க்கவும் இவர் ப்ரமித்து நின்றார். படுத்திருந்த பெண் பிணமென்றறிந்து புறட்டிப் பார்த்தேன். துப்பாக்கி சென்றிருந்த அடையாளம்கண்டேன். இவர் சட்டையில் ரத்தம் பட்டிருந்தது. இந்த துப்பாக்கி கீழே கிடந்தது. இதை எடுத்துப் பார்த்ததில் எழுத்துக்ளிருக்கக்கண்டு கேட்டதில் ஒன்றும் சொல்லவில்லே. இதோ பாருங்கள் துப்பாக்கியை.

நாக. இதில் எழுதியிருக்கிற பேர் அவருடையது தான் போலிரு க்கிறது. ப. பு. என்று போட்டிருக்கிறது.

சங். (பார்த்து) சரி. இது அவனுடையதுதான்.

போ. நான் இதைப்பார்த்த பிறகும் இவர் பேரில் சந்தேகம்தோன்ருமல் அவர் அங்கிருக்க காரணமும் கொலை செய்தது யாரென்றும் கேட்டேன் ஒன்றும் சொல்லமாட்டேனென்கிருர். ஜயிலுக்கு கொண்டுபோகும்படி சொல்லுகிருர். நானென்ன செய்கிறது.

நாக. நல்லது. நீ என்ன செய்வாய் (மெதுவாய்) புருஷோத்தமரே இப்போதாவது உண்மையை கூறலாகாதா. இன்னும் உமது மீது எங்களுக்கு சந்தேகமுண்டாகவில்லை. இந்த ரத்தம் உமது சட்டைக்கு எப்படி வந்தது. நீர் அங்கே இருக்கக் காரணமென்ன.

புரு. (மெதுவாய்) நான் சொல்லக்கூடியது ஒன்றுமில்லையே.

சந். புருஷோத்தமா, என்ன இப்படி வீம்பாய் சொல்லுகிருயே. நீ உன் உயிருக்கு பயப்படவேண்டாம். அவமானத்துக்கு பயப்படவேண்டாமா.

ஸ்ரீ. (தனிமையாக) அய்யோ! ஒன்றும் சொல்லமாட்டேனென்கிருரே. இவர் ஒருபோதுமிதைச் செய்திருக்கமாட்டார். அப்பா, இன்னும் கொஞ்சம் கட்டாயம் செய்து கேட்டுப்பாருங்களேன்.

நாக. புருஷோத்தமரே இதில் வரும் அவமானத்தை நீர் யோஜிக்கவேண்டாமா. இனி எல்லோரும் உம்மை கொலையாளி என்றல்லவா நிந்திப்பார்கள். உயிர் பெரிதல்ல. மானம் பெரிதல்லவா. உள்ளதை சொல்லிவிடும்.

புரு. (போலீஸ் கான்ஸ்டேபிலை பார்த்து) இதென்ன உனக்கு வேடிக்கையாயிருக்கிறதோ. என்னை ஜயிலுக்கு நேரே கொண்டுபோகவேண்டியிருக்க இங்கே என்னசெய்கிருய்.

போ. நல்லது அய்யா! நான் கூட்டிப்போகிறேன்.

(போகிருர்கள்).

ஸ்ரீ. அப்பா எனக்கு தலைவலி அதிகமாயிருக்கிறதே என்ன செய்கிறது.

வாத்யார். அய்யா! சந்த்ரசேகரரே கலியாணமுகூர்த்தம் ஆரம்பிக்க வேண்டாமா.

சங். என்ன செய்கிறதய்யா என் தம்பி பேரில் கொலை கேஸ் வந்திருக்கும்பொழுது கலியாணம் இப்பொழுது செய்யலாமா.

வாத். அதுவும் நியாயம்தான். அவசகுனம் போல் உங்கள் தோப்பிலே கொலை விழுந்திருக்கும்பொழுது என்ன செய்கிறது. அப்பொழுது வேறு முகூர்த்தம் பார்க்க வேண்டியதுதானே.

சங். ஆம் பார்க்கவேண்டியது தான். எல்லோரையும் போகச் சொல்லுங்கள். (போகிறார்).

ஸ்ரீ. (தனக்குள்) நல்லவேளை. இந்த சமயம் தப்பினேன். தப்பியும்,—ஆ! என்ன செய்வேன். அவர் ஜயிலில் போயிருக்கும்படிக்கும் நாமிங்கே சுகமா யிருக்கவும் நேர்ந்ததே. விதியே நான் என்ன செய்வேன். என்ன காரணத்தினாலோ யாரோ செய்த கொலையை தான் செய்ததாக ஒப்பு கொண்டு ஜயிலுக்கு போய் விட்டாரே.

(ஸ்ரீமதி, நாகராஜய்யர் போகிறார்கள்).

வாத். அய்யா! எல்லோரும் தயவு செய்து போகவேண்டும். கலியாணம் நின்றுவிட்டது.

ஓர் வைதீகன். என்னப்பா இது 4 நாள் முன்னதாக வந்திருந்து முகூர்த்தத்தை நடத்தி கொடுத்துவிட்டு சாவகாசமாய் போகவேண்டியது என்று கடிதம் போட்டுவிட்டு இப்போது போகச்சொன்னால் யார் போவார்கள்.

வாத். வைதீகர்களுக்கு இது எழுதாத ஓலையில் வந்த அழைப்போ நல்லது கடிதத்தில் சாப்பாடு போடுவதாகசொல்லவில்லை. 4 நாள் இந்த ஊரிலேயே பட்டினியாயிருந்து முகூர்த்தத்தை நடத்திவிட்டுப் போங்கள்.

வே. வை. நாங்கள் முகூர்த்தத்தை நடத்தவந்தோம். வாத்யார் ஒத்தாசையால் முகூர்த்தம் ஓடுகிறதே.

வாத். ஆமாம், முகூர்த்தம் ஓடுகிறது. சீக்கிரம் அதை துரத்திக் கொண்டு போங்கள்.

ஓ. வை. வாத்யார்வாள் இனி நாங்கள் எப்போது வருகிறது.

வாத். இப்போது உங்களுக்கெல்லாம் வந்த அழைப்புக்கடிதம் மறுபடியும் வரும். அப்போது வாருங்கள்.

**வே. வை.** வாடா அவரை என்னகேழ்வை மறுபடியும் கலியாண வாசனை அடிக்கும் பொழுது வருவோம் வா.

**ஓ. வை.** வாத்யார்வாள் தக்ஷணையைத் தான் ஏச்சு விட்டீர். கொஞ்சம் பொடி கொடும்: (வாங்கி உருஞ்சுகிறான்).

**வே. வை.** அடேடே என்னையும் சேர்த்து மூக்கில் இழுத்து விடாதே. (போகிறார்கள்).

---

## அங்கம் 4—காட்சி 2.

### நாகராஜய்யர் வீடு.

[ஸ்ரீமதி சாய்ந்திருக்கிறாள்.]

**ஸ்ரீ.** (ஜுரத்துடன்) சுந்தரி! சுந்தரி நீ போய்சொல்லடி. அவரை தூக்கில் போட கொண்டு போகிறார்கள். அவருக்கு பதிலாய் என்னைப்போடும்படி சொல் சீக்கிரம். போடி.

**சுந்.** ஸ்ரீமதி, ஏன் இப்படி பிதற்றுகிறாய். ஏதாவது கனவு கண்டாயா என்ன. அவர் இன்னும் ஜயிலில்தான் இருக்கிறார். இன்னும் விசாரணையே ஆகவில்லையே.

**ஸ்ரீ.** ஏண்டி சகி, அப்பா அவரை ஜயிலில் பார்த்தாரா என்ன சொன்னார்.

**சுந்.** ஸ்ரீமதி நீ இப்படி கவலைப்பட்டால் உன் ஜுரம் எப்படி நீங்கும். டாக்டர் நீ ஒன்றும் பேசக்கூடாதென்று சொல்லியிருக்கிறாரே.

**ஸ்ரீ.** ஏண்டி ஜுரம் போவானேன். இப்படியே நான் போய்விட்டால் எவ்வளவு நலமே. என் கவலை ஒழியும். அய்யோ அப்பா என்ன செய்வார். அவரை திண்டாடவிட்டு விடுகிறதா, அது சரியில்லை.

**சுந்.** நீ பயப்படாதே. 2 நாள் பேசாமலிருந்தால் ஜுரம் போய் விடும். (நாகராஜய்யர் வருகிறார்).

**நாக.** ஸ்ரீமதி நீ ஒன்றும் பேசாதே. பேசினால் ஜுரம் அதிகமாகும்.

**ஸ்ரீ.** அப்பா! ஜயிலில் அவரைப் போய் பார்த்தீர்களா என்ன சொல்லுகிறார்.

நாக. இன்னும்போய் பார்க்கவில்லை இன்றுபோய் பார்க்கிறேன்.

ஸ்ரீ. அப்பா. அவர் இந்த கொலை செய்திருப்பாரென்று உங்க ளுக்குத் தோன்றுகிறதா.

நாக. எனக்கு அவர் செய்திருக்கமாட்டாரென்று தான் தோன்று கிறது. ஆகிலும் ஒன்றும் சொல்லமாட்டேனென்கிறாரே. என்ன செய்கிறது. நீ ஏன் இதற்காக வீண் கவலைப்படு கிறாய்.

ஸ்ரீ. அப்பா! அன்று நான் நதியில் விழுந்தபோது அவர் தன் உயிரைப்பாராமல் நீந்தி என்னை கரையிலெடுத்து வந்து என் உயிரைக் காப்பாற்றவில்லையா, அப்பேர்ப்பட்டவர் கஷ்டப்படும் சமயமாயிருக்கும்போது என் மனம் சகிக் குமா. என் உயிரைக் காப்பாற்றினவருக்கு நீங்கள் இந்த சமயத்தில் வேண்டிய ஒத்தாசை செய்ய வேண்டாமா. இப்படி பிறர்உயிரைக் காப்பாற்றினவர் இந்தப்பெண்ணை கொல்வாரா. நீங்கள் போய் அவரைப்பார்த்து வாருங் கள். அப்பா! (டாக்டர் வருகிறார்).

டாக்டர். என்ன செய்கிறாள்.

நாக. மறுபடியும் அந்தப்பேச்சுதான் ஒருவேளை சந்த்ரசேகரர் வந்தால் எப்படி யிருப்பாளோ தெரியவில்லை.

ஸ்ரீ. அப்பா! அப்பா! அவரை யிப்போது வரச்சொல்லாதே யுங்கள்.

டாக்டர். அவள் மனதிருக்கும் நிலைமையில் அவர் வந்தால் வியாதி நிச்சயமாய் அதிகரிக்கும். அதிகமாய் பேச விடாதே யுங்கள்.

நாக. நல்லது ஸ்ரீமதி நான் போய் அவரைப்பார்த்துவருகிறேன். நீ ஒன்றும் பேசாமல் தூங்கு. சுந்தரி அவள் ஒன்றும் பேசாமல் பார்த்துக்கொள்.

ஸ்ரீ. அப்பா. சீக்கிரம் போய்பார்த்து எனக்கு என்ன சொல்லு கிறாரென்று வந்து சமாச்சாரம் சொல்லுகிறீர்களா.

நாக. இதோ; பார்த்து வருகிறேன். (டாக்டருடன் போகிறார்).

சந். (எதிரில் வந்து) அய்யா! உடம்பு எப்படி யிருக்கிறது, அவள் என்னைப் பார்க்க வேண்டுமென்று சொல்லவில்லையா?

நான் 2-3 நாளாய் அவளைப்பார்க்க, ஆவலுடனிருக்கிறேன். நீங்கள் பார்க்கக் கூடாதென்கிறீர்களே.

டாக்டா. அய்யா நேரில் உம்மிடம் இதைப்பற்றி சொல்லத்தான் புறப்பட்டேன். ஜுரத்தின் விஷயம் ஒருவரைக்கண்டால் பயமுண்டாகுமானால் அவரை வியாதிக்காரர் முன் கூட்டி வரக்கூடாது. இப்போது அவள் உமது பேரைக் கேழ்க்கும்போதே பயப்படுகிறாள். நீர் உண்மையில் அவளிடம் பிரியமுள்ளவராயிருந்தால் அவளைப் பார்க்கக் கூடாது. அதுவே வியாதியை அதிகரிக்கச் செய்து கடைசியாய் கொன்றுவிடும்.

சந். நல்லது. நான் போகவில்லை. (மற்றவர்கள் போகிறார்கள்). அவள் என்றைக்குத்தான் என் பேரைக்கேட்டு பயப்படவில்லை. என்ன செய்கிறது. ராமன் சொன்னது சரிதான். புருஷோத்தமனைத் தான் அவள் நினைத்துக் கொண்டிருக்கிறாள். நமக்கு இடையூறுகளெல்லாம் சேர்ந்தே வருகின்றன. இந்த பாவி முண்டை இந்த சமயத்தில் வரவேண்டுமா. புருஷோத்தமனுமிந்த சமயத்தில் எங்கிருந்தோ யமன்போல் வந்துவிட்டானே. ஒரு மணி தாமதமாய் அவள் வந்திருந்தால் கலியாணம் நடந்திருக்குமே. ஆனால் நடந்துதான் என்னபயன். ஒருவேளை அவள் எல்லோர் முன் வந்து உயிலைக் காட்டி நம்மை அவமானப்படுத்தியிருந்தால் இன்னும் மோசமல்லவா. அது கிடக்கிறது. புருஷோத்தமன் வராதிருந்தால் நான் உடனே வந்து கலியாணத்தை முடித்திருப்பேனே. ஆனால் அவன் வந்ததும் நல்லதுதான். இனி அவன் இறக்கப்போகிறான். பிறகு ஸ்ரீமதி அவனை மறப்பாளல்லவா, என்னிடம் கண்டிஷன் செய்து என்னை காப்பாற்றியிருக்கிறான். இருக்கட்டும். நான் இதற்குபயந்து ஊரைவிட்டுப்போகிறதா? ஒருபோதும் போகமாட்டேன். இவன் பேரிலே கொலை கேஸ் பலமாயிருக்கிறது. அவனை தூக்கிப்போடுவது நிச்சயம். பிறகு நாம் ஸ்ரீமதியை கலியாணம்செய்துகொள்வோம். இனி நாம் தாமதிக்கலாகாது. புருஷோத்தமனை

சீக்கிரம் விசாரித்து முடிவு செய்யவேண்டிய விதத்தைத் தேடவேண்டும். புருஷோத்தமன் போய்விட்டால் ஸ்ரீமதி என்மீது இப்படி பராமுகமாயிருக்கமாட்டாள்.

ராம. அய்யா! என்ன ஆச்சரியமாயிருக்கிறது. இந்த புருஷோத்தமன் இந்த கொலையை செய்திருப்பானு?

சங். ஏன் செய்திருக்கக் கூடாது.

ராம. என்ன அய்யா, அவர் வீணில் ஒரு பெண்ணை கொல்வாரா. அவர் அப்படி செய்யப்பட்டவரில்லையே.

சங். யாரும் ஒருவரை வீணில் கொல்லமாட்டார்கள். அதில் ஏதாவது காரியமிருந்தால்தான் அப்படி செய்வார்கள். இவன் ஏன் கொன்றிருக்கக்கூடாது என்னகாரணத்தினுல் செய்தானே.

ராம. ஏதய்யா எனக்கு தோன்றவில்லை.

சங். உனக்கு எதுதான் தோன்றும். இவன் செய்யாவிட்டால் இவன் துப்பாக்கி அங்கே வருவானேன் அப்போது அங்கே ஒருவருமில்லையே. யார்தான் இதை செய்திருக்கக் கூடும்.

ராம. யாரோ. அதற்கு இவர்தானு பாத்யப்பட்டவர் வேறு ஒருவன் சுட்டுவிட்டு ஓடிப்போயிருந்தால்.

சங். அப்படியாவது சொல்லட்டுமே. கேட்டால் ஒன்றும் சொல்லமாட்டேனென்கிறுனே. ஜனங்கள் என்ன நினைப்பார்கள்.

ராம. ஜனங்கள் அவன் செய்யவேயில்லை என்றுதான் நினைக்கிருர்கள். ஏனய்யா! இனிமேல் அவனை தண்டித்து விடுவார்களோ.

சங். இல்லை. கோவிலில் உட்காரவைத்து பூஜை செய்வார்கள்.

ராம. சொல்லுமய்யா என்ருல்.

சங். அடே! மடயா, இனி அவனை விடுவார்களா? விஜாரித்து மரணதண்டனை விதிப்பார்கள். இனி அவன் உயிர் இழக்க வேண்டியது தான்.

ராம. அய்யோ! பாவம், என்ன செய்கிறது. நீங்கள் ஏதாவது சிபார்சு செய்யக்கூடாதா.

[ஓர் ஆள் ஓடிவந்து கடிதம் கொடுக்கிறான்].

சந். (அதைப்பார்த்து) புருஷோத்தமன் அவசரமாய் வந்து தன்னை ஜயிலில் பார்க்கச்சொல்லுகிறான். நான் போகிறேன். [போகிறார்கள்].

---

## அங்கம் 4—காட்சி 3.

[ஜயிலில் உக்ரவர்மன் வருகிறார்.]

உக். என்ன ஆச்சரியமாயிருக்கிறது. இப்படிப்பட்ட கைதியை நான் பார்த்ததே இல்லை. முகத்தில் கொஞ்சமாவது குற்றம் செய்த அடையாளம் இருக்கவேண்டுமே ஒன்றும் இல்லை. ஒன்றும் சொல்லமாட்டேனென்கிறார். கேட்டவர்களுக்குத் தான் குற்றம் செய்தவர்போல் பேசுகிறார்.

(நாகராஜய்யர் வருகிறார்.)

நாக. ஐயா ! புருஷோத்தமரை நான் பார்க்கலாமோ.

உக். நானென்ன செய்வது. அவர் ஒருவரையும் பார்க்கமாட்டேனென்கிறாரே.

நாக. நல்லது. இந்தக்கார்டை கொடும். என்னைப்பார்ப்பார்.

உக். (உள்ளே போய் திரும்பிவந்து) வரச்சொல்லுகிறாரய்யா. போய் பாரும்.

நாக. புருஷோத்தமரே, நீரிந்த பிடிவாதத்தை விட்டு என்னிடம் மட்டும் உண்மையை சொல்லக்கூடாதா. எனக்கும் உண்மை தெரிந்தால் நீரிப்படி செய்வது நியாயம்தானா என்று யோஜித்து உமக்கு புத்திமதி சொல்லக்கூடும்.

புரு. எனக்கு புத்திமதி சொல்வது இருக்கட்டும். ஸ்ரீமதி என்ன செய்கிறாள் கலியாணம் நடந்ததா.

நாக. கலியாணம் எப்படி நடக்கும். ஸ்ரீமதிக்கு நீர் ஜயிலுக்குவந்த அடனே ஜுரம்வந்துவிட்டது. சந்த்ரசேகரரும் நீர் ஜயிலிலிருப்பதை பார்த்து கலியாணமிப்போது வேண்டாமென்று சொல்லிவிட்டார்.

புரு. ஸ்ரீமதிக்கு ஜுரமா ? எத்தனை நாளாய். இப்போது எப்படி இருக்கிறது.

நாக. அதான் சொன்னேனே. அன்று உம்மை ஜயிலுக்கு கூட்டிப்போனதும் வீட்டில் படுத்தவள்தான். உம்மைப்பற்றியே பிதற்றுகிருள். சந்த்ரசேகரன் பேரைக்கேட்டால் பயப்படுகிருள். புருஷோத்தமரே நீர் உண்மையைச் சொல்லிவிட்டால் ஸ்ரீமதியின் ஜுரம் தீரும்.

புரு. (விசனத்துடன்) நான் சொல்லக்கூடியது ஒன்றுமில்லையே. நீங்கள்தான் எல்லாம் பார்த்தீர்களே. ஸ்ரீமதியிடம்போய் அவள் என்னைப்பற்றி கவலைப்பட வேண்டாமென்று சொல்லுங்கள்.

நாக. புருஷோத்தமரே அதைநான் அவளிடம்சொல்வதில் என்ன ப்ரயோஜனம். அவள் ஜுரம் அதிகரிக்கும்.

புரு. அய்யா! தகுந்த வைத்தியரை தருவித்து அவள் ஜுரத்தை நிறுத்துங்கள்.

நாக. நீர் உண்மையை சொல்லிவிட்டால் போதும். வேறு வைத்தியம் அவளுக்கு வேண்டியதில்லை.

புரு. உண்மை வேறு என்ன இருக்கிறது.

நாக. அய்யா! சந்த்ரசேகரரைக்கொண்டு மாஜிஸ்ட்ரேட் கோர்ட்டில் உமக்கு ஒரு வக்கீலாவது வைக்கச் சொல்லட்டுமா.

புரு. அய்யா எனக்கு வக்கீல் எதற்காக நான்தான் குற்றத்தை ஒப்புக்கொள்ளப்போகிறேனே. வக்கீல் எனக்கு என்ன ஒத்தாசை செய்யக்கூடும்.

நாக. வக்கீல்வைத்தால் ஒருவேளைகுற்றம் ருஜுவானபோதிலும் தண்டனை அதிக கடுமையாயிராமல் பார்த்துக்கொள்வார்.

புரு. அய்யா வேண்டாம். மரணதண்டனையில் கடுமை என்ன இருக்கிறது. நீங்கள் இதெல்லாம் செய்யாமலிருந்தால் அதுவே எனக்கு பெரிய உதவியாகும்.

நாக. புருஷோத்தமரே, உம்மை இங்கு பார்த்தாலாவது உண்மை வருமென்று வந்தேன். இங்கும் இப்படி வீம்பாய் இருக்கிறீரே. நான் என்ன செய்வேன். ஸ்ரீமதியிடம் இதை நான் எப்படி சொல்லுவேன். நல்லது நான் போய் வருகிறேன்.

புரு. ஸ்ரீமதியிடம் நான் சொன்னதை சொல்லுங்கள். சந்த்ர சேகரரை என்னிடம் அனுப்புங்கள். இதுதான் நான் தங்களை வேண்டிக்கொள்வது.

நாக. அப்படியே செய்கிறேன். (போகிறார்).

உக். என்ன அய்யர்வாள் குற்றத்தைப்பற்றி ஏதாவது விபரம் சொல்லுகிறாரா.

நாக. அது தவிற மற்றதெல்லாம் சொல்லுகிறார்.

[சந்த்ரசேகரர் வருகிறார்.]

நாக. ஐயா உம்மை வரச்சொல்லுகிறார் நீராவது அவருடைய கல்மனதை உருகச்செய்யும் பார்ப்போம். (போகிறார்.)

சந். (உள்ளே சென்று) புருஷோத்தமா. என்னை வரச்சொன்னாயாமே. சமாச்சாரம் என்ன.

புரு. அண்ணா நேற்றுமுதல் உன்னை வரச்சொல்லி அனுப்புகிறேனே அதுதான் இவ்வளவு சீக்கிறம் வந்தாயோ.

சந். நான் நேற்று ஒரு அவசரகாரியமாய் போய்விட்டேன். இப்போது தான் வந்தேன் சமாச்சாரம் என்ன.

புரு. ஒன்றுமில்லை. நான் சொன்னபடி நீ ஏன் செய்யவில்லை.

சந். செய்யாமலென்ன கலியாணம் தான் இப்போது வேண்டாமென்று சொல்லிவிட்டேனே.

புரு. நீ ஏன் ஊரைவிட்டுப் போகவில்லை.

சந். கொஞ்சம் அவசரமான காரியங்களை முடித்துக் கொண்டு தானே போகவேண்டும். அதனால் தான் தாமதம்.

புரு. அண்ணா நான் சொல்லுகிறபடி செய்கிறாயா அல்லது இப்பொழுதே உள்ள சங்கதியை வெளியிடவா.

சந். என்ன மிறட்டுகிறாயே. எனக்கு இனி உன்னிடம் பயப்பட வேண்டியது என்ன இருக்கிறது. கேஸோ பலமாய் உன் பேரில் ஏற்பட்டிருக்கிறது. சாக்ஷியும் பலமாயிருக்கிறது.

புரு. சரி, நீ போகலாம் நான் சூபரிண்டெண்டிடம் இப்பொழுதே உண்மையை சொல்லிவிடுகிறேன். விஜாரணை நடக்கட்டும். குற்றம் யார் பேரில் ருஜுவாகிறதோ பார்ப்போம்.

சந். புருஷோத்தமா! ஏன் இப்படி கடுமையாய் பேசுகிறாய். நீ சொல்வதற்கு நான் மாட்டேனென்று சொல்லவில்லையே.

உன் மிறட்டுக்கு நான் பயப்படவில்லையென்றல்லவா சொல்லவந்தேன்.

புரு. இனி மாட்டேனென்று சொல்வானேன். உன் நடத்தை இதற்குள் தெரிகிறதே. சரி நான் உண்மையைச் சொல்லி விடுகிறேன். உக்ரவர்மனை கூப்பிடு.

சந். என்ன புருஷோத்தமா, நீ என்ன சொன்னாலும் கேழ்க்கிறேன் சொல்.

புரு. சரி, நீ இப்படி ஆரம்பித்தபிறகு உன்னை நம்பக்கூடாது. இந்தா காகிதத்தில் நான் சொல்லுகிறபடி எழுது. (காகிதம் பேனா கொடுக்கிறான். சந்த்ரசேகரன், அதுகளை எடுத்துக்கொண்டு எழுதுகிறான்.)

புரு. ஸ்ரீமதிக்கு, சந்த்ரசேகரன் எழுதியது. நான் வெகு அவசரமான காரியத்தால் பம்பாய்க்கு போகவேண்டியிருக்கிறது. திரும்பிவர இன்னும் 3 மாதமாகும். ஆகையால் அதுவரையில் என்னை தேடவேண்டாம். உன் தகப்பனாரை கடன்காரர்கள் ஒருவரும் இனி கடன்களை கேழ்க்க மாட்டார்கள். யாராவது கேட்டபோதிலும் இக்கடிதத்தைக் காண்பித்தால் போய் விடுவார்கள். சந்த்ரசேகரன். ஸ்ரீமதிக்கு சந்த்ரசேகரன் எழுதியது :-வேணி என்கிற பெண் நானும் நீயும் செய்துகொள்ளவிருந்த கலியாணத்தைத் தடுத்து என்னை அவமானப்படுத்த வந்தபடியால் அவளை நான் துப்பாக்கியால் சுட்டுவிட்டேன். புருஷோத்தமன் அந்தசமயத்தில் தற்செயலாய் வந்தவன் என் குற்றத்தை தான்செய்ததாக உன்பொருட்டு ஏற்றுக் கொண்டான். சந்த்ரசேகரன்.

சந். இதென்னவிப்படி என்னை ஒப்புக்கொள்ளச் செய்த பிறகு என்னையே அனுப்பிவிடலாமென்ற எண்ணமோ உனக்கு.

புரு. உனக்கு எப்போதும் உன் கெட்ட எண்ணம்தானே தோன்றுகிறது. அப்படி நான் செய்வதானால் நான் ஏனித்தனை நாள் ஜயிலிலிருக்கவேண்டும். நானிறந்த பிறகும் நீ ஸ்ரீமதியை கலியாணம்செய்துகொண்டபிறகும் இந்தக் கடிதத்தை உக்ரவர்மன் ஸ்ரீமதிக்கு அனுப்புவான்.

சங். சரி. இதோ நீ சொன்னபடி எழுதி கையெழுத்து போட்டேன். இனி நான் போய் வருகிறேன்.

(போகிறான்.)

புரு. (கடிதங்களை, கவர்களில்போட்டு, விலாசம் எழுதி உக்ரவர் மனை கூப்பிட்டு கடிதங்களை கொடுத்து) 1ம் நெம்பர் கடிதத்தை மட்டும் என் விசாரணை முடிந்து தண்டனையை நிறைவேற்றின பிறகும், ஸ்ரீமதி சந்த்ரசேகரனை கலியாணம் செய்துகொண்ட பிறகும்தான் தபாலில் போடவேண்டும். 2-ம் நெம்பரைமட்டும் இப்பொழுதேபோட்டு விடுங்கள்.

உக். அப்படியே செய்கிறேன். (போகிறான். வெளியே சந்த்ரசேகரருடன்) என்னய்யா உம்மிடமாவது சொன்னாரா எல்லாம்.

சங். அவனாவது சொல்லவாவது. இன்னும் வீம்பாய்த்தானிருக்கிறான். நானும் எவ்வளவோ நயமாய் சொல்லிக் கேட்டுப்பார்த்தேன். ஒன்றுக்கும் அவன் சரியாய் வரவில்லை. என்ன செய்கிறது. அவன் தலைவிதி. நீங்கள் இந்தக் கடிதத்தை ஸ்ரீமதிக்கு அனுப்புங்கள்.

உக். யாரடா குப்பமுத்து. (மறுபடி) குப்பமுத்து, குப்பமுத்து. (பதிலில்லை.)

உக். (எழுந்துபோய்) குப்பமுத்து, அடே குப்பா, ஏ காமாட்டி குப்பா, தூங்குமூஞ்சிகுப்பா.

குப். (கொஞ்சம் புறண்டு) ஏண்டி புகையிலே வேணுமா?

உக். (ஒரு உதை கொடுத்து) படவா. என்ன தூக்கம் இதற்குள். எழுந்திரு.

குப். (எழுந்து சுவரோடு சாய்ந்து தூங்குகிறான்.)

உக். (ஓர் அறை கொடுத்து) முழித்துக்கொள் படவா.

குப். சாமி என்ன சமாச்சாரம்.

உக். கடிதம் தபாலாபீஸில் போடவேண்டும். முழித்துக்கொள்.

சங். அய்யா! நான் போய் வருகிறேன். இந்தப்பயல் தூங்கிக்கொண்டே போய் கடிதத்தை எங்கேயாவது போட்டு விடுவானே. ரொம்பவும் முக்யமான கடிதமே.

உக். அய்யா தாங்கள் எங்கே போகிறீர்கள்.

சந். தபாலாபீஸ் பக்கம் தான்.

உக். அப்படியானல் நீங்களே போட்டு விடுங்கள்.

சந். அய்யா புருஷோத்தமனுக்கு தெரிந்தால் கோபித்துக்கொள்வாரே.

உக். நான் அவருக்குத் தெரியாமல் பார்த்துக்கொள்கிறேன். போடவேண்டிய கடிதத்தை எடுத்துக்கொள்ளுங்கள்.

[சந்த்ரசேகரன் 1 செ. கடிதத்தை எடுத்துப்போகிறார்.]

குப். அப்பாடா! என் தூக்கம் பிழைத்தது. [போகிறான்.)

---

## அங்கம் 4—காட்சி 4.

### சந்த்ரசேகரர் தோட்டம்.

[சந்த்ரசேகரர் வருகிறார்.]

சந். (தனக்குள்) அயோக்யப்பயலே உன்னைஏமாற்றுவதுஎனக்கு ஒரு சிறமமா. என்ன மிறட்டுகிறான். இப்பொழுதே சொல்லி விடுவானும். இனி இவன் சொல்வதை நம்புவார்போலும். இருந்தபோதிலும் குற்றம் செய்தவனுதலால் எனக்கும் அச்சமயம் கொஞ்சம் பயமாய்த்தானிருந்தது. இனி இவனுக்கு பயப்படக்கூடாது. ஸ்ரீமதிக்கு நாம் ஊருக்குப் போகும்போது வேறு ஒரு கடிதம் எழுதிப் போட்டுவிட்டு போவோம். நல்லது விசாரணை எப்பொழுது நடக்குமென்று தெரிந்து கொண்டு நாம் புறப்பட்டுப் போவோம். ஷண்முகா! ஷண்முகா!

[ஷண்முகன் வருகிறான்.]

ஷண். சாமி.

சந். எங்கேடா போயிருந்தாய் 2, 3 நாளாய்.

ஷண். நம்ம சிறு தாயாருக்கு உடம்பு சரிப்படவில்லே. சாமி அங்கே போயிருந்தேன்.

சந். நம்ப சிறு தாயார் எனக்குக்கூட சிறுதாயாரோ. அடே இந்த நம்ப என்பது வேண்டாமென்று எத்தனை தடவை

சொல்லுகிறது. இந்தக் கடிதத்தை மாஜிஸ்ட்ரேட்டிடம் கொடுத்துவிட்டு சீக்கிரம் வா.

**ஷண்.** சாமி! (நடுங்கி) இனிமேல் அப்படி சொல்லவில்லை. என்னை மேஸ்திருட்டு இடம் அனுப்பவேண்டாம்.

சங். இல்லேடா! வேறு சமாச்சாரம் எழுதியிருக்கிறேன். பதில் கொடுப்பார் வாங்கி வா. என்னடா தயங்குகிறாய்.

**ஷண்** சாமி. சோத்துக்கில்லை கொஞ்சம் பணம் கொடுத்தால் ஒத்தாசையாயிருக்கும்.

சங். அயோக்யப்பயலே. இனி சம்பளம் அட்வான்சாக வேணுமோ.

**ஷண்.** சாமி! கோபிக்கக்கூடாது. எதிர்வீட்டு அய்யர் ரூ. 10 கொடுக்கிறதாயும் ரூ. 50 அட்வான்சு கொடுக்கிறதாயும் சொல்லுகிறார்.

சங். சரி போ ரூ. 50 அட்வான்சு வாங்கினால் ரூ. 500 தண்டம் வைக்கிறேன். கங்காதரனை கொன்றது மறந்தாயோ அல்லது அதை ஒப்புக்கொண்டு, நீ எனக்கு கொடுத்திருக்கும் கடிதத்தை மறந்தாயோ?

**ஷண்.** (காலில் விழுந்து) சாமி இல்லை. அய்யா! சொன்னபடி கேழ்க்கிறேன். என் பிழைப்பை கெடுக்காதேயுங்கள்.

சங். அப்படியானால் நீ எங்கேயும் போகக்கூடாது. இந்தக் கடிதத்தை சீக்கிறம் கொண்டு போ. (போகிறான்).

சங். ஆகா! நமது அதிர்ஷ்டம் நல்லது தான். எந்த இடையூறு வந்தாலும் பறந்து போகிறது. ஆகிலும் இடையூறே வராமலிருக்கக் கூடாதா. வரட்டும். வருவதினால் தானே நமது சூாமார்த்தியம் விளங்குகிறது. இனி ஸ்ரீமதி நம்மை விட்டு தப்பமுடியாது. ஆகிலும் விஜாரணை ஆரம்பிப்பதற்குமுன் நான் எங்கேயாவது போய்விட வேண்டும். முடிந்தபிறகு தான் வரவேண்டும். நமது மனம் எப்படித் தான் தைரியப்படுத்திக் கொண்டாலும் திருடன் சிகப்பு துணி ஒட்டியிருக்கிற கோல்களையெல்லாம் போலீஸ்காரர்களென்று நினைப்பதுபோல் நடுங்குகிறது. போகு

முன் ஸ்ரீமதியை ஒரு தரமாவது பார்த்துவிட்டுப்போக வேண்டுமென்று ஆசையாயிருக்கிறது. அவள் எங்கே நம்மை பார்க்கப் போகிறாள். போலீஸ் என்று சொன் னவுடனே நமது முகம் வேர்க்கிறதே. (கைக்குட்டையை எடுத்து துடைக்கிறான். அப்போது ஒரு கடிதம் கீழே விழுவதைப் பாராமல் போகிறான்) இருக்கட்டும். இன் னும் கொஞ்சகாலத்துக்கு இந்த பயமிருக்கும். கொஞ்ச தாரமிங்கே நடந்துபோவோம். ஷண்முகன் பதிலைப் பார்த்துவிட்டு வீட்டிற்குபோய் பயணத்துக்கு ஏற்பாடு செய்யவேண்டும். (போகிறான்.)

[ஷண்முகன் வருகிறான்.]

ஷண். யஜமானனை எங்கே தேடியும் காணோமே யஜமானன். இந்தப்பயல் செத்தால் தான் நமக்கு விடியும் எந்த கால த்திலோ செய்த குலேயை அடிக்கடி ஞாபகமூட்டி என்னை பயமுறுத்துகிறான். சம்பளமாவது கூட கொடுக்கிறானு. அதுவுமில்லை. நான் என்னதான் செய்கிறது. (ஓர் கடி தம் அகப்படுகிறது) ஓகோ! இதென்ன கடிதம். இருக் கட்டும் இதை மறைவில் கொண்டுபோய் பார்ப்போம். (ஒரு செடி மறைவில் கொண்டுபோய் பார்க்க அங்கே வேறு காகிதம் ஒன்று கிடக்கிறது. இரண்டையும் பார் த்து) ஆகா! என் அதிர்ஷ்டமே அதிர்ஷ்டம் இனி நான் இவனுக்கு பயப்பட வேண்டியதில்லை. இனி இவனுலா னதைப் பார்த்துக்கொள்ளட்டும். ஆகிலும் நாம் இவனை இப்பொழுது ஒன்றும்கேழ்க்கக்கூடாது சமயத்தில் பார் த்துக்கொள்ள வேண்டும். அதோ யஜமானன் வருகி றான். (கடிதத்தை மடித்து வைக்கிறான்).

[சந்த்ரசேகரர் வருகிறார்.]

சந். ஷண்முகா பதில் வாங்கி வந்தாயா.

ஷண். வாங்கி வந்தேன், சாமி.

சந். நல்லது நீ போ. (போகிறான். கடிதத்தைப் பார்த்து) ஆகா! நாளைக்கே விசாரணை போட்டிருக்கிறார். நல்லது ஒரு

முறை ஸ்ரீமதியை பார்த்துவிட்டு புறப்படுவோம்.
(போகிறார்.) [நாகராஜர் வருகிறார்.]

நாக. என்னய்யா எங்கிருந்து வருகிறீர்கள்.

சங். வீட்டிலிருந்துதான் வருகிறேன். ஸ்ரீமதியைப் பார்க்கலாமென்று புறப்பட்டேன். அவள் உடம்பு இப்பொழுது எப்படி யிருக்கிறது.

நாக. இன்னும் அப்படியேதானிருக்கிறது. இன்னும் உமது பேரைக் கேட்டால் அவளுக்கு பயம் போகவில்லை.

சங். அவளை நான் என்னய்யா செய்தேன். நான் என்ன பேயா? பிசாசா? என்னைக் கண்டால் ஏன் அவளுக்கு பயம்?

நாக. வியாதிக்காரர் பயப்படுவதற்கெல்லாம் காரணம் உண்டோ. அவள் மனதிற்கு எப்படி தோன்றுகிறதோ. எனக்கென்ன தெரிகிறது. நல்லது வாரும் நானும் அவளைக் கேழ்க்கிறேன். (போகிறார்கள்).

---

## அங்கம் 4—காட்சி 5.

### நாகராஜய்யர் வீடு.

[ஸ்ரீமதி சாய்ந்திருக்கிறாள்].

நாகராஜய்யர் வருகிறார்—வந்தவுடன் அவரைப்பார்த்து:—

ஸ்ரீ. அப்பா! பார்த்தீர்களா அவரை.

சங். என்னைத்தானே கேழ்க்கிறாய் ஸ்ரீமதி. அவர் என்னைப்பார்த்தார். நீ கவலைப்படாதே. நான் உன்னைத்தான் பார்க்க வந்திருக்கிறேன்.

ஸ்ரீ. (திகைத்து, பாதி எழுந்து, கண்களில் நீர் சொறிய) அய்யோ உங்களைப்பார்த்தால் பயமாயிருக்கிறதே. (கீழே திடீரென்று படுத்து மூர்ச்சை அடைகிறாள்).

நாக. அய்யா! பார்த்தீர்களா அய்யோ மூர்ச்சை அடைந்து விட்டாளே. (தொட்டுப்பார்த்து மூச்சிருப்பதுகண்டு), இனி தாங்கள் இங்கே இருப்பது சரியல்ல போய் வாருங்கள்.

ஸ்ரீ. (கொஞ்சம் தெளிந்து) அய்யா! அய்யா! எனக்கு சத்யம் செய்து கொடுங்கள் எங்கப்பாவைக் காப்பாற்றுவதாய். போகிறீர்களே உங்களுக்கு இஷ்டமில்லையா.

சங். ஸ்ரீமதி அப்படியே செய்கிறேன். இது சத்யம் (போகிறார்).

நாக. ஸ்ரீமதி கவலைப்படாதே, டாக்டர் சொன்னது உனக்கு ஞாபகமில்லையா.

ஸ்ரீ. அப்பா! எனக்கு உடம்பு சௌக்யமாய்விட்டது டாக்டரை கேட்டுப்பாருங்கள்.

நாக. இருந்தாலும் நீ ஜாக்ரதையாய் இருக்கவேண்டும். அதிகமாய் நீ பேசக்கூடாது.

ஸ்ரீ. அப்பா. அவரைப் பார்த்தீர்களா?

நாக. பார்த்தேன். ஒன்றும் ப்ரயோஜனப்படவில்லை. முன்போலவே பிடிவாதமாய்த் தானிருக்கிறார். (ஸ்ரீமதி கண்ணை மூடிக்கொண்டு யோஜிக்கிறாள்). சுந்தரி அவள் தூங்கட்டும். நான் போய் வருகிறேன் (போகிறார்).

ஸ்ரீ. சுந்தரி! சுந்தரி! நீ எங்கே போனாய். அய்யோ நானென்ன செய்வேன் (எழுந்திருக்கிறாள்).

சுங். எங்கே எழுந்திருக்கிறாய் ஸ்ரீமதி நன்றாயிருக்கிறது. பேசாமல் படுத்துக்கொள்

ஸ்ரீ. ஏண்டி, அவரை தூக்கில் போடப்போகிறார்கள். நான் இங்கே படுத்திருக்கட்டுமா. நானும் அவருடன் போகிறேன்.

சுங். என்னடி உனக்கு பைத்யமா. அவரை இன்னும் விஜாரிக்கக்கூட இல்லையே.

ஸ்ரீ. ஆ! நான் கனவா கண்டேன். ஏண்டி எங்கப்பா கேட்டுக் கூட சரிப்படவில்லையே. நான் என்ன செய்கிறது என்றைக்கு விஜாரணை.

சுங். நாளைக்கென்று சொல்லுகிறார்கள்.

ஸ்ரீ. அப்படியானால் சீக்கிறம் புறப்படு போவோம் வா. (எழுந்திருக்கிறாள்).

சுங். ஸ்ரீமதி இதென்னது பேசாமல் படுத்துக்கொள்ளமாட்டாய் நீ எங்கே போவது.

ஸ்ரீ. ஜயிலுக்கு.

சுந். ஜயிலில் நமக்கென்ன வேலை.

ஸ்ரீ. ஆம் உனக்கென்னவேலை. எனக்கு அவரை ஜயிலில் போய்ப் பார்க்கவேண்டும் (எழுந்திருக்கிறாள்).

சுந். ஸ்ரீமதி வேண்டாம்! வேண்டாம். உன் தகப்பனார் கண்டால் என்னையல்லவா திட்டுவார் உனக்கு இப்போது அங்கே போக சக்தி இருக்கிறதா.

ஸ்ரீ. எனக்காக அவருக்கு உயிரை விட சக்தியிருக்கிறபோது எனக்கு அவரைப்பார்க்கக்கூட சக்தியில்லையா. நீ வருவதானால் வா இல்லாவிட்டால் நான் இதோ போகிறேன். (போகிறாள்.)

சுந். ஸ்ரீமதி இரு போகாதே நான் உன் தகப்பனாரிடம் சொல்லி ஒரு வண்டி கொண்டுவரச் சொல்லுகிறேன்.

ஸ்ரீ. எனக்கு வண்டியும் வேண்டாம், நொண்டியும் வேண்டாம். நான் இதோ போகிறேன் என் தகப்பனாரிடம் நீ சொல்வதானால் நான் போனபிறகு சொல். இப்போது சொல்லாதே. (போகிறாள்.)

சுந். ஸ்ரீமதி, ஸ்ரீமதி இரு. இரு. (ஸ்ரீமதி சற்று நிற்கிறாள்) நான் அவரிடம் சொல்லவில்லை. நான்போய் ஒரு வண்டி வைத்து வருகிறேன். உன்னால் நடக்கமுடியாது. நாம் இருவரும் போவோம் (போகிறாள்) (தனக்குள்) அய்யோ! இதென்ன சங்கடம் இவள் இந்த நிலைமையில் அங்கே போனால் இன்னும் என்ன ஆபத்து வருமோ தெரியவில்லையே. தகப்பனாரிடம் சொன்னாலோ இவள் வருத்தப்படுகிறாள். சொல்லாமல் போய் ஏதாவது ஆபத்து நேர்ந்தால் எல்லோரும் என்னையல்லவா நிந்திப்பார்கள். என்ன செய்வது வந்தது வரட்டும். அவளை வண்டி வைத்து கூட்டிப் போகிறேன் (திரும்பிவந்து) ஸ்ரீமதி வண்டி வந்திருக்கிறது வா போகலாம். (போகிறார்கள்).

## அங்கம் 4—காட்சி 6.

[சுந்தரி, ஸ்ரீமதி, உக்ரவர்மன் வருகிறார்கள்.]

சுந். அய்யா! புருஷோத்தமனை என் தோழி பார்க்க வந்திருக்கிறாள். பார்க்கலாமா?

உக். அம்மா! உன் தோழி யார்.

சுந். நாகராஜர் பெண் ஸ்ரீமதி.

உக். இந்தம்மாள் அவரைப்பார்க்கக் காரணமென்ன, அவருக்கு கலியாணம்கூட ஆகவில்லை போலிருக்கிறதே.

சுந். இல்லை. அவர் என் தோழியின் உயிரை தன் உயிரைக்கூட கவனிக்காமல் நதியில் அவள் விழுந்தபோது காப்பாற்றி இருக்கிறார். ஆதலால் அவரைப்பார்த்து அவருக்கு அனுகூலமான சில சமாச்சாரங்கள் சொல்ல வந்திருக்கிறாள்.

உக். அம்மா! யாராவது வந்து அவர் கல் மனதை கரைத்து அவரை உள்ளசங்கதி சொல்லும்படி செய்யமாட்டார்களா என்றுதான் நானும் பார்க்கிறேன். ஆனால் அவர் ஒன்றும் சொல்லுகிறதில்லையே ஒருவரையும் பார்க்க மாட்டேனென்கிறாரே. என்ன செய்கிறது. இந்த அம்மாளாவது அவர் வீம்பை மாற்ற முடியுமானால் எனக்கு சந்தோஷம்தான். ஆகிலும் அவரை உத்திரவு கேட்டுவருகிறேன். (போகிறான்).

ஸ்ரீ. அய்யா! அய்யா. நீங்கள் அவரிடம் போய் சொன்னால் என்னைப்பார்க்க சம்மதிக்கமாட்டார். என்னைக்கூட்டிப்போய் அவரிடம் விட்டுவிடுங்கள். பிறகு நான் பேசிக்கொள்ளுகிறேன்.

உக். அப்படியே செய்கிறேன். வாருங்கள். (உள்ளே கூட்டிப் போய்) புருஷோத்தமரே உம்மைப்பார்க்க யாரோ வந்திருக்கிறார்கள். (போகிறார்).

புரு. (திடுக்கிட்டு) ஆஹா, ஸ்ரீமதி நீ இங்கே வரலாமா. உன்னை யார் இங்கு கூட்டிவந்தது.

ஸ்ரீ. என் சகிதான் கூட்டி வந்தாள்.

புரு. (அவளைப்பார்த்து) அய்யோ ; ஸ்ரீமதி உன் உடம்பு அரை உடம்பாய் போய்விட்டதே. கண்மணி நீ எதை நினைத்து இப்படி உருகிப்போகிறாய்.

ஸ்ரீ. (ஓடி அவரைக்கொண்டு அவர் முகத்தைப்பார்த்து) பிராண நாதா என்னை நீங்கள் இப்படி கேழ்க்கவும் வேண்டுமோ. நீங்கள் அடைந்திருக்கும் கஷ்டத்தில் ஆயிரத்தில் ஒரு பங்கு இருக்குமா நான் அடைந்தது. அய்யோ உங்களை இந்த கோலத்திலா நான் பார்க்கவேண்டும். உங்களை அடையாளம் தெரிந்துக்கொள்வது கூட கஷ்டமாயிருக் கிறதே. இப்படி நீங்கள் கஷ்டப்படும்போது இந்தப்பாவி யாகிய நான் வீட்டில் சுகமாயிருக்கும்படி நேர்ந்ததே. நான் என்ன செய்வேன்.

புரு. (ஸ்ரீமதியின் கண்ணைத்துடைத்து) ஸ்ரீமதி உன் உடம்பு இப் போது இருக்கும் ஸ்திதியில் நீ இங்கே வரலாமா. நீ உன் தகப்பனுருக்காகவாவது உன் உடம்பை ஜாக்கிரதையாய் பார்த்துக்கொள்ள வேண்டாமா.

ஸ்ரீ. பிராணநாதா. நீங்கள் என்னை இப்படி சோதிக்கலாமா. நான் எதையும் பொறுப்பேன். உங்களுக்கு வந்த இந்த அவமா னத்தை நான் பொறுப்பேனு. நீங்கள் இந்தக்கொலை செய்ய வில்லையென்று என் மனதிற்கு நன்றாய் தெரியும். எல் லோருக்கும் அப்படித்தெரியுமா. நீங்கள் என்னிடம் உண் மையைச் சொல்லாமல் போனுல் நான் உயிர் விடுவேன். இது நிச்சயம்.

புரு. ஸ்ரீமதி. இதென்ன முடியாத காரியத்தைக் கேழ்க்கிறுயே நான் சொல்லுவதற்கு ஏதாவதிருந்தால் சொல்லியிருக்க மாட்டேனு.

ஸ்ரீ. பிராணநாதா.

புரு. ஸ்ரீமதி. இனி என்னை பிராணநாதா என்றழையாதே. நீ வேறு ஒருவனை கலியாணம் செய்துகொள்ள வேண்டிய வள் அல்லவா.

ஸ்ரீ. அய்யோ ! பிராணநாதா என் வாயில் அப்படி வருகிறதே. நானென்ன செய்வேன். அந்தக் கலியாணம் வருகிற

வரையிலாவது நான் அப்படிகூப்பிடக்கூடாதா உங்களை. நீங்கள் ஏன் என்னை கண்மணி என்று கூப்பிட்டீர்கள். தைவ சங்கல்பம் நாம் அப்படியே கூப்பிடும்படி யிருந்தாலுமிருக்கலாம். இல்லாமல் போனால் என் வாயில் அப்படி வருமா.

புரு. ஸ்ரீமதி நடக்கக்கூடாத சமாச்சாரத்தை பேசுகிறுயே. இது எப்படி முடியப்போகிறது. நாளைக்கு விஜாரணை நான் தண்டனை அடைவதோ நிச்சயம்.

ஸ்ரீ. நீங்கள் தண்டனை அடைவானேன். கொலை செய்தது இன்னுரென்று சொல்லிவிட்டால் போகிறது. பிராண—நீங்கள் உள்ளதை சொல்லமாட்டீர்களா. (முகத்தை பிடித்துக் கொண்டு) எனக்காக. எனக்காக. சொல்லமாட்டீர்களா.

புரு. (தலைகுனிந்து) ஸ்ரீமதி நான் என்ன செய்யட்டும். இனிமேல் சாக்ஷிகளை விசாரித்து என்னை தண்டிக்கவேண்டியது தானே. நான் விரோதமாய் சொன்னுலும் யார் நம்புவார்கள்.

ஸ்ரீ. அய்யோ நான் சொல்வதைக் கேளுங்கள். நீங்கள் என்னை சற்று நிமிர்ந்து பாருங்கள். நீங்கள் உள்ளதை சொல்லி விடுங்கள். கொலை நீங்கள் செய்ததாக நீங்களே ஒப்புக் கொண்டாலும் அது பொய்யென்று எனக்கு தெரியும்.

புரு, இதென்ன நீ சொல்வது பொய்யாகவிருந்தால நானிப்படி ஒப்புக்கொள்வேனு.

ஸ்ரீ. பிராண—நான் சொல்லட்டுமா? என் மனதுக்குத் தோன்றுகிறது என்னவென்றுல், நீங்கள் ஏதோ என்னை உத்தேசித்து இப்படி ஒப்புக்கொள்ளுகிறீர்கள். அதற்கு இப்படி செய்வானேன். அதற்கு எவ்வளவோ வழிகளிருக்கின்றன. இப்படி அவமானமான குற்றத்தை ஒப்புக்கொண்டு பிராணனை விடவேண்டுமா (அழுது) நாதா எனக்கிதை நினைத்தால் பொறுக்க முடியவில்லையே. உலகத்தார் உங்களை கொலையாளிஎன்று பழிக்கும்போது அதைக்கேழ்க்க என்மனம் சகிக்குமா. நீங்கள் அவளை சுட்டது உண்மையானுல் என்னையும் சுட்டுவிடுங்கள். பிறகு இந்தக் குற்றத்தை வேண்டுமானுல்ஒப்புக்கொள்ளுங்கள்.

தேசங்களில் போய்தான் இதெல்லாம் மறக்கவேண்டும். இங்கிருந்தால் எங்கே போனாலும் வேணி என் கண் முன் தோன்றுகிறாள். விஜாரணை முடிந்து இந்தப்பயல் தொலைந்த பிறகு வருவோம் ஆனால் ஸ்ரீமதிக்கு ஒரு கடிதம் எழுதவேண்டும் இல்லாவிட்டால் ஊரம் போனபிறகு தன்னைப் பார்க்கவில்லையென்று சொல்வாள். எனக்கும் அவளைப்பார்க்க ஆவலாயிருந்த போதிலும் இந்த சமயத்தில் அவளைப்பார்த்தால் என் முகத்தில் எழுதியிருக்கும் கவலை அவளுக்குத்தெரிந்து விடும். அவளுக்கும் என்னை பார்ப்பதில் இஷ்டமில்லை. (கடிதம் எழுதுகிறான்) (எழுதி கவரில் போட்டு) ஷண்முகா ?

**ஷண்.** சாமி !

**சங்.** இதை தபாலில் போட்டு வா. (போகிறான்). நல்லது நாம் பயணத்துக்கு தயார் செய்யவேண்டும். அவன் என்னிடம் வாங்கின கடிதத்தை இங்கேயே கொளுத்திவிடுகிறேன். ஆகா ! புருஷோத்தமா. என்னை நீ ஏமாற்றவல்லவோ பார்த்தாய். உன் வலையில் நான் அகப்படுவேனே. (சட்டையில் கையை போட்டு திகைத்து) ஆகா என்ன அக்கடிதத்தைக் காணோமே. என்ன செய்வேன். முன் அந்த லெட்டர் கெட்டுப்போனது இப்போது இதுவும் போய்விட்டது. (யோஜிக்கிறான்). ஷண்முகா ! நீ ஏதாவது கண்டாயா ?

[ஷண்முகன் வருகிறான்.]

**ஷண்.** என்ன சாமி தபால்க்காரனையா ?

**சங்.** முட்டாள். அவனை யார் கேட்டார்கள். நீ இங்கேயாவது தோட்டத்திலாவது ஏதாவது கடிதம் கண்டாயா ?

**ஷண்.** ஆம் சாமி கண்டேன்.

**சங்.** எங்கே ! எங்கே ! எடுத்து வா. (ஷண்முகன் ஓடுகிறான்) நல்ல வேளை.

**ஷண்.** இந்தாங்கசாமி (ஓர் கடிதத்தைக் கொடுக்கிறான்).

**சங்.** (அதைப்பார்த்து) சீ. சீ. இதை யாரடா கேட்டார்கள்.

யாரோ இறந்துபோன கடிதத்தைக்கொண்டுவந்து காண்பிக்கிருயே. (அதை எறிந்து) வேறு கடிதம் ஒன்றும் உன்னிடம் அகப்படவில்லையா ?

**ஷண்.** இல்லையே ! சாமி.

**சங்.** நல்லது ஷண்முகா ! நான் சிலகாலம் வெளிதேசங்களுக்குப் போய் வருகிறேன். இங்கே நீ ஜாக்ரதையா யிருக்கவேண்டும். வீட்டில் ஜாக்ரதைக்கு உன்னைத்தான் நம்பி யிருக்கிறேன்.

**ஷண்.** சாமி ! அப்படியே ஆகட்டும். எனக்கு கொஞ்சம் சிலவு யிருக்கிறது. ஒரு 10 ரூபாயாவது கொடுத்துப்போங்கள்.

**சங்.** அடே அயோக்யா அன்று நான் ஞாபகமூட்டினதை மறந்து விட்டாயோ நல்லது நான் போய் வருகிறேன். ஜாக்ரதை (போகிருன்).

**ஷண்.** போ துலஞ்சுபோ. கடிதயா ? அதை உன்னிடம் கொடுத்துவிட்டால் பிறகு உன்னிடம் எனக்கு என்ன கிடைக்கப்போகிறது. பணமோ உன்னிடம் கிடைக்கிற வழியில்லை. பழியையாவது தீர்த்து உன்னை பிணமாய்ப் பார்க்கிறேன். (போகிருன்)

---

## அங்கம் 4—காட்சி 8.

[நாகராஜர் வீடு, ஸ்ரீமதி, சுந்தரி வருகிறார்கள்.]

**ஸ்ரீமதி.** சுந்தரி ! சுந்தரி !

**சுந்தரி.** ஏண்டி ஸ்ரீமதி ஏன் இவ்வளவு அவசரமாய்க்கூப்பிட்டாய்.

**ஸ்ரீ.** ஏண்டி யின்றைக்குத்தானே விஜாரணை.

**சுங்.** ஆமாம்.

**ஸ்ரீ.** சுந்தரி, நீ—நீ ஒன்று செய்கிருயோ, எனக்காக !

**சுங்.** என்ன செய்யவேணும.

**ஸ்ரீ.** நீ கோர்ட்டுக்குப் போய் விஜாரணை என்ன நடக்கிறதென்று பார்த்து வருகிருயா.

**சுங்.** ஏண்டி ! நான் அங்கே எப்படி போகிறது. என்னை உள்ளே விடுவார்களா. அங்கே எனக்கு யார் துணை.

ஸ்ரீ. (யோஜித்து) சுந்தரி நீ ஒன்று செய், எங்கப்பாவைப்பார்த்து வரச்சொல்லுகிறேன். நீயும் கூடவே போ. உனக்காக பார்க்க ஆசையாயிருக்கிறதென்று சொல் நான் அப்பா விடம் சொல்லி உன்னைக்கூட்டிப்போய் தகுந்தவிடத்தில் உன்னை உட்காரவைக்கும்படி சொல்லுகிறேன்.

[நாகராஜர் வருகிறார்.]

ஸ்ரீ. அப்பா! இன்று விஜாரணையாமே. நீங்கள் போய் பார்க்கிறீர்களா.

நாக. இந்த ஊரே போகிறது. நான் போகாமலிருப்பேனா. இதோ போகப்போகிறேன். சந்த்ரசேகரரைமட்டும் காணோம். அவர் எங்கேயோ போய்விட்டார்.

ஸ்ரீ. ஏன் இருந்து தம்பிக்கு ஒத்தாசை செய்யவேண்டுமென்று அவருக்குத் தோன்றவில்லையோ.

நாக. அப்படியில்லை. அவரோ வீம்பாய் குற்றத்தை ஒப்புக்கொள்கிறார். இங்கிருந்து இந்த கஷ்டத்தை பார்ப்பதைவிட எங்கேயாவது போய்விடலாமென்று போயிருப்பார்.

ஸ்ரீ. அதென்ன திடீரென்று போய் விட்டாரே. உங்களிடம் சொல்லிக்கொண்டாரா.

நாக. இல்லை எனக்கும் காரணம் தெரியவில்லை அவரும் முன்போவில்லை. ஏதோ கவலையுடனிருப்பதாக தோன்றுகிறது.

ஸ்ரீ. தம்பியின் கஷ்டத்தைப்பார்த்து சகிக்கமாட்டாமல் கவலை ஏற்பட்டிருக்கலாம்.

நாக. சரி நேரமாகிறது. நான் கோர்ட்டுக்குப்போகிறேன் (போகிறார், சுந்தரி கூடப்போகிறாள்).

ஸ்ரீ. சுந்தரி, நீ எங்கே போகிறாய்.

சுந். நானும் கோர்ட்டுக்குப்போய் இந்த கேஸ் நடக்கிறதை பார்த்து வருகிறேன்.

ஸ்ரீ. அப்பா அவளும் வருகிறாளாம். அவளைப்பார்த்துக் கொள்ளுங்கள். சரியான யிடத்தில் உட்கார வையுங்கள்.

நாக. சரி வரட்டும். அவளுக்குத் தனியாக இடம் கொடுக்கச் சொல்லுகிறேன். (போகிறார்கள்).

ஸ்ரீ. ஏது அவர் திடீரென்று போய்விட்டது. காரணம் தெரிய வில்லையே (தபால்காரன் கடிதம் கொடுத்துப்போகிறான்) படித்துப்பார்த்து, ஆஹா! இதென்ன இப்படி எழுதியி ருக்கிறாரே, சந்த்ரசேகரர் இது நிஜமாயிருக்குமா? புரு ஷோத்தமன் கொலை செய்ததை நான் நேரில் பார்த்தேன். ஆகையால் நானிங்கிருந்தால் யாராவது திடீரென்று என்னை சாக்ஷியா யிழுத்து விடுவார்கள். அப்படி விஜா ரித்தால் தம்பிக்கு விரோதமாய் சாக்ஷிசொல்ல வேண்டி யிருக்குமென்று புறப்பட்டுப்போய் விட்டதாக எழுதியி ருக்கிறாரே, ஆகா! ஒருவேளை இதனால்தான் நாம் அன்று அவ்வளவு கட்டாயம் செய்து கேட்டும் சொல்லமாட்டே னென்றாரோ அப்படி அவர் கொலை செய்யப்பட்டவரா. ஒருவேளை பக்ஷி எதையாவது சுட்டு அது அவள்மேல் பட்டு இறந்துபோய் விட்டாளோ. அதைச்சொன்னால் நம்பமாட்டார்களென்று இப்படி யிருக்கிறாரோ. அய் யோ! ஒன்றும் தெரியவில்லையே. நான் என்ன செய்யட் டும். ஆகிலும் சந்த்ரசேகரர் பொய் சொல்வானேன். எல்லாவற்றிற்கும் வாயைத்திறந்து அவர் உள்ளதைச் சொன்னாலல்லவா, நன்றாயிருக்கும். கடிதமும் முழுவதும் நான் பார்க்கவில்லையே பார்ப்போம் (பார்த்து) தான் விஜாரணையெல்லாம் நடந்தபிறகு வருகிறாரும். அதா வது தனக்கு த்ருப்தியாய் தம்பி போனபிறகு வருவார் போலிருக்கிறது. நமது தலைவிதி தான் எப்படியெல்லா மிருக்குமோ பார்ப்போம். (போகிறாள்).

---

## அங்கம் 5—காட்சி 1.

[மாஜிஸ்ட்ரேட் கோர்ட்டு, மாஜிஸ்ட்ரேட், கான்ஸ்டேபில், க்ளார்க் வருகிறார்கள்.]

கோர்ட்டு இரைச்சல்.

**கான்ஸ்டேபில்.** Silence பேசாதே பிரூது பிடிசன். பிரூது பிடிசன்.

ஒருவன். (பிறுதைக்கொடுத்து) சாமி காலில் (விழுகிறான்).
மாஜி. என்னடா சங்கதி எழுந்திருந்து சொல்லடா.
ஒரு. சாமி! என் பெண்சாதி சாமி, ஊ, ஊ, (அழுறான்).
மாஜி. ஏண்டா அழுறே உன் பெண்சாதிக்கென்ன.
ஒரு இல்லே சாமி. அந்த படிகாளிப்பயல் அடுத்த வீட்டு சுப்பன் இருக்கானல்ல.
மாஜி. அவன் அவளை கூட்டிக்கொண்டு போய்விட்டானு.
ஒரு. அய்யோ இல்லே! சாமி! அந்தப்பயல் அவளை அடிச்சு காயப் படுத்திவிட்டான் சாமி.
மாஜி. ஏண்டா, உன் பெண்டாட்டி எங்கே.
ஒரு. ஊட்டிலிருக்கிறாள் சாமி.
மாஜி. பிறுது அவள் கொடுக்கணுண்டா நீ கொடுக்ககூடாது.
ஒரு. என்ன சாமி? என் பெண்டாட்டி என் சரக்கல்ல எனக்குப் பாத்யமில்லேயா. என்ன சாமி.
மாஜி. பெண்டாட்டி உனக்கு பாத்யம்தாண்டா: பிறுது அவள் தாண்டா கொடுக்கவேணும்.
ஒரு. நல்ல கோர்ட்டு சாமி. புருசனுக்குப் பெண்டாட்டி பாத்ய மில்லேங்கர கோர்ட்டு,
மாஜி. சரி. உன் பிறுது தள்ளுபடி போ.
ஒரு. சாமி நியாயமில்லேயா இங்கே.
சே. போடா போ. பேசாதே போ. போ. (தள்ளுகிறான்).
வேறு ஒருவன். (பிறுதைக்கொடுத்து) சாமி கும்பிடரேன்.
மாஜி. என்னடா, சமாச்சாரம்.
வே. ஒ. அல்லாம் நல்ல சமாச்சாரம் தானுங்க.
மாஜி. அடே உன் கேஸ் என்னடா.
வே. ஒரு. என் காட்டுக்கும் பேர்பாதி காட்டுக்கும்.
மாஜி. பேர்பாதி காடென்று என்னடா.
சேவு. பிரதிவாதி என்பதற்கு இவர்களெல்லாம் பேர்பாதி என்று சொல்வது வழக்கம்.
மாஜி. சரி மேலே சொல்.
வே. ஒரு. கேட்டிங்களா பேர்பாதிகாட்டுக்கும் என் காட்டுக்கும்

நடுவிலிருக்கும் புளியமரம் பொதுமரம், பொதுமரம், கேட்டிங்களா.

**மாஜி.** ஏண்டா. அதை உன்னைக்கேட்காமல் அவன் வெட்டினுனே.

**வே. ஒரு.** ஆமா! சாமி. உங்களுக்கு என்னமாத்தான் தெரிஞ்சுதோ. அதிகாரின்னு இப்படியிருந்தால்லா நியாயம் கிடைக்கும். சும்மாவா ஒசர குந்தியிருக்கிறது.

**மாஜி.** அடே உன் பிருது தள்ளுபடி இது Civil விவகாரம்.

**வே ஒரு.** சந்தோசம் சாமி, பேர் பாதிக்கு நோட்டீசு எப்போ வாருங்க.

**மாஜி.** மடயா! உன் பிருதை தள்ளிபோட்டேண்டா. நீ சீவில் கோர்ட்டுக்குப் போ பாத்யா பாத்யதையைப் பத்தின விவகாரம் உன்னுடையது. இங்கே விஜாரிக்கமாட்டோம்.

**வே. ஒரு.** என்ன சாமி இங்கே வந்தா அங்கே போ அங்கே போனல் இங்கே வா என்று இதுதானு நியாயங்க.

**மாஜி.** சற்று முன் நல்ல நியாயம் கிடைக்குமென்றே. இப்போ இப்படி சொல்லுகிருயே போடா.

**வே. ஒரு.** போங்கசாமி இதுதானு நியாயம் இதுக்குத்தானு அத்தனும் உசரத்தில் வந்துகுந்திக்கிட்டீங்க.

சேவு. பேசாதே---போ—(தள்ளுகிருன்).

**மாஜி.** (குமாஸ்தாவைப் பார்த்து) இன்றைக்கு விஜாரணை கேஸில் முதலில் எடுக்கவேண்டியது எது.

**குமா.** அந்த, பி—ஆர்—கேஸ்தான் அவசரம்.

**மாஜி.** சரி, குற்றவாளியைக் கூப்பிடச் சொல். Public prosecutor வந்திருக்கிருரு.

**குமா.** அடுத்த அறையில் இருக்கிருர்.

**மாஜி.** சரி! அந்த கேஸ் முதலில் எடுப்போம்.

**குமா.** ஆர்டர்லி புருஷோத்தமன் என்று கூப்பிடு.

**ஆர்.** புருஷோத்தமன் புருஷோத்தமன்.

[புருஷோத்தமன் வந்து கைதியாக நிற்கிருன் கூட்டில்.]

மாஜி. (Public prosecutor ஐப்பார்த்து) உங்கள் சாக்ஷிகள் தயாராய் இருக்கிறார்களா.

பப். இருக்கிறார்கள்.

மாஜி. சரி சாக்ஷிகளைக் கூப்பிடுங்கள்.

பப். முதல் சாக்ஷி ஹுஸேஸன்.

ஆர். ஹுஸேஸன் ஹுஸேஸன் ஹுஸேஸன் வந்து (மிலிடரிசலாம் வைத்து பெட்டியில் ஏறி ப்ரமாணம் செய்து நிற்கிறான்.)

பப். ஓய் இந்த கேஸ் விஷயமாய் உமக்கு தெரிந்ததைச் சொல்லும்.

ஹுஸே. நான் கைதியை கொலை நடந்த இடத்தில் பிடித்தேன். வேறு ஒருவருமில்லை கீழே துப்பாக்கி இருந்தது. (குமாஸ்தா காண்பிக்க) இதுதான் இதை எடுத்துப் பார்த்ததில் இவர் பெயரின் முதலெழுத்துகள் இருந்தன. இவர் சட்டையில் ரத்தம் இருந்தது. இந்த சட்டைதான். யார் கொலை செய்ததென்று கேட்டேன். ஒன்றும் சொல்ல மாட்டேனென்றார். அரெஸ்டு செய்தேன். பிறகு ஜயிலில் கொண்டுபோய் அடைத்தேன். அவ்வளவு தான்.

மாஜி. (புருஷோத்தமனை பார்த்து) நீர் ஏதாவது கேழ்வி கேழ்க்கிறீரா.

புரு. ஒன்றுமில்லை (ஹுஸேஸன் போகிறான்).

மாஜி. அடுத்த சாக்ஷி.

பப். வாத்யார் குப்புசாமி சாஸ்திரிகள்.

ஆர். குப்புசாமி சாஸ்திரிகள் வாங்கப்பா—வாத்யாரே. சீக்கிரம் வாங்கோ.

[குப்புசாமி சாஸ்திரிகள் முழங்காலுக்கு மேல் வேஷ்டி கட்டிக்கொண்டு மேல் வேஷ்டியை தலையில் கட்டிக்கொண்டு தலையில் அடித்துக் கொள்வது போல் சலாம் செய்து நிற்கிறார்.]

மாஜி. என்ன ஓய் தலையில் என்ன கட்டு.

கு. சா. கோர்ட்டாருக்கு மரியாதை. தலை தெரியப்படாது என்று சொன்னா. மேல்வேஷ்டியை தலையில்கட்டிக்கொண்டேன்.

**மாஜி.** ஒரு சட்டியை தலையில் கவிழ்த்துக்கொண்டு வருகிறது தானே, இப்பொ வேஷ்டியை இன்னும் தூக்கிக் கட்டுகிறது தானே.

**கு** வேஷ்டியைத் தொங்கவிட்டுக் கட்டுவது அவமரியாதை என்று சொல்வார்கள். உத்திரவுப்படி நடக்கிறேன்.

**மாஜி.** நல்லது ஓய் சத்யம் செய்யும் (செய்கிறார்) ஓய் உமக்கென்ன தெரியும்.

**கு. சா.** எனக்கு சாஸ்திரம் வரும், அத்யானம் நன்றாய் செய்திருக்கேன், உபாத்தியாயமும் நன்றாய்த் தெரியும். எல்லாம் அவிடத்து தயவு இருக்கும்போது எனக்கு ஒன்றும் குறைச்சலில்லே.

**மாஜி.** என்ன உளருகிறீர் கேசைப்பத்தி கேட்டால் பூரிதக்ஷணை கேழ்க்க வருகிறீரே. இந்தக் கேசைப்பற்றி உமக்கு என்ன தெரியும்.

**கு. சா.** (சிறித்து) எனக்கென்ன தெரியும் எனக்கு ஒன்றும் தெரியாது.

**மாஜி.** ஏன் வந்தீரிங்கே தக்ஷணை வாங்கவா.

**கு. சா.** அப்படியில்லே இவரைப் பிடித்துக்கொண்டு வந்தபோது பார்த்தேன் சட்டையில் ரத்தமிருந்தது. துப்பாக்கியில் அவர் பேர் இருந்தது, இந்தக் குற்றம் செய்தீரா என்று நாங்கள் கேட்டதில் ஒன்றும் சொல்லமாட்டேனென்றார்.

**மா.** (புருஷோத்தமனை பார்த்து) நீர் ஏதாவது கேழ்க்கிறீரா.

**புரு.** ஒன்றுமில்லே. (சாக்ஷி போகிறார்).

**மாஜி.** அடுத்த சாக்ஷி.

**பப்.** பாபுராவ்.

**ஆர்.** பாபுராவ். (பாபுராவ் பெட்டியில் ஏறி நிற்கிறார்.)

**குமா.** நான் சொல்லுகிறபடி சொல்லும் சர்வவல்லமை.

**பா.** சர்வவள்ளாமை.

**மாஜி.** ஓய் வல்லமையென்று சொல்லும்.

**பா.** வளமை.

**குமா.** உள்ளவதவத்தின் முன்பாக நான் சொல்வது நிஜமேயல்லாமல்.

பா. நிஜமில்லாமல்,

மாஜி. ஓய் நிஜமில்லாமல் பொய்யா சொல்லப் போகிறீர் சத்ய மாய் சொல்லுகிறேனென்று சொல்லும். போதும்.

பா. சத்யமாய் சொல்லுகிறேன்.

பப். ஓய் இக்கேஸ் விஷயமாய் உமக்கு தெரிந்ததை சொல்லும்.

பா. எனக்கு ஒன்றும் தெரியாது. கொலை நடந்த யிடத்துக்குப் பின் புறம் என் வீடு. நான் அந்தப் பெண் அந்த இடத்துக்கு வந்ததைப் பார்த்தேன். சற்று நேரத்திற்கெல்லாமிவர் அங்கே யிருந்ததைப் பார்த்தேன். இதுதான்.

மாஜி. அந்தப் பெண் எங்கே நின்றாள்.

பா. ஒரு நொங்கு செடியின் கீழே நின்றாள்.

மாஜி. நொங்கு செடியாவது அது என்ன செடி.

ஆர். பனமரத்தைச் சொல்லுகிறார்.

சில ராயர்களுக்கு தமிழ் செவ்வையாய் வராது.

மாஜி. (புருஷோத்தமனை பார்த்து) நீர் ஏதாவது கேழ்க்கிறீரா.

புரு. ஒன்றுமில்லை (பாப்பு ராவ் போகிறார்).

பப். சாக்ஷிகளிவ்வளவுதான்.

மாஜி. (புருஷோத்தமனைபார்த்து) ஐயா உமக்கு ஏதாவது சொல் லிக்கொள்ளவேண்டுமா. சாக்ஷி உண்டா?

புரு. ஒன்றுமில்லை.

மாஜி. சரி, சர்க்கார் தரப்பில் மூன்று சாக்ஷிகள் விஜாரித்திருக் கிறார்கள். அவர்கள் சாக்ஷியத்தால் நீர் கொலை செய்ததாக ஏற்படுகிறது. உமக்கு சாக்ஷி ஒருவருமில்லை ஆகையால் உம்மை செஷனில் விஜாரிக்க கமிட் செய்திருக்கிறோம்.

[எல்லோரும் போகிறார்கள்.]

---

## அங்கம் 5—காட்சி 2.

---

### ஜயில் வெளி பக்கம்.

[சூரியநாராயணன், ப்ரதாபசிங் ர்கள்.]

சூரி. ப்ரதாபசிங், நீ இதில் உன் சாமார்த்தியம் முழுவதும் காண்பிக்க வேண்டும். இந்தமாதிரி கேஸ் நான் இதுவரையில் கேட்டதில்லை. குற்றவாளியும் வாதிதரப்போடு சேர்ந்த கேஸ் வெகு அதிசயமல்லவா. நான் பேபரில் இதைக் கண்டதும் இது என் சினேகிதன் புருஷோத்தமனாய்த் தானிருக்கவேண்டுமென்று ஓடிவந்தேன். அவன் ஒரு போதும் கொலை செய்யக்கூடியவனல்ல. இதில் ஏதோ விசேஷமான ரகஸ்யமிருக்கிறது. ஆராய்ந்து பார்க்க வேண்டும்.

சிங். சினேகிதா! நீ எனக்கு சொல்லவும் வேண்டுமோ நீ வருவதற்குமுன் இந்த கேஸில் நிஜத்தை கண்டுபிடிக்க வேண்டுமென்று எனக்கு ஆவலிருந்தது. நீ வந்தபிறகு இந்த கேஸ் எனக்கு சொந்தமாகிவிட்டது.

சூரி. சிங், நீ சிலவுக்கு யோஜிக்கவேண்டாம். என்ன சிலவானாலும் ஆகட்டும். நான் தருகிறேன். நல்லது நான் ஜயிலுக்குப்போய் என் சினேகிதனைப் பார்த்து வருகிறேன்.

(சிங் போகிறார்.)

சூரி. (உக்ரவர்மனை பார்த்து) அய்யா! புருஷோத்தமனை நான் பார்க்கலாமா.

உக். அய்யா! உங்களைப்போல் எத்தனையோ பேர்கள் சினேகிதர்கள், அவரைக்கெஞ்சிக் கேட்டாகிவிட்டது. ஒன்றும் சொல்லமாட்டேன் என்கிறார் போய் வாருங்கள் உங்களுக்காவது நிஜம் சொல்வாரோ பார்ப்போம்.

சூரி. எப்படியோ பார்ப்போம். (போகிறார்).

[ஜயிலில் உள் அறை].

புரு. (ஓடிவந்து சிநேகிதனைக் கட்டிக்கொண்டு) சிநேகிதா நீ எப்போது வந்தாய் ஓகோ கடைசி காலமாகையால் என்னை-

சூரி. (அவன் வாயைப்பொத்தி) சினேகிதா என்ன சொல்ல வந்தாய். இனி இந்த மாதிரி பேசாதே.

புரு. ஏன் நான் உள்ளதைத்தானே சொல்லுகிறேன். நீ வந்ததும் நியாயம் தானே. பிறகு நீ என்னை எங்கே பார்க்கப்போகிறாய்.

சூரி. சிநேகிதா ! இதென்ன பேச்சு. இதெல்லாம் நீயே செய்து கொண்டது தானே நீ இதை செய்ததாக ஒப்புக்கொண்ட போதிலும் நான் உன்னை நம்பமாட்டேன். இதில் ஏதோ ரகஸ்யமிருக்கிறது. அதை நீ என்னிடம் சொல்லிவிட்டு பிறகு உன்னிஷ்டம் போல் செய். பகிரங்கமாய் சொல்ல வேண்டாம். நான் எல்லாம் பார்த்துக்கொள்ளுகிறேன்.

புரு. சிநேகிதா ! எல்லோரும் என்னை இந்தக்கேழ்வி கேட்டாகி விட்டது. நீ ஒருவன் மீதி, நீயும் கேட்டுவிட்டாய் எல்லோருக்கும் நான் சொன்ன பதிலை உனக்கும் சொல்லி விடுகிறேன். எனக்கு ஒன்றும் தெரியாது.

சூரி. சிநேகிதா ! அந்த பதிலை நான் ஒப்புக்கொள்ள மாட்டேன். நீ என்ன காரணத்தினால் இந்தமாதிரி பிடிவாதம் செய்கிறாய் அதையாவது சொல்லிவிடு. அது சரியான யோஜனையா என்றாவது பார்க்கிறேன்.

புரு. யோஜனை என்ன இருக்கிறது. ஊமையை பேசச்சொன்னால் என்ன செய்கிறது.

சூரி. உண்மையான ஊமை பேசமுடியாது, பாசாங்கு செய்யும் ஊமை பேசமுடியும்.

புரு. உயிர் போவதில் யாராவது பாசாங்கு செய்வார்களா.

சூரி. சரி, நீ உன் வீம்பை விடமாட்டாய். நல்லது நான் வேறு யோஜனை சொல்லுகிறேன் அந்தப்படியாவது செய்வாயா.

புரு. என்ன செய்யவேண்டும்.

சூரி. நான் உனக்காக பெரிய பாரிஸ்டர் கூட்டி வருகிறேன். அவருக்கு உன்னால் என்ன சமாச்சாரம் சொல்லக்கூடுமோ அதைச் சொல்லவேண்டும்.

புரு. நான் சொல்லக்கூடியது ஒன்றுமில்லை. இருந்தால் உனக்கு நான் சொல்லியிருக்கமாட்டேனு. ஏன் எனக்காக வீண் சிரமப்படுகிறாய். எனக்கு பாரிஸ்டர் வந்து என்ன ஒத்தாசை செய்யப்போகிறார். எனக்கு விரோதமான சாக்ஷியோ பலமாயிருக்கிறது. நான் ஒன்றும் செய்யக்கூடியதில்லை. நீ எனக்காக ஏன் வீணில் பணத்தை சிலவு செய்ய பார்க்கிறாய்.

சூரி. சினேகிதா ! உன்விஷயத்தில் பணச்செலவை நான்பார்க்கப் போகிறேனா. அது விஷயத்தை நீ கவனிக்கவேண்டாம். இதன் உண்மையை நீ சொல்லாவிட்டாலும் நான் கண்டு பிடிக்கிறேன் பார்.

புரு. சரி, உன்னிஷ்டப்படி செய். ஆனால் நான் உன்னை ஒன்று கேட்டுக்கொள்ளுகிறேன். விஜாரணையின்றி நீ ஸ்ரீமதி அவள் தகப்பனார் இவர்களை எங்கேயாவது கூட்டிக் கொண்டுபோய் விடு. அவர்களிங்கே இருக்கக்கூடாது.

சூரி. ஏன் அதை நீ அவ்வளவு அவமானமாய் நினைத்தால் உள்ளதை சொல்லிவிடுகிறது தானே. ஏன் மறைக்கிறாய்.

புரு. நான் ஒன்றும் மறைக்கவில்லையே.

சூரி. ஒருவேளை பக்ஷி சுடப்போய் அவளிருப்பது தெரியாமல் அந்தப் பக்கம் சுட்டு அவள் இறந்தாளோ. அப்படியிருந்தால் சொல்லிவிடு. உனக்கு விடுதலையாகும்.

புரு. அப்படி ஒன்றுமில்லை. இருந்தால் நான் சொல்லமாட்டேனா.

சூரி. அதிருக்கட்டும். சந்த்ரசேகரனை எங்கே அனுப்பினாய்.

புரு. அவன் ஊரிலில்லையா எனக்குத் தெரியாதே. எங்கே போயிருக்கிறான்.

சூரி. அதிருக்கட்டும். உன்னை கலியாணம் செய்து கொள்வதில் வெகு ப்ரியமாயிருந்த ஸ்ரீமதி சந்த்ரசேகரனை கலியாணம் செய்துகொள்ள சம்மதித்த காரணமென்ன.

புரு. அவள் தகப்பனுக்கு கடன் அதிகமாயிருந்தது. அதை சந்த்ரசேகரன் கொடுப்பதாய் வாக்களித்தான். அதனால் சம்மதித்தாள்.

சூரி. சினேகிதா நாகராஜருக்கு கடன் ஏது. அவர் ரொக்கமல்லவா வைத்திருந்தார்.

புரு. அதை எதோ பாங்கில் போட்டிருந்தாராம், கடன் வாங்கியும் போட்டிருந்தாராம். பாங்கு இன்சால்வெண்டாகி சொத்து போய் கடன் மிச்சமாம்.

சூரி. சினேகிதா ! ஒரு கடிதம் எனக்கு இது விஷயமாய் நீ எழுதியிருக்கக்கூடாதா இந்தக்கடனை நான் உனக்காக அடைத்திருக்க மாட்டேனா. நீ அவளை கலியாணம் செய்திருக்கக்

கூடாதா. அவளையும் கஷ்டத்துக்குள்ளாக்கி நீயும் கஷ்ட பட்டுக்கொண்டிருக்கிறாயே.

புரு. உனக்கு எப்படி தெரியப்படுத்துகிறது. நீ சொன்னபடி கடிதம் போட்டாயா. உன் விலாசம் எனக்குத் தெரியவில்லையே.

சூரி. இதல்லாம் வீண்பேச்சு. நீ பிறருடைய ஒத்தாசையை ஏற்றுக்கொள்ளமாட்டாய். என் பேபரில் போடக்கூடாது. பேபரில் பார்த்துத்தானே இப்போது உன் கேஸ் சமாச்சாரம் எனக்குத் தெரிந்தது. நாகராஜருக்கு கடன்வாங்கி கொடுத்தது யார் தெரியுமா உனக்கு. அவரை பாங்கில் போடச்சொன்னது யார்? இதெல்லாம் சந்த்ரசேகரன் செய்திருப்பானென்று நினைக்கிறேன்.

புரு. எனக்குத்தெரியாது அது விஷயம் நான் விஜாரிக்கவில்லை.

சூரி. ஸ்ரீமதியைக் கேட்டால் தெரிந்திருக்குமே. இப்படி எல்லாவற்றையும் யோஜிக்காமல் நம்பியிருக்கிறாயே. சந்த்ரசேகரன் தான் இப்படியெல்லாம் செய்திருக்கவேண்டும்.

புரு. இருக்காது அவன் சமயத்தில் ஸ்ரீமதிக்கு உதவி செய்ய வந்தவனேயல்லாது வேறில்லை.

சூரி. நல்லது நீர விஜாரித்து இதன் உண்மையை அறிகிறேன். (போகிறான்).

---

## அங்கம் 5—காட்சி 3.

### நாகராஜய்யர் வீடு.

[ஸ்ரீமதி, சுந்தரி வருகிறார்கள்.]

ஸ்ரீ. சுந்தரி! செஷன்ஸ் கோர்ட்டு விஜாரணை எப்போது.

சுந். நாளையதினம் விஜாரணையாம். கூட்டம் எவ்வளவு வந்திருக்கிறது வேடிக்கை பார்க்க.

ஸ்ரீ. (பெருமூச்சு விட்டு) ஹா! இதுவும் ஒரு வேடிக்கையா.

சுந். சர்க்கார் தரப்புக்கு பாரிஸ்டர் க்ருஷ்ணராவ் வருகிறாராம். அவர் வெகு கெட்டிக்காரராம். பொய்யை நிஜமாகக் காண்பிப்பாராம். எல்லோரும் அவர் பேச்சைக் கேழ்க்க ஆவலுடன் வந்து காத்துக்கொண்டிருக்கிறார்கள்.

ஸ்ரீ. ஏண்டி அப்படிப்பட்ட பாரிஸ்டர் வந்து கேஸ் நடத்தினுல் என் புருஷோத்தமர் தப்பிப்போக முடியுமா. சகி என்னடி செய்கிறது.

ச. புருஷோத்தமருக்கும் பாரிஸ்டர் ஒருவர் வருகிறாண்டி. அவர் பேர் பாரிஸ்டர் சாமினுதய்யராம். அவரும் வெகு கெட்டிக்காரராம் அதிலும் குற்றவாளி கக்ஷியிலேயே பேசினவராம். அவர் இதுவரையில் கேஸ் நடத்தி ஒரு குத்தவாளியாவது தண்டிக்கப்பட்டான் என்பது கிடையாதாம். அவர் பேச்சையும் கேழ்க்க ஆவல்கொண்டு வெகு கூட்டம் வந்திருக்கிறது.

ஸ்ரீ. ஏண்டி: இதென்ன ஆச்சரியமாயிருக்கிறது. அவர் வக்கீல் வேண்டாமென்று சொல்லிக்கொண்டிருந்தாரே. ஏது இதற்கு சம்மதித்தது. இவ்வளவு பெரிய வக்கீல் வைக்க அவருக்கு பணம் தான் ஏது.

ச. அதையும் நான் விஜாரித்தேண்டி. அவருக்கு யாரோ ஒருவர் பணக்கார சினேகிதராம். அவர் வக்கீல் வைத்திருக்கிறாராம்.

ஸ்ரீ. ஓகோ சூரியநாராயணனே. அவர் வெகு பணக்கார சினேகிதர்தான், உனக்கு எப்படி தெரிந்தது இதெல்லாம்.

ச. ஏண்டி நீ யிது விஷயமெல்லாம் தெரிந்துகொள்ள ஆவலுடன் இருப்பாயென்று எனக்குத் தெரியாதா. அதற்காகத் தான் எல்லாம் விஜாரித்து வந்தேன்.

[நாகராஜய்யர் வருகிறார்.]

ஸ்ரீ. அப்பா: நாளைக்கு விஜாரணையாமே என்னையும் கூட்டிப் போகிறீர்களா?

நாக. ஏன் நீ இங்கேயே இரேன். அந்தக் கூட்டத்திலே நீ வருவானேன்.

ஸ்ரீ. தனியாயிருக்கக்கூடிய இடமில்லையா. நான் செஷன்ஸ் கோர்ட்டு பார்த்ததே யில்லை அப்பா.

நாக. சரி இருக்கட்டும் நான் வேண்டிய ஏற்பாடுகள் இன்றே செய்து வைக்கிறேன். அதிருக்கட்டும். ஸ்ரீமதி, சந்த்ர

சேகரர் ஊருக்குப் போகும்போது உன்னிடம் சொல்லிக் கொண்டுபோனாரா.

ஸ்ரீ. இல்லையே.

நாக. நான் நேற்று போய் விஜாரித்ததில் அவர் ஆள் கூட ஊரி லில்லை. அய்யன் எங்கேயோ போய்விட்டான். அவனை யாவது யஜமானன் எங்கே போயிருக்கிறானென்று கேழ்க்கபோனேன். சரி நேரமாகிறது. நான் போகி றேன் (போகிறார்).

சு. ஏண்டி ஸ்ரீமதி நாம் இந்தக் கூட்டத்தில் ஏன் கோர்ட்டுக்குப் போகவேண்டும்.

ஸ்ரீ. என்னடி சுந்தரி நீ கூட இப்படி கேழ்க்கிறாயே. நான் இங் கிருந்தால் என் மனம் கேழ்க்குமா ? அங்கே இருந்தால் முடிவு சமாச்சாரம் உடனே தெரியும். இங்கிருந்தால் சமாச்சாரம் தாமதமாய் வருவது தவிற கவலை எவ்வளவு இருக்கும்.

சுந். சரி, உன் இஷ்டம் போல் செய் (போகிறாள்).

[சூரியநாராயணன் வருகிறான்].

சூரி. ஸ்ரீமதி, உன்னைப்பார்க்கத்தான் வந்தேன்.

ஸ்ரீ. வாருங்கள். உட்காருங்கள், என்ன சமாச்சாரம், நீங்கள் வெகு நாள் இங்கே இல்லைபோலிருக்கிறதே.

சூரி. ஆம் : காரணமும் உனக்கு தெரிந்த விஷயமே. ஆகிலும் அதை நான் இப்பொழுது கேழ்க்க வரவில்லை. உன் தகப்பனார் பணத்தை எந்த பாங்கில் போட்டிருந்தார் ? இந்த கேஸ்விஷயமாய் தெரியவேண்டியிருக்கிறது சொல்.

ஸ்ரீ. முதலில் ஒரு பாங்கில் போட்டிருந்தார். அவர்கள் சரியாக வட்டி ஒன்றும் கொடுக்கிறதில்லையென்று வேறு பாங்கில் போட்டார். அந்த பாங்கில் சந்த்ரசேகரரும் போட்டிருந் தாராம்.

சூரி. கடன் ஏதாவது வாங்கிப்போட்டாரா ?

ஸ்ரீ. பணமெல்லாம் போனபிறகு தான் கடன் வாங்கியும் போட் டிருப்பதாய் சொன்னார்.

. கடன் யார் வாங்கிக்கொடுத்தது.

ஸ்ரீ. அது எனக்குத் தெரியாது. இதோ அவரே வருகிருர். அவரைக்கேளுங்கள். (நாகராஜர் வருகிருர்). அப்பா இவர் புருஷோத்தமருக்கு மூக்யமான சிநேகிதர். இந்த கேஸ் விஷயமாய் உண்மையைக் கண்டு பிடிக்க அவர் ப்ரயத்தனம் செய்கிருர். நீங்களும் அவருக்கு வேண்டிய ஒத்தாசையை செய்யுங்கள்.

நாக. அப்படியே செய்கிறேன். என்ன அய்யா! உங்களுக்குத் தெரியவேண்டியது.

சூரி. நீங்கள் ஒரு பாங்கிலிருந்து வேறு பாங்குக்கு பணத்தை ஏன் மாற்றினீர்கள். ஏமாற்றினவர் யார்.

நாக. சந்த்ரசேகரர் என்னை பட்டணத்திற்கு கூட்டிப்போய் ஒரு பாங்கு காண்பித்தார். அது நன்ருயிருந்தது. ஆகையால் அதில் போட்டேன்.

சூரி. இதற்கு கடன் வாங்கியும் போட்டீர்களா ?

நாக. ஆம்.

சூரி. கடன் யார் வாங்கிக்கொடுத்தது.

நாக. சந்த்ரசேகரர் தான் சிபார்சு செய்து வாங்கிக்கொடுத்தார்.

சூரி. முன் போட்ட பாங்கில் கடன் வாங்கி போடவில்லையே.

நாக. இல்லை.

சூரி. இந்த பாங்கை நீங்கள் நேரில் பார்த்தீர்களா. அதன் ரூல் விபரமெல்லாம் பார்த்தீர்களா.

நாக. எல்லாம் பார்த்துத்தான் போட்டேன்.

சூரி. ஸ்ரீமதி தன்னை கலியாணம் செய்து கொண்டால் கடனை அடைப்பதாக அவரே சொன்ஞரா ? நீங்கள் கேட்டீர்களா ?

நாக. அவரே சொன்ஞர்.

சூரி. அவ்வளவுதான் வேண்டியது. நான் போய் வருகிறேன். (போகிருன்). (வழியில் சிங் வருகிருர்.)

. சிங். உன்னைத் தான் பார்ப்பதற்குப் புறப்பட்டேன். இங்கே நாகராஜர் ஸ்ரீமதி இவர்களை விஜாரித்துக் கொண்

டேன். முக்யமான சமாச்சாரங்கள் தெரிந்தன. சந்த்ரசே கரனையும் அவர் வேலைக்காரனையும் தேடும்படி ஆள் அனுப்பியிருக்கிறேன். நீ என்ன செய்தாய்.

சிங். அந்தவேணி என்பவளுக்கு ஓர் ஆசைநாயகன் இருக்கிறான். அவனை தேடி கூட்டிவரும்படி ஆள் அனுப்பியிருக்கி றேன்.

சூரி. சந்த்ரசேகரன்தான் இவ்வளவு வேலையும் செய்திருக்கிறான். அவனை நாம் விடக்கூடாது. இனி நாம் அவர்களைப் பார்ப்போம் வா. (போகிறார்கள்).

---

## அங்கம் 5—காட்சி 1.

சேஷன்ஸ் கோர்ட்டு வெகு கூட்டம்.

[சேவுகன் வருகிறான்.]

சே. Silence. பேசாதே.

[Judge கிரீசய்யர் வருகிறார். எல்லோரும் எழுந்திருக்கிறார்கள். குற்றவாளிபெட்டியில்நிற்கிறான் க்ளர்க் வருகிறார்.]

கிரீ. கிளர்க், அஸெஸர்களை கூப்பிடச்சொல் (க்ளர்க் சொல்ல சேவுகன் கூப்பிடுகிறான்). பத்மநாப நாயுடு, பக்ருதீன், புஜங்கராவ், நாதமுனி அய்யங்கார், எல்லாம் ஆஜர்.

நாதமுனி. (சலாம்செய்து) துறைகளே என்னை மன்னிக்கவேண்டும்.

கிரீ. என்ன துறை, துறை, நான் என்ன வெள்ளைக்காரனா?

நாத. துறைகளே நான் செவிடு.

கிரீ. நீ சொல்வதை நான் நம்பவில்லை.

நாத. இல்லை நான் செவிடுதான். (எல்லோரும் சிறிக்கிறார்கள்).

பக்ருதீன். சலாம்! மகராஜ், நம்கி கண் தெரியமாட்டான். நான் கோர்ட்டுக்கு வந்தானில்லே.

கிரீ. நீ என்ன சொல்வது ஒன்றும் தெரியவில்லை.

பக். நம்பீ கண் தெரியமாட்டான் ஸாமி.

கிரீ. ஆகையால் தான் காது நன்ருய் கேழ்க்கும். அஸெஸராய் இருக்கலாம். க்ளர்க் இந்த முக்யமான கேசுக்கு இவர்கள் வேண்டாம். அடுத்த கேசுக்கு இவர்கள் வரட்டும்.

க்ளர்க். நீங்கள் இருவரும் போகலாம். (போகிருர்கள்).

கிரீ. புருஷோத்தமரே நீர் இந்த குற்றத்தை செய்ததுண்டா ?

புரு. நான் ஒன்றும் சொல்லமாட்டேன் சாக்ஷிகளை விசாரியுங்கள்.

கிரீ. வக்கீல் இருக்கிருரா.

பாரிஸ்டர் சாமிநாதய்யர் நான் ஆஜராகிறேன். (அஸெஸர்கள் பிறமாணம் செய்து உட்காருகிருர்கள்.)

பாரி. க்ரு, கனவான்களே சர்க்காருக்காக நான் இந்த கேஸில் ஆஜராகிறேன். இந்த கேஸில் குற்றத்தை நேரில் பார்த்த சாக்ஷி கிடையாது. ஆகிலும் குற்றவாளி தான் இக்குலையை செய்திருக்க வேண்டுமென்று தீர்மானிக்கக் கூடிய விஷயங்களிருக்கின்றன. அதெல்லாம் சாக்ஷியத்தால் தெரியவரும். முதல் சாக்ஷி ஹுசேன்.

ஹு. (சலாம் செய்து பெட்டியில் பிறமாணம்செய்து நிற்கிருன்).

பா. க்ரு, உனக்கு இந்த கேஸ் விஷயமாய் என்ன தெரியும்.

ஹு. நான் இந்த குற்றவாளியை குலை நடந்த இடத்தில் பார்த்தேன் துப்பாக்கி கிடந்தது. அதை எடுத்துப்பார்த்தேன். இரண்டு எழுத்து இருந்தது. இவர் சட்டையில் ரத்தம் இருந்தது. இந்தக்குலை யார் செய்ததென்று கேட்டேன்.

பா. சா. கோர்ட்டாரவர்கள் கவனிக்கவேண்டும். போலீஸ்காரன் முன் குற்றத்தை ஒப்புக்கொண்டதாகவோ என்னவோ சொல்ல வருகிறுன்.

கிரீ. கான்ஸ்டேபில் அந்த ஒப்புக்கொள்ளுதல் சாக்ஷியுமிருந்தாலும் சட்டப்படிசெல்லாது அதைசொல்லவேண்டாம்.

ஹு. சரி பிறகு நான் இவரை அரெஸ்டு செய்தேன். ஜயிலில் கொண்டுபோய் அடைத்தேன் அவ்வளவுதான்.

பா. சா. (கிருஸ்) ரத்தம் சட்டையிலிருந்ததா.

ஹு. ஆம்.

பா. சா. அப்போது இவர் நின்றுகொண்டிருந்தாரா உட்கார்ந்திருந்தாரா.

ஹ-ு. நின்றுகொண்டிருந்தார்.

பா. சா. பிணம் கிடந்த இடம் சுத்தமான விடமா அழுக்குபடிந்த விடமா ?

ஹ-ு. அவ்வளவு சுத்தமான இடமல்ல.

பா. சா. (துப்பாக்கியை சோதித்து) இந்த துப்பாக்கியிலிருக்கும் எழுத்து நீ பார்த்தபோது இப்படித்தானே யிருந்தது.

ஹ-ு. ஆம்.

பா. சா. எழுத்துகள் புதிதாய் எழுதப்பட்டிருந்ததுபோல் இருந்ததா.

ஹ-ு. எங்கே பார்த்துச் சொல்லுகிறேன் (பார்த்து) ஆம்! புதிதாய் எழுதினதுபோல் தானிருக்கிறது. ஓரத்திலெல்லாம் மங்கலா யிருக்கிறது. நடுவில் மட்டும் பளபளப்பாயிருக்கிறது.

பா. சா. அவ்வளவுதான் கேள்வி.

கிரீ. அடுத்த சாக்ஷி.

பா. க்ரு. குப்புசாமி சாஸ்திரிகள்.

கு. சா. (தலையில் அடித்துக்கொள்வதுபோல் சலாம் செய்கிறார். எல்லோருஞ்சிறிக்கிறார்கள் பிறமாணம்செய்து நிற்கிறார்.)

பா. க்ரு. ஓய் இந்த கேஸில் உமக்கு தெரிந்ததைச் சொல்லும்.

கு. சா. இந்த குத்தவாளியை பிடித்துக்கொண்டு வந்தபோது நான் பார்த்தேன். சட்டையில் ரத்தமிருந்தது. துப்பாக்கியில் அவர் பேர் இருந்தது. இதுதான் தெரியும் எனக்கு.

பா. சா. (க்ருஸ்) நீர் பார்த்தபோது இன்னும் எத்தனை பேர்கள் பார்த்தார்கள்.

கு. சா. அநேகம் பேர்கள் பார்த்தார்கள்.

பா. சா. குறிப்பாய் சொல்ல முடியுமா ?

கு. சா. நாகராஜர், சந்த்ரசேகரர், சுந்தரமய்யர் இன்னுமனேகம் பேர் இருந்தார்கள்.

பா. சா. சட்டையில் எந்த பாகத்தில் ரத்தமிருந்தது.

கு. சா. அவ்வளவு குறிப்பாய் பார்க்கவில்லை.

பா. சா. துப்பாக்கியில் எழுதியிருந்தது அவர் பேர் என்று உமக்கு எப்படித் தெரியும்.

கு. சா. எனக்குத் தெரியாது அப்படி சொல்லிக்கொண்டார்கள்.

பா. சா. அவ்வளவு தான் கேள்வி.

கிரீ. அடுத்த சாக்ஷி.

பா. க்ரு. பாப்பு ராவ்.

பாப்புராவ். பிறமாணம் செய்து நிற்கிறார்.

பா. க்ரு. ஓய் இந்த கேஸில் உமக்கு தெரிந்ததைச் சொல்லும்.

பாப்பு. கொலை நடந்த இடத்துக்கு பின்புறம் என் வீடு. அந்தப் பெண் அந்த இடத்துக்கு வந்ததை பார்த்தேன் சற்று நேரத்திற்கெல்லாம் இவர் அங்கே வந்ததைப் பார்த்தேன். இதுதான் எனக்குத் தெரியும்.

பா. சா. (க்ருஸ்) அந்தப் பெண்போன பிறகு எத்தனை மணி நேரத்திற்கெல்லாம் குற்றவாளி அங்கே போனது.

பாப்பு. அரை மணி யிருக்கும்.

பா. சா. இந்த அறை மணியும் நீர் அங்கேயே நின்று பார்த்தீரா.

பாப்பு. இல்லை. சற்று உள்ளே போவேன், மறுபடி வருவேன் வந்த சமயத்தில் பார்ப்பேன்.

பா. சா. அப்போது அவரைத் தவிற வேறு யாராவது போனார்களோ உமக்குத் தெரியாது.

பாப்பு. தெரியாது.

பா. சா. கீழ் கோர்ட்டில் நொங்கு செடி என்று சொன்னீர் பாரும் அந்தச் செடிக்குப் பின்னால் இருந்தாளா முன்னால் இருந்தாளா.

பாப்பு. பின்னால் இருந்தாள்.

பா. சா. அங்கே வேறு ஒருவர் ஒளிந்திருந்தால் உமக்குத் தெரியாதே.

பாப்பு. தெரியாது.

பா. சா. அவ்வளவு தான் க்ருஸ்.

பா. க்ரு. என் சாக்ஷிகள் இவ்வளவுதான்.

கிரீ. குற்றவாளி சாக்ஷி உண்டா. என்ன சொல்லுகிறீர்.

புரு. நான் ஒன்றும் சொல்லக்கூடியதில்லை. சாக்ஷியுமில்லை.

கிரீ. மிஸ்டர் க்ருஷ்ணராவ் கேஸ் விஷயமாய் என்ன சொல்லுகிறீர்கள்.

பா. க்ரு. கனவான்களே. நான் ஆரம்பத்திலேயே சொன்னபடி இந்த கேஸில் நேரில் கொலையை பார்த்த சாக்ஷி இல்லை. ஆகிலும் கொலை செய்கிறவன் ஒருவருமில்லாத சமயம் பார்ப்பானா சாக்ஷிகளை வைத்துக்கொண்டு செய்வானா, யோஜித்துப் பாருங்கள். ஆகையால் இதில் முக்யமாய் கவனிக்கவேண்டியது சந்தேகப்படக்கூடிய அம்சங்கள். சர்க்கார் தரப்பில் விஜாரிக்கப்பட்ட 3 சாக்ஷிகளும் ஏன் பொய் சொல்லவேண்டும். குத்தவாளியின் துப்பாக்கி அங்கே இருப்பானேன். குத்தவாளி அப்பெண்ணைத் தொடர்ந்துவர காரணமென்ன, அவர் சட்டையில் ரத்தமிருப்பானேன். துப்பாக்கியில் அவர் பேர் முதல் எழுத்து இருப்பானேன். இதைக் காட்டிலும் சர்க்கார் தரப்பில் எப்படி த்ருப்திகரமாய் குற்றத்தை ருஜு செய்யக்கூடும். மேலும் குற்றவாளி துப்பாக்கி தன்னுடையதல்லவென்று சொல்லவில்லை. தவிர, தான் குற்றம் செய்யவில்லையென்றும் சொல்லவில்லை.

பா. சா. கோர்ட்டாரவர்கள் கவனிக்கவேண்டும். சர்க்கார் ருஜு செய்யவேண்டியிருக்க என் கக்ஷிக்காரர் குற்றம் செய்யவில்லை என்று சொல்லவில்லை என்றும் சிறந்த புத்திமானான என் சிநேகிதர் இப்படி புத்தி தவறி சொல்வது சரி அல்ல.

பா. க்ரு. சரி அவ்வளவுதான். நான் கேஸைப்பற்றி சொல்லவேண்டியது.

பா. சா. கனவான்களே, என் கக்ஷிக்காரர் திடீரென்று இந்தக் குற்றம் செய்யக்காரணமென்ன. உலகத்தில் எல்லோரும் ஒருவரை ஒருவர் கொலை தான் செய்துகொண்டிருக்கிறார்களா. அடிப்பது கூட காரணமில்லாமல் அடிக்கமாட்டார்களே. அதிலும் கொலை காரணமில்லாமல் நடக்குமா.

சர்க்கார் தரப்பில் குற்றவாளி ஏனிந்தக் குற்றத்தை செய்திருக்கக் கூடுமென்று ருஜுப்படுத்தவில்லை. என் கக்ஷிக்காரர் தானிதைச் செய்தார் என்று சொல்லக் கூடிய சாக்ஷியும் ஒருவருமில்லை. துப்பாக்கியை சற்று பாருங்கள். ஏதோ பேரை அடித்து புதுபேர் எழுதி யிருக்கிறது. ரத்தக்கரை சட்டையில் படுவானேன், சப்பாத்தி பழக் கரைபட்டால் கூட ரத்தக் கரைபோலத் தோன்றும். அந்தப் பெண் அங்கே போன பிறகு வேறு ஒருவரும் போகவில்லை என்ற சாக்ஷியமில்லை. சர்க் கார் தரப்பில் குற்றவாளியின் மீது கேஸ் சந்தேகத்துக் கிடமில்லாமல் ருஜு செய்யவேண்டுமே யொழிய குற்ற வாளி ருஜு செய்ய கடமைப்பட்டவனல்ல. இவ்வளவு தான் என் கேஸுக்கு நான் சொல்லவேண்டியது.

**கிரீ.** (அஸெஸர்களைப் பார்த்து) நீங்கள் என்ன சொல்லுகிறீர்கள்.

**அஸே.** குற்றம் செய்ததாகத் தான் எங்கள் அபிப்பிராயம்.

**கிரீ.** (குற்றவாளியைப் பார்த்து) அய்யா: இது கோரமான குற் றம். சாக்ஷிகள் உமதுபேரில் பொய் சொல்ல காரண மில்லை. குற்றம் ருஜுவாயிருக்கிறது. இது பொய் என்பதற்கு தகுந்த சாக்ஷியம் வந்தாலொழிய நீர் குற்றம் செய்ததாகத் தான் எண்ணக் கூடும். அஸெஸர்களும் நீர் குற்றம் செய்ததாகவே அபிப்ராயப்படுகிறார்கள். ஆகையால்.

**சூரி.** (ஓடிவந்து) நில்லுங்கள், நில்லுங்கள், சாக்ஷிவந்துவிட்டது.

**கிரீ.** என்ன இது.

**பா. சா.** (சூரிய நாராயணன் ஏதோ காதில் சொல்ல) கடவுள் கிருபையால் இந்த கேஸின் உண்மை விளங்கும் பொரு ட்டு நல்ல சமயத்தில் இரண்டு சாக்ஷிகள் எழுத்து மூல மான ஆதாரங்களுடன் வந்திருக்கிறார்கள்.

**கிரீ.** ஆகா: அப்படியா நல்லது மிஸ்டர் க்ருஷ்ண ராவ் ஏன் அந்த சாக்ஷிகளை விஜாரிக்கக் கூடாது.

பா. க்ரு. ஆகா! தடையில்லை. சர்க்காருக்கும் உண்மை விளங்க வேண்டுமென்று கருத்தே பொழிய ஒருவனை தண்டிக்க வேண்டுமென்று வக்கீல் வைக்கிறதில்லை.

கிரீ. மிஸ்டர் சாமினுதய்யர், உங்கள் சாக்ஷிகளைக் கூப்பிடுங்கள்.

பா. சா. சாக்ஷி ஷண்முகன்.

[ஷண்முகன் பெட்டியிலேறிசத்யம் செய்து நிற்கிறுன்].

பா. சா. ஷண்முகா! உன்னிடத்தில் அகப்பட்ட கடிதங்களை எடு, (எடுத்துக் கொடுக்க, க்ளர்க் வாங்குகிறுர்). இதுகள் உனக்கு எப்படி அகப்பட்டன.

ஷண். சாமி இதுகள் என் எஜமான் சந்த்ரசேகரர் தோட்டத்தில் அகப்பட்டன.

பா. சா. இந்த துப்பாக்கி யாருடையது?

ஷண். என் எஜமானனுடையது.

கிரீ. க்ளர்க் அக்கடிதங்களை வாசி பார்ப்போம்.

க்ளர்க். ராமனுக்கு, நமது சினேகிதர்கள் சிலரிடம் நமது பணத்தை அவர்களிடம் கொடுத்து நாகராஜர் வந்து கேட்டால் என் தாக்ஷண்யத்திற்காக கடன் கொடுப்பதுபோல் கொடுக்கச் சொல்லி இருக்கிறேன். நாகராஜாரிடம் பணம் இருப்பதாய்ச் சொல்லி நீ அவர்களிடம் அவரைக் கூட்டிப்போய் ஆதாரம் வாங்கிக்கொண்டு பணம் கொடுக்கச் சொல். நான் ஓர் அவசரமான காரியமாய் போகிறபடியால் நீ இதை கவனிக்கவேண்டும். சந்த்ரசேகரன். (மற்ற கடிதம்) ஸ்ரீமதிக்கு சந்த்ரசேகரன் எழுதியது. வேணி என்கிற பெண்ணை நான் வைத்திருந்தேன். அவள் நானும் நீயும் செய்துகொள்ள இருந்த கலியாணத்தை தடுத்து என்னை அவமானப்படுத்த வந்தபடியால் அவளை நான் துப்பாக்கியால் சுட்டுவிட்டேன். புருஷோத்தமன் அந்த சமயத்தில் தற்செயலாய் வந்தவன். என் குற்றத்தை தான் செய்ததாக உன் பொருட்டு ஏற்றுக்கொண்டான். சந்த்ரசேகரன்.

கிரீ. இந்தக் கையெழுத்து சந்த்ரசேகரருடையதென்று எப்படித் தெரிகிறது.

மாஜி. எனக்குத் தெரியும். என்னிடம் அவர் கடிதம் ஒன்றிருக்கிறது இதோ அந்தக் கடிதம்.

கிரீ. (பார்த்து) ஆகா! சரியாயிருக்கிறது. மாஜிஸ்ட்ரேட் நீர் பெட்டியில் ஏறும்.

மாஜி. (சத்யம் செய்து) எனக்கு சந்த்ரசேகரன் கையெழுத்துத் தெரியும். இந்த இரண்டு கடிதங்களும் அவர் கையெழுத்து தான். இதோ அவர் எழுதின கடிதத்தின் எழுத்தும் அதேமாதிரி தானிருக்கிறது.

கிரீ. சந்த்ரசேகரர் எங்கே?

மாஜி. விஜாரித்ததில் அவர் ஊரிலில்லையாம்.

கிரீ. சரி. இந்தக்குற்றம் அவர் செய்ததாகத்தான் ஏற்படுகிறது.

பா. சா. கோர்ட்டாரவர்களுக்கு சந்த்ரசேகரர் யோக்பதை இன்னும் தெரியவேண்டும் அடுத்தசாக்ஷியை விஜாரிக்கிறேன்.

கிரீ. அடுத்த சாக்ஷி யார்?

பா. சா. தயாகரன்.

தயா. (பெட்டியில் ஏறி சத்தியம் செய்து நிற்கிறான்).

பா. சா. ஓய் இந்த கேஸ் விஷயமாய் உமக்குத்தெரிந்ததை சொல்லும்.

தயா. நான் அந்த வேணியை என்னை கலியாணம் செய்துகொள்ளும்படி கேட்டேன். அவள் சந்த்ரசேகரனைத்தான் கலியாணம் செய்து கொள்வேன் என்றாள். அவள் மீது மோகத்தால் அவள் போனவிடமெல்லாம் அவளுக்குத் தெரியாமல் தொடர்ந்து போனேன். கொலை நடந்த தினத்திலும் போனேன். சந்த்ரசேகரன் அங்கு எதையோ தேடிக்கொண்டு வந்தான் அவள் அவனைக்கண்டு தன்னை கலியாணம் செய்து கொள்ளாமல் போனால் ஒரு உயிலைக்காட்டி அதைக் கொண்டு அவனை அவமானப்படுத்துவதாகச் சொன்னாள். அவன் வீட்டிற்குபோய் பணத்துடன் வந்து அவளை எங்கேயாவது கூட்டிப்போய் கலியாணம் செய்வதாய்ச் சொல்லி போய் துப்பாக்கி எடுத்துவந்து சுட்டு

விட்டான். நான் சப்தம் கேட்டதும் போய் பார்ப்பதற்குள் அவள் பிராணன் போய்விட்டது. உடனே அவள் கையிலிருந்த உயிலை அவன் வேறுபுறம் பார்த்து திகைத்து விசனத்திலிருந்தபோது மெள்ள எடுத்துக்கொண்டு ஒளிந்து கொண்டேன். பிறகு இவர் வந்தார். இவரிந்தக் குற்றத்தைத் தான் ஏற்றுக்கொள்வதாயும் தான் காதல் கொண்ட ஸ்ரீமதியை சந்த்ரசேகரன் மணந்து அவள் தகப்பன் பட்டகடனை தீர்க்கும்பொருட்டு அவன் உயிருடனிருக்க வேண்டுமென்று சொல்லி, சந்த்ரசேகரனை அனுப்பிவிட்டார். பிறகு துப்பாக்கியை எடுத்து வேறு பேர் எழுதினார். பிறகு போலீஸ்காரர் வந்தார்.

கிரீ. எங்கே அந்த உயில்.

தயா. இதோ. (கொடுக்கிறான்).

[கிரீசய்யர் க்ளர்க்கை முக்யமான பாகத்தை வாசிக்கச் சொல்லுகிறார்].

க்ளர்க். (வாசிக்கிறார்) என் சொத்து முழுவதும் புருஷோத்தமன் அடையவேண்டும் இதற்குமுன் சந்த்ரசேகரனுக்கு எழுதி வைத்த உயிலை இதனால் ரத்து செய்திருக்கிறேன். சந்த்ரசேகரனுக்கு என் கந்தல் துணியை வைத்திருக்கிறேன். அதனால் அவன் சொத்துப்போகும் விசனத்தால் வரும் கண்ணீரைத்துடைத்துக் கொள்ளட்டும். (எல்லோரும் சிரிக்கிறார்கள்).

ஜட்ஜ் கிரீ. அஸெஸர்களே இந்த சாக்ஷிகளை கேட்டீர்களே. இப்போது என்ன சொல்லுகிறீர்கள்.

அஸெ. இந்தக்குற்றம் செய்தது சந்த்ரசேகரன். புருஷோத்தமன், குற்றம் செய்தவரல்ல அவர் ஸ்ரீமதிக்காக இப்படி ஒப்புக் கொண்டது வெகு ஆச்சரியமே.

கிரீ. புருஷோத்தமரே! புருஷோத்தமனென்றால் நீர்தான் உம்மை விடுதலை செய்யப்பட்டிருக்கிறது. (எல்லோரும் கை கொட்டுகிறார்கள்).

(ஸ்ரீ. சந்தோஷத்தால்) சகி! என்னடி சொல்லுகிறார்கள்.

சுந். உன் புருஷோத்தமர் ஜெயித்தாரென்று சொல்லுகிறார்கள்.

ஸ்ரீ. (சந்தோஷத்தில் அவளைக் கட்டிக்கொள்ள) என்னை ஏண்டி கட்டிக்கொள்ளுகிறே சீக்கிரம் அவர் வருவார் கட்டிக் கொள்.

கிரீ. புருஷோத்தமரே! உமது கீர்த்தி உலகமெல்லாம் பரவும். இப்படி யார் பெண்மீது உண்மையான காதலுக்கு கட்டு பட்டு கொலையைக்கூட தான் செய்ததாக ஏற்றுக்கொள் வார்கள். இந்த உயிலினால் சுந்தர ராஜர் சொத்து உம்மு டையதென்று ஏற்படுகிறது. சந்த்ரசேகரன் அதை அக் ரமமாய் அடைந்திருக்கிறான். இனி அவனை தண்டிக்க வேண்டும். வாரும் இப்படி என்னோடு உட்காரும். (ஷேக்ஹேண்டு கொடுத்து பக்கத்தில் உட்காரவைக்கிறார்).

புரு. அய்யா! என் சிறமம் பெரிதல்ல, தன் தேகத்தில் இருந்த ஜுரத்தைப் பாராமல் ஜயிலில் என்னைப்பார்த்து குற் றத்தை ஒப்புக் கொள்ளாமலிருக்கும்படி செய்த ஸ்ரீமதி யின் சிறமம் இதைவிட பெரிது. எல்லாவற்றிற்கும் மேல் இந்த உத்தமனான சூரியநாராயணன் இந்த கேஸில் அலை ந்து உண்மையை கண்டுபிடிப்பதில் இவன்பட்ட சிறமம் சொல்லிமுடியாது. அவன் எனக்குப் பதிலாய் இங்கே இருக்கவேண்டும். (கிரீ. சூரியநாராயணனுக்கு ஷேக் ஹேண்டு கொடுத்து அவனையும் பக்கத்தில் உட்கார வைத்துக்கொள்ள எல்லோரும் கை கொட்டுகிறார்கள்).

---

## அங்கம் 5—காட்சி 5.

### சூரியநாராயணன் வீடு.



[புருஷோத்தமன் சூரியநாராயணன் வருகிறார்கள்].

புரு. சினேகிதா! சினேகிதன் இருந்தால் இம்மாதிரியல்லவா இரு க்க வேண்டும்.

சூரி. இல்லை. சினேகிதனிருந்தால் உன்மாதிரி இருக்கவேண் டும். நிஜத்தை மறைத்து சினேகிதனை அலையவைத்து நம்பின பெண்ணை கஷ்டத்தில் கொண்டுவந்துவிட்டு ஒரு

வார்த்தையில் முடிக்கக்கூடிய சமாச்சாரத்தை செஷன்ஸ் கோர்ட்டு வரையில் போகும்படி செய்தாயே. இப்படித் தானிருக்கவேண்டும். உலகத்தில் பேர் வாங்குகிற வழி உனக்குத்தெரிந்திருக்கிறது.

புரு. ஆம் பிறர் சிலவின்பேரில், சிநேகிதா: நீ என்னை விடுதலை செய்ததுமல்லாமல் எனக்கு சொத்து ஏராளமாய் சம்பாதித்துக் கொடுத்திருக்கிறாயே. இந்த நன்றிக்கு பிரதி நானென்ன செய்கிறது.

சூரி. இன்னொரு கொலை கேஸில் அகப்பட்டுக்கொள்ளுகிறது.

புரு. நீ என்ன இப்படி கேலி செய்கிறாயே நான் செய்ததில் என்ன தவறு. நீ என் நிலைமையிலிருந்தால் எப்படி செய்வாய், ஸ்ரீமதி தகப்பனை இழந்தால் அவள் உயிர் வைத்திருப்பாளா. அவளால் நானும் உயிர் விடவேண்டியவன் தானே.

சூரி. ஏன் அதை ஸ்ரீமதிக்கு சொல்லக் கூடாதோ. நீ உயிர் விட்டால் அவளும் உயிர் விடுவாள். அதைப் பார்த்து அவள் தகப்பனும் உயிர் துறப்பார் என்று சொல்லக் கூடாதோ. இருந்தபோதிலும் நீ ஒருவரையும் யோஜனை கேளாமல் இப்படி செய்தது சுத்த பிசகு.

புரு. அப்படி இல்லை ஸ்ரீமதி தன் தகப்பனை காப்பாற்றும் பொருட்டு அவனை கலியாணம் செய்துகொள்ள வேண்டியது அவசியமென்று எனக்குத் தோன்றிற்று நானும் அவளை அந்தப்படி செய்யச் சொன்னேன். பிறகு அவள் வாக்கு தவறக்கூடாதென்று சந்த்ரசேகரனைக் காப்பாற்றினேன்.

[ப்ரதாபசிங் வருகிறார்.]

சூரி. சிங். வா இப்படி. நீ பிடித்த காரியத்தை நிறைவேற்றி விட்டாய். சிநேகிதா இந்த கேஸில் முக்யமாய் உனக்காக தேக சிரமத்தை சிறிதும் பாராமல் உழைத்தவர் இவர். இவர் பேர் ப்ரதாபசிங் பேருக்குத் தகுந்த குணமுடையவர். இவருக்குத்தான் நீ நன்றி பாராட்டவேண்டும்.

புரு. அய்யா! வரவேண்டும். தாங்கள் செய்த உபகாரத்துக்கு பிரதி உபகாரம் செய்து என்னால் முடியாது. தங்கள் சிநேகம் எனக்குக் கிடைத்தது என் அதிர்ஷ்டம்.

சிங். அய்யா ! முதல் அதிர்ஷ்டம், உங்களுக்கு சூர்ய நாராயணன் சிநேகம் கிடைத்தது. இதுவரையில் அவர் தூங்கவில்லே. அதிருக்கட்டும் சந்த்ரசேகரனைக் கண்டு பிடித்து இனி அவனுக்குத் தகுந்த தண்டனை விதிக்கவேண்டாமா.

புரு. அய்யா ! இதென்ன தாங்கள் போலீஸ் டிபார்ட்மெண்டாதலால் இப்படி பேசுகிறீர்கள். அவரை தண்டிப்பதில் என்ன ப்ரயோஜனம் நாம் அடைந்த கஷ்டம் அதனால் தீர்ந்து விடுகிறதா அவர் செய்த தீங்குக்கு அவரை தண்டிக்கவேண்டியவர் பகவான் ஒருவரே. நாம் யார் அவரை தண்டிக்க.

சிங். நீங்கள் அப்படி சொல்லலாகாது. அவரை தண்டிக்காமல் நாம் விடக்கூடாது.

ராம. (திடீரென்று வந்து) அவரை தண்டித்தாகிவிட்டது.

சூரி. ராமா ! உன்னைத் தான் இப்போது நினைத்தேன். நீயே வந்துவிட்டாய் அவனை விசாரிக்கவில்லேயே அதற்குள் தண்டிக்கவாவது.

ராம. அவன் விஜாரணையாகி தண்டிக்கிற வரையில் பொறுக்கவில்லே. இந்த சமாச்சாரமெல்லாம் கேட்டவுடனே துப்பாக்கியால் தன்னையே சுட்டுக்கொண்டு பிராணனை விட்டுவிட்டான்.

புரு. அய்யோ ! நான் அவனைக்கண்டு அவனுக்கு தைரியம் சொல்லி கூட்டி வரலாமென்றிருந்தேனே. அவனுக்கு இந்த சொத்தில் பாதி கொடுக்கலாமென்று இருந்தேனே.

சூரி. அய்யோ ! உயிலே ஒளித்ததற்கு அந்த உயிலில் கண்டபடி அவன் சித்தப்பா கந்தல் துணியை தேடி எடுத்து அவன் கண்ணை துடைக்கலாமென்று பார்த்தேனே. போய் விட்டானே. அவனுமிருந்து நீ அவனுக்கு பாதி சொத்து கொடுத்தால் உயிலில் கண்டபடி கந்தல்துணியால் அவன் முகத்தை துடைக்கவில்லே யென்றல்லவா நான் வியாஜ்யம் உன் பேரில் செய்வேன். அதிருக்கட்டும் அவன் எப்படி உயிலே ஒளிக்க முடிந்தது.

புரு. எனக்கும் ஆச்சரியமாய்த் தானிருக்கிறது.

[நாகராஜய்யர் ஸ்ரீமதி வருகிறார்கள்].

வாருங்கள் நாகராஜரே! ஸ்ரீமதியின் உடம்பு சௌக்யமா?

ஸ்ரீ. யோகக்ஷேமம் விஜாரிக்கிறது வெகு அழகாயிருக்கிறது சற்று நேரம் சூரியநாராயணய்யர் வராதிருந்தால் உங்கள் தண்டனையை கேழ்க்கிறவர்கள் என் மரணத்தையும் கேட்டிருப்பார்கள்.

நாக. ஸ்ரீமதி புருஷோத்தமனிடம் காதலினால் நீ இவ்வளவு அன்பு காட்டினாய் என்று இதுவரையில் எனக்குத் தெரியவில்லையே.

ஸ்ரீ. அப்பா! இனி சொல்லத்தடையென்ன உங்கள் கவலையை நீக்கும்பொருட்டே அந்தப்பாவியை கலியாணம் செய்து கொள்ள சம்மதித்தேன். ராமன் நல்லவேளையாய் அவன் இறந்து போனதாய் சமாச்சாரம் கொண்டுவந்தபடியால் இனி சொல்லலாம். அவன் என்னை அடிக்கடி கேட்டும் நான் சம்மதிக்காததைக்கண்டு இப்படி மோசம் செய்திருக்கிறான்.

நாக. ஸ்ரீமதி ஒரு வார்த்தை அவனிடம் உனக்கு காதலில்லையென்று சொல்லியிருந்தால் அவனை சினேகம் செய்யவே மாட்டேனே. இந்த ஆபத்து வராதே. என்னிடம் சொல்லாமலே இப்படி செய்துவிட்டாயே.

புரு. நல்லது. நமது சினேகிதன் இதெல்லாம் எப்படி கண்டு பிடித்தான். அதை கேழ்ப்போம். அவன் சொல்லட்டும்.

சூரி. அது கிடக்கிறது சந்த்ரசேகரன் உயிலை எப்படி ஒளித்தான் அதைச்சொல்.

புரு. என் சிறிய தகப்பனார் சாகும் சமயத்தில் எழுந்திருந்து சந்த்ரசேகரனை முழித்துப் பார்த்து வைதுவிட்டு பிறகு பிராணனை விட்டார். அவன் அவர் பக்கத்திலேயே இருந்து உபசாரம் செய்தான். நான் அவர் பக்கம் போவதே இல்லை. ஆகையால் அவர் என்னை விரோதித்துக் கொண்டு அவனிடம் பிரியமாயிருந்தார். அப்போது

உயில் அவனுக்கு எழுதிவைத்தார். பிறகு என்பேரில் பிரியம் ஏற்பட்டு எனக்கு உயில் எழுதிவைத்து சொல்லி யனுப்பினார். அவர் எனக்கு அவசரமாய் சொல்லியனுப்ப சொன்னபடி சொல்லியனுப்பாமல் அவர் நான் வந்துவிட்டதாக நம்பி பேசின சமாச்சாரத்தை தெரிந்து என் குறல் போல் அவருக்குக் காட்டி திறவுகோல் வாங்கி உயிலை மாற்றி இருக்கிறான். அவர் சாகும்போது ஏதோ இரண்டு உயில், இரண்டு உயில் என்றும் ஒன்றைக் கொளுத்திவிடு கொளுத்திவிடு என்றும் சொன்னார். அவன் அவரை பித ற்றுகிறார் என்றான். அவர் இவனை வைததையும் என்மீது அவர் ப்ரியமாயிருந்ததையும் பார்த்து எனக்கும் சந்தேக மாயிருந்தது அப்போது இருந்தவர்கள் எல்லோருக்கும், சந்த்ரசேகரன்மீது சந்தேகம் தான். எனக்கு அதன் உண் மையெல்லாம் இப்போதுதான் தெரிகிறது. இந்த பாபி இப்படி செய்வானென்று நான் நினைக்கவேயில்லை.

சிங். நல்லதய்யா: நான் இனி போய் வருகிறேன். இனி என் காரியத்தை பார்க்கவேண்டாமா?

புரு. அய்யா! தாங்கள் செய்த உதவிக்கு என் ஞாபகமிருக்கும் பொருட்டு நான் அனுப்பப் போகிற தங்கமெடலை அங் கீகரிக்கவேண்டும்.

சிங். அப்படியே செய்கிறேன் (போகிறார்கள்).

---

## அங்கம் 5—காட்சி 6.

நாகராஜய்யர் வீட்டு அறை.

[புருஷோத்தமன் சூரிய நாராணன் வருகிறார்கள்.]

புரு. சிநேகிதா! நீ என் ரகசியத்தையெல்லாம் எப்படி கண்டு பிடித்தாய் அதை சொல் பார்ப்போம்.

சூரி. ஆகா! சொல்லுகிறேன், ஆனால் ஸ்ரீமதியையும் நாகராஜ ரையும் வைத்துக்கொண்டு சொல்லுகிறேன். அவர் களும் கேழ்க்கவேண்டும்.

புரு. சிநேகிதா : நாகராஜர் கடனை நான் அடைக்கவேண்டாமா?

சூரி. சிநேகிதா : உனக்கு என்ன இன்னும் கனவோ சந்த்ர சேகரன், நாகராஜர் பணத்தை என்ன செய்தான். அது அப்படியே வேறு பாங்கில் சந்த்ரசேகரன் பேரிலிருக்கிறது. கடன் என்று கொடுத்ததெல்லாம் உன் பணம் தான். கோர்ட்டில் ராமனுக்கு அவன் எழுதின காகிதத்தை வாசித்தார்களே. நீ கவனிக்கவில்லையோ அந்தப் பணமும் சேர்ந்து பாங்கிலிருக்கிறது.

[ஸ்ரீமதி, சுந்தரி, நாகராஜர் வருகிறார்கள்.]

நல்லது, சிநேகிதா ! ஸ்ரீமதியும் நாகராஜரும் வந்துவிட்டார்கள் உட்காருங்கள் (உட்காருகிறார்கள்) இனி என் கதையை சொல்லுகிறேன் கேளுங்கள் நாகராஜரைப் பார்க்கும் வரையில் எனக்கு சந்த்ரசேகரன் மீது சந்தேகமாயிருந்தது. நாகராஜர், சந்த்ரசேகரன் பாங்கில் போடவும் கடன் வாங்கிக் கொடுக்கவும் ஒத்தாசை செய்தாரென்றும் தானே ஸ்ரீமதி தன்னை கலியாணம் செய்து கொண்டால் கடனை தீர்ப்பதாகச் சொன்னதாகவும் சொன்னவுடனே இதெல்லாம் சந்த்ரசேகரன் வேலையென்று நிச்சயித்துக்கொண்டேன். சந்த்ரசேகரன் நடவடிக்கைகள் தெரியராமனையும், ஷண்முகனையும் வெகு சிறமப்பட்டு கண்டு பிடித்தேன். ஷண்முகனுக்கு சந்த்ரசேகரன் மீது கோபம் அதிகமாக இருப்பதாகத் தெரிந்தது அவனுக்கு பணம் கொடுத்து சிநேகம் செய்து அவனிடம் இருந்த கடிதங்களை வாங்கிக்கொண்டேன்.

புரு. ஸ்ரீமதி எனக்கு இப்போது தான் ஞாபகம் வருகிறது சந்த்ர சேகரன் தானே இக்கொலை செய்ததாக எழுதிய கடிதம் கோர்ட்டில் வாசித்தார்களே. அதோடு நான் உனக்கு அவன் எழுதின கடிதம் ஒன்று அனுப்பச் சொன்னேனே.

ஸ்ரீ. ஆம் ! அனுப்பினேன் அதில் தான் நீங்கள் கொலை செய்ததைத் தான் நேரில் பார்த்ததால் இங்கே இருந்தால் உங்களுக்கு விரோதமாய் சாக்ஷி சொல்லவேண்டி வருமென்று வெளி

தேசம் போவதாய் எழுதினரே. அது தானே.

புரு. என்ன : என்ன : நான் கூலே செய்ததை அவன் பார்த்தானு. அப்படி எழுதினனு என்ன.

ஸ்ரீ. இதோ பாருங்கள் கடிதத்தை (கொடுக்கிருள்).

புரு. (அதைப் பார்த்து) அடே பாபி இந்தக் கடிதத்தையும் மறைத்து வேறு கடிதம் எழுதியிருக்கிருனே.

சூரி. இப்போது அவன் யமனேக்கூட ஏமாற்றிவிட்டு இங்கே தப்பித்துக்கொண்டு வந்து ஸ்ரீமதியை கலியாணம் செய்துகொள்ள யோஜித்துக்கொண்டிருப்பான்.

ஸ்ரீ. (திகிலடைந்து) அய்யோ : அவன் பிழைத்துவந்தால் என்ன செய்கிறதென்று கூட எனக்கு பயமாயிருக்கிறது.

சூரி. பாவம்! ஸ்ரீமதி அவன் பேரை கேழ்க்கும்போதே நடுங்குகிருள். பிறகு ஸ்ரீமதி சமாச்சாரங்களே கேளுங்கள் அந்த வேணியின் மீது ஆசைவைத்த தயாகரனே சிங் விசாரித்துக்கொண்டு வந்தான். அவனேத் தேடிப் பிடிப்பது வெகு கஷ்டமாயிருந்ததாம். அவனுக்கும் பணத்தாசை அதிகமாயிருந்தது. அவனுக்கு அவன் இஷ்டம் போல் பணம் கொடுத்தேன். அவன் பிறகு உயிலேக் காண்பித்து தான் கண்ட சங்கதிகளேச் சொன்னுன். உடனே அவர்களுக்கெல்லாம் மறுபடி பணம் கொடுத்து இங்கே கூட்டிவருவதற்குள் விஜாரணை ஆகிவிட்டது. சிலர் விஜாரணை முடிவான பிறகு இதையெல்லாம் கேழ்க்கமாட்டார்கள் என்ருர்கள். நான் வந்தது வரட்டுமென்று என்னேயும் கவனிக்காமல் கூட்டத்தில் உட்கார்ந்திருந்தவர்கள் தலே மீது கூட கால் வைத்து ஓடிவந்தேன். இந்த சேவுகப்பயல் விடுகிருனு. அவன் வழி மறித்தான். அவனுக்கு பணம் கொடுத்தேன். மற்ற சமாச்சாரங்கள் புருஷோத்தமனேத் தவிர மற்றவர்களுக்குத் தெரியும்.

புரு. ஏன் எனக்குத் தெரியாமலென்ன.

சூரி. நீ அங்கே நடந்த விஜாரணை எதை கவனித்தாய். உனக்கு அநுகூலமான கடிதங்கள் வாசிக்கும்போது கூட உனக்கு தூக்குமேடை ஞாபகம் தானே.

புரு. சிநேகிதா ? என்றால் உனக்கு சிறமம் தவிற பணச் சிலவும் ஏராளமாய் ஆகி இருக்கிறது. உன் சிலவுக்கெல்லாம் பாங்கிலிருக்கும் என் பணத்தை நீ எடுத்துக்கொள்ள வேண்டும்.

சூரி. சிநேகிதா ! நான் செய்த உபகாரமெல்லாம் உன் சொத்து பூருவும் உத்தேசித்து தான் செய்தேன். இப்படி அறை குறையாய் கொடுத்தால் நான் வாங்குவேனா.

புரு. நானே உன் சொத்தல்லவா.

சூரி. ஸ்ரீமதி கோபிக்கப் போகிறாள். இனி அப்படி சொல்லாதே.

ஸ்ரீ. (சிறித்துக்கொண்டு) நீங்கள் சொல்லுவது எனக்கு அர்த்த மாகவில்லையே

சூரி. இதோ அர்த்தமாகும்படி செய்கிறேன் பார், நாகராஜரே, சுந்தரி நீங்கள் வாருங்கள், வேறு ஒருவேலை இன்னும் பாக்கியிருக்கிறது. [நாக, சூரி, சுந்தரி போகிறார்கள்.]

[புரு. பறபறப்புடன் ஸ்ரீமதியை கட்டிக்கொள்ள வருகிறார்.]

ஸ்ரீ. (எட்டிப்போய்) அய்யா : அங்கேயே இருங்கள் டங்கத்தில் வர வேண்டாம்.

புரு. என்ன ஸ்ரீமதி அய்யாவாவது அப்பாவாவது இதெல்லாம் என்ன சந்த்ரசேகரனோடு உன் ஒப்பந்தம் தீர்ந்தது இனி பழய ஒப்பந்தம் தான் நிலேத்துவிட்டது வா இப்படி.

ஸ்ரீ. (எட்டிப்போய்) நான் ஏழை புருஷோத்தமனை கலியாணம் செய்துகொள்ள சம்மதித்தேனே யொழிய பணக்கார புருஷோத்தமனை கலியாணம் செய்துகொள்வதாய் சம் மதிக்கவில்லை.

புரு. ஸ்ரீமதி இதை நானல்லவா சொல்லி உன் மீது கோபித்துக் கொள்ளவேண்டும். நீ தான் ஏழை புருஷோத்தமனெ ன்று என்னைத் தள்ளிவிட்டு பணக்கார சந்த்ரசேகரனை கலியாணம் செய்துகொள்ள சம்மதித்தாய்.

ஸ்ரீ. அது உங்கள் நிர்ப்பந்தத்தால் தானே நான் உங்கள் உத்திர வின் பேரில் செய்தேன். பணக்கார புருஷோத்தமனுக்கும்

ஏழை ஸ்ரீமதிக்கும் எப்படி கலியாணம் நடக்கக்கூடும்.

புரு. (ஓடிவந்து அவளை கட்டிக்கொண்டு) ஓகோ அப்படி சொல். இனி நீ ஏழை அல்ல உன்னை நான் விடமாட்டேன். நீயும் பணக்கார ஸ்ரீமதி தான் (அவளை முத்தமிட்டு) கண்ணே உன் தகப்பன் பணமெல்லாம் அப்படியே சந்த்ரசேகரன் பேரில் வேறு பாங்கிலிருக்கிறது. இதற்கு சாக்ஷி சூரிய நாராயணன் (சூரிய நாராயணன் வருகிறான்).

சூரி. ஓகோ : என்ன இதற்குள் சண்டையாகி சாக்ஷி கூப்பிடும் வரையில் வந்துவிட்டதா.

புரு. சினேகிதா ! ஸ்ரீமதி பணக்காரியா ! ஏழையா!

சூரி. உன்னைவிட பணம் அதிகமாயிருக்கிறது அவளுக்கு.

புரு. அப்படியானால் ஸ்ரீமதி நீ என்னைவிடப் பணக்காரி. நான் உன்னை கலியாணம் செய்துகொள்ளமாட்டேன்.

ஸ்ரீ. அதிக பணத்தை தானம் செய்துவிடுகிறேன். அப்புறம் என்ன செய்வீர்கள்.

புரு. அப்படி ஏதாவது நீ செய்துவிடாதே. முன்னால் என் கடனைக் கொடு. சினேகிதா ! சந்த்ரசேகரர் கொடுத்த பணமெல்லாம் என் சொத்திலிருந்துதானே கொடுத்திருக்கிறார். (நாகராஜர், சுந்தரி வருகிறார்கள்). நீ தான் அந்தக் கடனை கொடுக்கவேண்டும். கடனை கொடுத்தால் தான் உன்னை கலியாணம் செய்துகொள்வேன்.

நாக. நல்லவேளை இந்த சந்தேகத்தைத் தான் தீர்த்துக்கொள்ள இங்கே வந்தேன். அந்தப் பணம் புருஷோத்தமருடையதா.

சூரி. புருஷோத்தமா ஸ்ரீமதி நீங்கள் இது விஷயமாய் கவலைப் படவேண்டாம். பகவான் கணக்காய் வைத்திருக்கிறார். சந்த்ரசேகரன் வாங்கிக் கொடுத்த கடன் துகை அப்படியே பாங்கிலிருக்கிறது. அதை ஸ்ரீமதி புருஷோத்தமனுக்கு கொடுத்தால் இருவருக்கும் சொத்து சமமாகிவிட்டது. (ஸ்ரீமதி ஓடிப்போய் புருஷோத்தமனைக் கட்டிக் கொண்டு சந்தோஷமாய் நிற்கிறாள்.)

ான சுந்தரி உன் முகமென்ன அதிக சந்தோஷத்தைக காட்டுகிறதே. சங்கதி என்ன.

சூரி. ஸ்ரீமதி நான் வெகு காலமாய் உன் மீது வைத்திருந்த காதல் உன் பக்கத்திலேயே இருந்து உன் அழகையும் குணத்தையும் அடைந்த சுந்தரியின் மீது சென்று அவளும் என்னை கலியாணம் செய்துகொள்ள சம்மதித்துவிட்டாள்.

புரு. சிநேகிதா! எங்கே என்னைப் பார். ஸ்ரீமதியைத்தவிர வேறு பெண்ணை கலியாணம் செய்துகொள்வதில்லையென்று கோபித்து காசி யாத்திரை போனவன் நீ தானே சுந்தரியை கலியாணம் செய்வதற்கு, யதார்த்தமாய் காசி யாத்திரைபோய் வந்தாயோ? சிநேகிதா? பகவான் செயலை நான் என்ன சொல்லுகிறது. உன் மனக்குறை நீங்காமல் நான் ஸ்ரீமதியை கலியாணம் செய்துகொள்வதா என்றும் யோஜனை இப்போது தான் செய்தேன். உடனே பகவான் நமது சுந்தரியையே நீ கலியாணம் செய்து கொள்ளும்படி அனுக்ரகம் செய்தார்.

நாக. இனி தாமதம் செய்வானேன். இரண்டு கலியாணமும் சேர்ந்து நடக்கட்டும். ஸ்ரீமதி இந்த மாலையை புருஷோத்தமனுக்கு போடு, சுந்தரி நீ இந்த மாலையை சூரிய நாராயணனுக்குப் போடு. ஸ்ரீமதி புருஷோத்தமன், சுந்தரி, சூரிய நாராயணன் எல்லோரும் ஆகாசத்திலிருக்கும் சூரியன்போல் எப்போதும் பிரகாசித்துக் கொண்டு விளங்குவார்களாக.

(மாலை மாற்றிக்கொள்கிறார்கள்)

சகல வாத்யம் வாசிக்கப்படுகிறது.



மங்களம்.

# பிழை திருத்தம்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம். |
|---|---|---|---|
| 25 | 13 | அவளே ... | அவனை |
| 27 | 21 | என் ... | உன் |
| 34 | 17 | ருஜ- ... | ராஜ- |
| 35 | 26 | போகிறூர்) ... | போகிறூர் |
| 39 | 20 | சுந்த்ர ... | சுந்தர |
| 40 | 18 | டைரக்டர்கள், ... | டைரக்டர்கள் |
| 43 | 30 | பெணணை ... | பெணணை |
| 50 | 25 | குணிநதே ... | குனிந்தே |
| 55 | 18 | எள் ... | ஏன் |
| 57 | 17 | ( ) இதற்குள்ளிருக்கும் வரிகள் கீழே போகவேண்டும் | [ ] இதற்குள்ளிருக்கும் வரிகள் இங்கே வரவேண்டும் |
| 57 | 25 | திருந தும் ... | திருந் து |
| 60 | 7 | ஒன் றும் ... | ஒன் று |
| 79 | 5 | ... | கடனை என்பதன் முன் ராம என்பதை சேர்க்கவும் |
| 79 | 9 | ராம ... | ராம என்பதை அடிக்கவும |
| 80 | 3 | வே-ஒ ... | வே-க |
| 81 | 16 | தங்கள ... | தாங்கள் |
| 95 | 13 | தாம் ... | தான் |
| 101 | 10 | உன்ன ... | என்ன |
| 118 | 4 | ... | அவரை என்பதின் பிறகு கட்டி என்பதைசேர்க்கவும் |
| 127 | 6 | ... | 3-வது ஹஸேஸன், என்பதின் முன் இந்த (அடையாளத்தை சேர்க்கவும |
| 127 | 6 | (மிலிடரி ... | மிலிடரி |
| 128 | 31 | வதவத்தின் ... | தைவத்தின் |
| 135 | 26 | யென்று ... | யென் று |
| 138 | 26 | சாக்ஷியு ... | சாக்ஷிய |
| 143 | 19 | ராஜாரிடம் ... | ராஜரிடம் |
| 146 | 1 | ... | ஸ்ரீ என்பதன்முன் இந்த ( அடையாளம் சேர்க்கவும் |
| 146 | 1 | (சந்தோஷ ... | சந்தோஷ |